MAGGI
Tomato Ketchup

புதிய

# மேகி டொமேடோ கெச்சப்

## தூய்மையானத் தக்காளிச்சுவை

உணவுப் பொருள்களுக்கு உயிரூட்டவே வருகிறது !

அதுவே உலகப் பிரசித்தமான மேகியின் தக்காளிக் கெச்சப் !

ஈர்த்திழுக்கும் தக்காளிச் சுவை. மிகச் சுத்தமானது. செறிவானது. மற்றும் பசுமையானது. மேகியின் மிக சேர்த்தியான இந்தக் கலவை உணவுப் பொருள்களுக்கு உயிரூட்டும்.

கெச்சப் வகைகளிலேயே அலாதியான ருசி கொண்டது ! குடும்பத்தில் அனைவருக்-ும் களிப்பூட்டும் இதைச் சேர்த்துக்கொள்ளுங்கள்-ஸேண்ட்விச், முட்டைகள், சமோசா, இட்லி, தோசை அல்லது பக்கோடா...இவைக்கு மேகியின் சுவை மிகக கெச்சப் இன்னும் ருசிகூட்டும் !

உணவுவகைகளை நீங்கள் இன்னும் காரசாரமாக விரும்பினால், மேகியின் ஹாட் அண்ட் ஸ்வீட் டொமேடோ சில்லி ஸாஸை ஒரு கை பாருங்கள் ! மிளகாய் கலந்த தக்காளியின் தயாரிப்பு நாவை கிளர்ச்சி யூட்டும் சுவையை அனுபவியுங்கள் !

மேகியின் மின் டொமேடோ கெச்சப் மற்றும் மேகியின் ஹாட் அண்ட ஸ்வீட் டொமேடோ சில்லி ஸாஸ்.

ருசி பார்க்கத் தூண்டும் இரண்டு அருமையான ஸாஸ் வகைகள் !

உணவுப் பொருள்களின் ருசியைத் தட்டியெழுப்பி உயிரூட்டும் இரண்டு ஸாஸ் வகைகள் !

மேகி®
ஸாஸ்

மேம்படுத்தும் சுவையைச் சேர்ப்பீர்
இணைந்துவரும் ருசியை ரசிப்பீர் !



# பத்திரிகையிலே

பெண்களை அடிமையாக நடத்துகிறார்கள் பல வீடுகளில்.

கொஞ்ச காலமாக அவளுடைய கஷ்டங்களைப் புரிந்து கொண்டு அவளுடைய சிரமங்களை (சிலர் மட்டுமே!) பகிர்ந்து கொள்கிறார்கள்.

மிகவும் முற்போக்கு எண்ணம் கொண்ட ஆண்கள் சிலர், பெண்களின் சகலவிதமான முன்னேற்றங்களுக்கும் ஒத்துழைக்கிறார்கள்.

இப்படிப்பட்ட நிலையில் தற்காலப் பெண்களைப் பற்றி ஆண்கள் என்ன நினைக்கிறார்கள் — சிலரைக் கேட்



ரிக்வேத சங்கர சாஸ்திரிகள்

"பெண்களுக்கு தாய்மை ஸ்தானம் கொடுத்து, அந்தக் காலம் தொட்டே மதிப்பு கொடுத்து வரும் பூமி நம்முடைய பூமி. பெண்களைச் சக்தி வடிவமாகவே நம்முடைய வேதங்களும், இதிகாச புராணங்களும் பார்க்கின்றன. சக்தியில்லாமல் சிவன் இல்லை. சிவன் இல்லாமல் சக்தியில்லை. இதை உணர்த்தத்தான் அர்த்தநாரீஸ்வரர் கோலம். பெண்களோடு சகல விதத்திலும் ஒத்துப் போக வேண்டும் என்பதை சிவபெருமானே நமக்கு எடுத்துக் காட்டுகின்றார்.

குடும்ப வாழ்க்கையில் ஆணும் பெண்ணும் சேர்ந்து ஒத்த கருத்து உடையவர்களாகத் திகழ்ந்தால்தான் அந்தக் குடும்பம் சிறக்கும். ஆணுக்குப் பெண் அடிமை என்று நினைத்தால் குடும்பம் கலகலத்துப் போகும்.

நம்முடைய கல்யாண மந்திரங்கள் கூட ஆண், பெண் உறவு எப்படி இருக்க வேண்டும் என்பதை அழகாகச் சொல்கின்றன. 'சப்தபதி' என்னும் நிகழ்ச்சி நம் திருமண வைபவங்களில் உண்டு. மணமகளின் காலை தன் கையால் பிடித்து மணமகன் ஏழு அடி எடுத்து வைக்கிறான்.

ஏழு அடிகளை வைத்த நீ எனக்குத் தோழி. நான் சாமவேதமாக இருக்கிறேன். நீ ருக் வேதமாக இருந்து இல்லறத்தைச் சிறப்பிப்பாய். நான் மேல் உலகமாக இருக்கிறேன். நீ பூமியாக இருந்து என்னோடு சகல விதத்திலும் ஒத்துப் போவாயாக! நாம் அன்புள்ளவர்களாகவும், ஒருவரை ஒருவர் நேசிப்பவர்களாகவும் எந்நாளும் இருப்போம்—

இந்த மந்திரங்களின் மூலம் குடும்பத்தில் கணவன் மனைவி இருவருக்குமே சம அந்தஸ்து கொடுக்கப்படுவதை நாம் அறிகிறோம்.

எனவே புராண இதிகாசங்களே பெண்ணுக்குக் கொடுக்க வேண்டிய இடத்தைச் சொன்ன பிறகு நான் என்ன தனியாகச் சொல்ல?"



கவிஞர் முருகதாசன்

"பொதுவாக பெண்கள் என்றாலே எனக்கு அலர்ஜி. இன்று சமுதாயம் பலவிதத்திலும் சீரழிந்து வருகிறது என்றால் அதற்குக் காரணமே பெண்கள்தான். ஆண்கள் ஒருவருக்கு ஒருவர் விட்டுக் கொடுக்கக் கூடிய மனப்பான்மையை கொண்டவர்கள். ஆனால் பெண்களுக்குப் பொறாமை குணம் இயற்கையான ஒன்று. பல குடும்பங்களில் பிரச்னைகளும் சிக்கல்களும் ஒருவனுக்குக் கல்யாணமான பின்பு அவனது மனைவியாலேதான் வருகிறது.

பெண்கள் பொது சேவை செய்கிறோம், பெண்கள் சங்கத்திற்குப் போய் வருகிறோம் என்றெல்லாம் சொல்வதை நான் ஏற்றுக் கொள்வதில்லை. காரணம் அநேக பெண்களுக்கு தன் குடும்பத்தோடே ஒத்துப் போக முடியாத போது பொது இடங்களில் பெரிசாக என்ன கிழித்துவிடப் போகிறார்கள்? இப்படியெல்லாம் சொல்வதால் பெண்மைக்கு நான் மதிப்புக்கொடுக்காதவன் என்று பொருள் அல்ல! பெண்களை மதிக்கிறேன்! பெண்கள் பெண்களாக நடந்துகொண்டால்.

புதுமைப் பெண், புரட்சிப் பெண் இது எல்லாம் சினிமா, நாடகத்திற்கு வேண்டுமானால் சரிப்பட்டு வரலாம். ஆனால் நிஜ

# போடாதீங்க!

டோம். அவர்கள் அபிப்பிராயங்களை இங்கு தந்திருக்கிறார்கள்.

மற்றும் சில நவயுக ஆண்கள் பெண்களைக் காரசாரமாகத் திட்டிவிட்டு, "இதையெல்லாம் பத்திரிகையில் போட்டுவிடாதீர்கள். அப்புறம் என் மனைவி, உறவுக் காரப் பெண்களிடம் 'இமேஜ்' போய்விடும்" என்றார்கள்!

இப்படி மனசில் தரக்குறைவாகப் பெண்களை நினைத்துக் கொண்டு, வெளியில் வேஷம் போடுகிறவர்களை விட வெளிப்படையாகத் திட்டுபவர்கள் எவ்வளவோ தேவலை!

வாழ்க்கைக்கு இது எல்லாம் ஒத்து வராது. கணவன் சொல்படி கேட்டு குடும்பத்தாரோடு ஒன்றிப் போவதுதான் புத்திசாலிப் பெண்களுக்கு நல்லது.

கணவன் கட்டியது வெறும் தாலி அல்ல அது ஒரு பெண்ணுக்கு வேலி. நம்முடைய கலாசாரம் பண்பாடு ஆகியவற்றுக்குச் சாட்சி. அதைக் கழற்றி எறிவது புரட்சியும் இல்லை. கணவனைப் பழிப்பது பண்பும் அல்ல. என்னதான் கணவன் செய்தாலும் அவன் ஒரு பெண்ணுக்கு தெய்வம்தான். கல் ஆனாலும் கணவன்தான் புல்லானாலும் புருஷன் தான்.

பெண்களுடைய ஆதிக்கம் பலவிதத்திலும் பெருகி வருவதை நான் எதிர்க்கிறேன். பேருந்தில் பயணம் செய்யும் போது கூட நான் பெண்கள் சீட்டு காலியாக இருந்தால் கூட அதில் உட்காருவது இல்லை. ஆனால் எத்தனை பெண்கள் ஆண்கள் சீட்டில் உட்கார்ந்து கொண்டு வயதான கிழவர் வந்தால் கூட ஏறிட்டு ஒரு பார்வை பார்த்துவிட்டு சீட்டுக் கொடுக்க மறுக்கிறார்கள் தெரியுமா? கேட்டால் நாங்கள் பெண்கள் என்பார்கள். பெண்மையை நாம் மதிக்கிறோம். ஆனால் அவர்கள் வயதானவர்களுக்குக் கூட இடம் கொடுக்க மாட்டார்கள். விட்டுக் கொடுக்கும் மனப்பான்மை பெண்களுக்குக் கிடையவே கிடையாது!"



ஜா. ராமேஷ்

"நான் ஒரு கிறிஸ்துவன். என் மனைவி ஒரு ஹிந்து. ஆனால் எங்களுக்குள் இதுவரை எந்தப் பிரச்னையும் வந்ததில்லை. சக்திக்கு மீறிய ஆசைகள் எங்களுக்கு இல்லை. குடும்ப பட்ஜெட் போடுவதிலிருந்து இருவருமே கலந்து பேசியே எதையும் செய்கிறோம். அவளும் சம்பாதிக்கிறாள். நானும் சம்பாதிக்கிறேன். ஆனால் நான்தான் பெரியவன், நீதான் பெரியவள் என்ற எண்ணமோ காம்ப்ளக்ஸோ எங்களிடம் இல்லை.

எந்தச் சிறிய காரியமானாலும் அவளுடைய முடிவைக் கேட்டுத்தான் நான் செயலில் இறங்குவேன். சில நேரங்களில் நான் தனிமையில் எடுத்து முடிவு தப்பாகப் போய் இருக்கிறது. அந்த நேரங்களில் எல்லாம் எனக்கு நிம்மதியைக் கொடுத்து எனக்கு வழி காட்டியவள் என் மனைவிதான்.

மனைவி என்பவள் இல்லற சுகத்திற்கு மட்டும் என்று பல ஆண்கள் நினைக்கின்றனர். பெண்களை ஒன்றிற்கும் உபயோகப்படாதவர்கள் என்றும் நினைக்கின்றனர். இதெல்லாம் ரொம்ப ரொம்பத் தப்பானது. ஒரு தாயால் தான் ஒரு குழந்தையை நன்றாக வளர்க்க முடியும். என்னை பெண்டாட்டி தாசன் என்று சொன்னாலும் கவலையில்லை. ஒரு மனைவியோடு ஒத்துப் போகாதவன் சமூகத்தில் பெரிசாக என்ன கிழித்து விடப் போகிறான்?"



எருக்கூர் எஸ். லெக்ஷ்மி நாராயணர்

"இப்போ நாடு ரொம்ப கெட்டுப் போச்சு சார். அந்தக் காலத்தில் எல்லாம் பெண்கள் பெண்களாக நடந்து கொண்டார்கள். "அடியே" என்று ஒரு குரல் கொடுத்தால் கூடப் போதும் சமையல் கட்டில் இருந்தால கூடக் கணவன் கூப்பிடுகிறானே என்று பதறி அடித்துக் கொண்டு வருவார்கள்.

இப்போதோ பெண்கள் எல்லாம் தலை முடியை 'ஷோக்கா' வெட்டிக்கிறாங்க! எப்படி

எப்படியெல்லாமோ டிரஸ் போட்டுக்கறு! இது எல்லாம் நன்னு இல்லே. பதிவிரதா தர்மம் இப்ப கொஞ்சம் கூட இல்லே. அந்தக் காலத்தில் எல்லாம் ஆம்புடையான் சாப்பிட்ட பிறகுதான், மனைவியானவள், அந்த இலையில் சாப்பிடுவாள்.

நம்முடைய சாஸ்திரம் சம்பிரதாயம் இதையெல்லாம் மீறுவது நல்லதில்லே. கணவனுக்காக சாவித்திரி எமனிடமே போய் எப்படி முறையிட்டாள். கணவன் என் கூட வரவில்லை என்றால் பூமிக்கே நான் போக மாட்டேன் என்று சொன்ன அவள் பெண்ணு? இல்லே, இந்தக் காலத்துப் பெண்கள் பெண்ணு? யோசித்துப் பாருங்கள்.

பெண்களை அடிமையாக நினைக்கக்கூடாது அதே சமயத்தில் தலைக்கு மேல் வைத்துக் கொண்டு கூத்தாடவும் கூடாது. பெண்கள் மண் குடம் மாதிரி. கை நழுவி போச்சுன்னு உடைந்து போய்விடுவார்கள்.''



ன்' எஸ். கிருஷ்ணமூர்த்தி

"பெண்களுக்குச் சகல விதத்திலும் ஒத்துப் போவதுதான் நல்லது என்று நான் நினைக்கிறேன். பெண்களுக்காக சில வீட்டுக் காரியங்களைச் செய்துகொடுத்தால் நாம் தாழ்ந்து போய்விட மாட்டோம். ஏற்கெனவே இருக்கக் கூடிய அன்பு இதனால் கூடுமே தவிர குறையாது. கல்யாண வீடுகளுக்குப் போனால் ஆண்கள் பதார்த்தங்களை எடுத்துப் பரிமாறுவார்கள். தண்ணீர் எடுத்துக்கொடுப்பார்கள். சேவை மனப்பான்மையில் செய்யக் கூடிய ஆண் இவைகளை தன் வீட்டில் செய்வது மட்டும் கேவலம் என்று ஏன் நினைக்கிறார்கள்?

நான் மனைவிக்குப் பலவிதத்திலும் கூடமாட உபகாரம் பண்ணுகிறேன். முக்கியமான முடிவுகளை நாங்கள் இருவரும் கலந்து பேசித்தான் எடுக்கிறோம். என் மனைவியை நான் எப்போதும் என்னைவிடத் தாழ்ந்தவள் என்றே நினைக்கவில்லே. ஆண்கள் சங்கங்களை விட பெண்கள் சங்கங்கள் பரந்த மனப்பான்மையோடு, தாய்மை உணர்வோடு பல காரியங்கள் செய்வதை நான் கண்கூடாகக் காண்கிறேன். நானும் வலியவே பெண்கள் சங்கத்திற்குப் போய் அவர்களுக்கு வேண்டிய உதவிகளைச் செய்கிறேன். இதில் தப்பு ஒன்றுமில்லே.

100 கிராம் கேரட்டிலிருந்தும், 150 கிராம் பீட்ரூட்டிலிருந்தும் எடுக்கப்படும் ஜூஸ் அபாயகரமான வியாதிகளிலிருந்து மீண்டவர்கள் பருக வேண்டிய தாகும் என்று ரஷ்ய டைஜஸ்ட் அறிவுறுத்துகிறது. இவை ரத்த செல்களை அதிவேகமாகப் புதுப்பிக்கும் ஆற்றல் உடையது என்று மேலும் சிபாரிசு செய்கிறது.

—திருமதி. தேவநாதன்.

# இம்மாத இல்லத்தரசி போட்டி

**பொருள் : துவையல்** **கடைசி தேதி : 15-11-85**

**சமையல் கூப்பன்**

................ என்ற தலைப்பில் சமையல் குறிப்பை இத்துடன் அனுப்பியுள்ளேன். இச் சமையல் குறிப்பு இதுவரை எந்தப் பத்திரிகையிலும், எந்தப் புத்தகத்திலும் வெளியானதல்ல என்று உறுதி கூறுகிறேன்.

கையொப்பம்

# உங்கள் குழந்தையின் சீரான வளர்ச்சி, முதல் ஆண்டில் அவன் பெறும் ஊட்டத்தைப் பொறுத்துள்ளது.



## பால் அடங்கிய ஃபாரெக்ஸ் திட உணவு

### அவனது வளர்ச்சிக்குத் தேவையான ஊட்டச்சத்துக்கள் அனைத்தும் நிரம்பியதாகும்

பால் அடங்கிய ஃபாரெக்ஸ் திட உணவு, உங்கள் குழந்தையின் ஊட்டச்சத்துத் தேவைகளை மனதில் கொண்டு விசேஷமாகத் தயாரிக்கப்பட்டுள்ளது.

ஃபாரெக்ஸ் புரதம் செறிந்தது, கூடுதல் இரும்புச்சத்து உள்ளது, சரியான விகிதத்தில் கால்ஷியமும் ஃபாஸ்ஃபரஸும் அடங்கியது. குழந்தையின் வளர்ச்சிக்கு இவை அத்தியாவசியமாகும்.

ஏறக்குறைய நான்காவது மாதம் முதல், குழந்தைக்குப் பால் அடங்கிய ஃபாரெக்ஸ் திட உணவு கொடுங்கள். அவன் ஆனந்தமாக வளருவதைக் காணுங்கள்.

பாசத்துடன் வழங்குவோர் கிளாக்ஸோ!




ஏற்கெனவே பால் அடங்கியது

CLARION/B/GX/8/203- R



**பி. டி. ஜெயகுமார்**

"பெண்புத்தி — பின் புத்தி — என்பார்கள். அந்தக் கருத்தை நான் நூற்றுக்கு நூறு ஏற்கிறேன். ஆண் கட்டுப்பாட்டிற்குக் கீழ் இல்லாத வீடு உருப்படாது. என்ன தான் பெண்கள் இருந்தாலும் குழந்தைகளுக்குச் செல்லம் தொடுத்துக் கெடுத்து விடுவார்கள். பிற்கால சந்ததியினரை மனத்தில் நினைத்துச் சொல்கிறேன், ஆண் மகனின் கீழ் வளர்க்கப் படும் குழந்தைக்கு ஒழுக்கம் இருக்கும். அறிவு இருக்கும்.

இந்தக் கால இளைஞர்களுக்குப் பெண்களைப் பலவிதத்திலும் பிடிப்பதில்லை என்பது உண்மைதான். வேலையில்லாமல் பல இளைஞர்கள் திண்டாடிக் கொண்டு இருக்கும் போது ஜாலியாக எத்தனை பெண்கள் வேலைக்குப் போய் வருகிறார்கள்! கொஞ்சம் இடம் கொடுத்தால் போதும், பெண்கள் நம் தலைமீதே வந்து உட்கார்ந்து விடுவார்கள். விக்கர் செக்ஷன் என்ற பாதுகாப்பில் அழுதே பல காரியத்தைச் சாதித்து விடுவார்கள். உருப்படியான ஆண் மகனைக் கூட நொடிப் பொழுதில் கெடுத்துவிடக் கூடிய சர்வ வல்லமை பெண்களுக்கு உண்டு.

அந்தக்காலத்துப்பெரியவர்கள்சொல்கிற கருத்தை ஏற்கிறவன் நான். பெண்களுக்குச் சில வகையான சுதந்திரங்களை மட்டும்தான் கொடுக்க வேண்டும். கணவன் இறந்த பிறகு பொட்டு இட்டுக் கொள்வதோ அல்லது கணவன் இருக்கும்போதே நாகரிகம் என்ற போர்வையில் தலைமயிரை வெட்டிக் கொள்வதோ, எல்லாம் நமது தமிழ்ப் பண்பாட்டிற்கு உகந்தது அல்ல.

ஒரு பெண்ணின் ஆடை அலங்காரம் எல்லாம் கை எடுத்துக் கும்பிடற மாதிரி இருக்க வேண்டுமே தவிர, கைகொட்டிக் கூப்பிடுகிற மாதிரி இருக்கக் கூடாது!

பேட்டி:

**கிழாம்பூர் சங்கரசுப்பிரமணியன்.**

# உணவுப் பண்டங்களைப் பாதுகாப்பது எப்படி?

உணவுப் பொருள்களைப் பத்திரப்படுத்த, பிளாஸ்டிக் பைகள், மெழுகு பூசிய காகிதப் பைகள், அலுமினியம் ஃபாயில்கள் **(Aluminium Foils)** அதாவது மிக மிக லேசான அலுமினியத் தகடு என்று பலவிதமான பைகள் தற்போது விற்பனையில் உள்ளன. இவைகளில் சில, குறுகிய காலத்திற்கே உபயோகமுடையவை. இன்னும் சில நீண்ட காலப்பயனுடையவை. சில, உலர்ந்த உணவுப் பொருளைச் சேமித்து வைக்கவும், சில, ஈரப் பசையுடைய உணவுப் பொருளைச் சேமித்து வைக்கவும் உதவுகின்றன. சில மலிவு விலையில் கிடைக்கின்றன. அலுமினியம் ஃபாயில் போன்றவை அதிக விலையுள்ளவை. இவைகளைக் கவனத்தில் கொண்டு, ஒரு இல்லத்தரசி தனக்கு வேண்டிய முறையில் பைகளைத் தேர்ந்தெடுக்க வேண்டும்.

சில உணவுப் பண்டங்களைப் பைகளில் பத்திரப்படுத்தும் போது ஈரப்பசை இல்லாமல் கவனித்துக் கொள்ள வேண்டும். இன்னும் சில உணவுப் பண்டங்களுக்கு ஈரப் பசை இருக்கும்படிப் பார்த்துக் கொள்ள வேண்டும்.

### சமைத்ததா, சமைக்காததா?

உணவுப் பண்டங்களைப் பத்திரப்படுத்தும்போது, அளவு புதியதா, உலர்ந்திருக்கிறதா, சமைக்கப்பட்டதா, சமைக்கப் படாததா, சமைக்கப்பட்ட முறை போன்ற விஷயங்களைக் கவனிக்க வேண்டும். வெவ்வேறு விதமான பண்டங்களை வெவ்வேறு விதமாகப் பத்திரப்படுத்த வேண்டும். பத்திரப் படுத்தி வைக்க உதவும் சாமான்கள், பிளாஸ்டிக் டப்பாக்களாக இருந்தாலும், உலோகத்தாலான டப்பாக்களாக இருந்தாலும், அடிக்கடி கையாளுவதால், பாதிக்கப்படாமல் நீண்டகால உபயோகத்திற்கு ஏற்றவையாக இருக்க வேண்டும்.

### பிளாஸ்டிக் பை

பிளாஸ்டிக் பைகளில் சூடான பொருள்களைப் பத்திரப்படுத்தக் கூடாது. குளிர்ப் பெட்டியில் உறை ஷெல்பினுள் **(Freezer Chest)** ஆட்டு மாமிசம், கோழிக்கறி, மீன், ஐஸ் கிரீம்கள், வெண்ணெய், சீஸ் போன்றவைகளைப் பாதுகாப்பாக வைப்பதற்கே பிளாஸ்டிக் பைகள் பயன்படுகின்றன.

உறை ஷெல்பினுள் வைப்பதற்கு முன்பு, ஆட்டிறைச்சி, மாட்டிறைச்சி போன்றவைகளைச் சுத்தமாகக் கழுவி சுத்தமாகத் துடைக்க வேண்டும். பிறகே அவைகளைப் பிளாஸ்டிக் பேப்பரால் சுற்றி உறை ஷெல்பினுள் வைக்க வேண்டும். நன்றாகக் கழுவ வேண்டுவது மிகவும் அவசியம். ஏனென்றால் இந்த இறைச்சிகள், கையாளும்போது, பாக்டீரியாக்களின் தாக்குதலுக்கு உள்ளாகிறது.

மீன், அதிவிரைவில் கெட்டுவிடும். மீனுடைய சுவாச உறுப்புகள், ஜீரண உறுப்புகள் நீக்கப்பட வேண்டும். பிறகு நன்றாகக் கழுவி, நீரை ஒட்ட வடித்துவிட்டுப் பிறகு பேப்பரில் சுற்றி குளிர்ப்பெட்டிக்குள் வைக்க வேண்டும். குளிர்ப்பெட்டிக்குள் வைத்தாலும் மீனை, இருபத்து நான்கு மணி நேரத்துக்குள் பயன்படுத்திவிட வேண்டும். அப்போதுதான் மீனின் முழுமையான சத்து கிடைக்கும். குளிர்ப் பெட்டிக்குள் வைக்கப்பட்ட மீனிலிருந்து நீர் ஒழுக ஆரம்பிக்கும் போது, மீனிலுள்ள வைட்டமின்கள், புரோட்டீன்கள்,

தாதுப்பொருள்கள்போன்றவை.அந்நீரோடு வந்துவிடுகின்றன. இக்காரணத்தாலேயே, மீனைக் குளிர்ப்பெட்டிக்குள் வைத்தாலும் 24 மணி நேரத்துக்குள் பயன்படுத்தி விட வேண்டும் என்று கூறப்படுகிறது.

குளிர்ப் பெட்டியில் ட்ரேயில் ஐஸ்கிரீம் வைக்கும்போது அதன்மேலே ஒரு பிளாஸ்டிக் பேப்பரைப் போட்டு மூடி வைக்க வேண்டும். அப்போது, ஐஸ்கிரீம் மேற்புறத்தில் ஈரமான ஒரு நிலை ஏற்படாமல் தடுக்கலாம்.

பதப்படுத்தப்பட்ட சீஸ்கட்டியைப்பிளாஸ்டிக் பையில் சுற்றி வைக்கலாம். சரியாகப் பேக் செய்யாவிடில் சீஸ் கட்டி உலர்ந்து பசைத்தன்மையை இழந்துவிடும். மிகக் கெட்டியாக உள்ள கட்டி சீஸ், காற்றுப் புகாமலும், ஈரமடையாமலும் பாதுகாக்கப்பட வேண்டுமாதலால், சீஸ் கட்டியை, பிளாஸ்டிக் பையில் போட்டு நல்ல இறுக்கமாகக் கட்டிப் பிறகு குளிர்ப் பெட்டியில் வைக்க வேண்டும்.

எந்தவிதமான பிளாஸ்டிக் பைகளை உபயோகப்படுத்த வேண்டுமென்பது, பேக் செய்யப் படவேண்டிய பொருள்களைப் பொறுத்ததாகும். ஒரு சில பண்டங்களை காற்று, ஈரப்பசை பாதிக்காமல் பேக் செய்ய வேண்டும். மற்றும் சில பண்டங்களுக்கு, காற்றோட்டம், ஈரப்பசை தேவை. எனவே எல்லாப் பண்டங்களையும், ஒரே தரமான பிளாஸ்டிக் பைகளில் பேக் செய்து வைப்பது தவறு. அப்பளம், அவல், வறுவல், எண்ணெயில் பொரித்தெடுக்கப்பட்ட வகைகள், சேமியா போன்றவைகளைக் காற்று புகாத டப்பிகளில் வைக்க வேண்டும்.

## பழங்கள்

பழங்களும், காய்கறிகளும் பாக்டீரியாக்களால் தாக்கப்படுகின்றன. என்பதை நாம் அறிவோம். பழங்களில், சிதைந்த பாகத்தின் மூலமாகக் கண்ணுக்குப் புலப்படாத நுண் கிருமிகள் புகுந்து ஆரோக்கியத்திற்குக் கெடுதி விளைக்கும் பழங்களில் திராவகச் சத்து இருப்பதால் பாக்டீரியாக்கள் வேகமாக வளர முடியாது. ஆனாலும், பழங்கள் மேல், ஒருவித பாசி படர்வதை இத்திராவகச் சத்து தடுக்க முடியாது. காய்கறிகளில் பழங்களிலுள்ளதை விட குறைந்த அளவே திராவகச் சத்து உள்ளமையால், காய்கறிகள் பழங்களை விட, மிக விரைவில் பாக்டீரியாக்களால் தாக்கப்படுகின்றன.

மாம்பழம், திராட்சை, பிள்ம்ஸ் போன்றவைகளைக் குளிர்ப் பெட்டிக்குள் வைக்கலாம். இவைகள் உலர்ந்து போகாமல் இருக்க, இவைகளை, ஊசியால் துவாரங்கள் செய்யப்பட்ட பிளாஸ்டிக் பைகளில் வைத்து நன்றாகப் பேக் செய்து குளிர்ப்பெட்டிக்குள் வைக்க வேண்டும். பொட்டாசியம் பர்மாங்கனேட் கரைசலால் பழங்களைக் கழுவுவது அவசியம். இக்கரைசலைக் கொண்டு பழங்களைக் கழுவுவதால், பழங்களின் மேற்புறத்திலுள்ள கெடுதி விளைக்கும் கிருமிகள் நாசமாகின்றன. கழுவி, நன்றாக ஈரம் போகத் துடைத்துப் பிறகு துவாரம் செய்யப்பட்ட பிளாஸ்டிக் பைகளில் பத்திரப்படுத்த வேண்டும்.

வாழைப்பழம், அன்னாசி, சப்போட்டா ஆகியவைகள் சாதாரண உஷ்ணநிலையில் வைக்கப்பட வேண்டும். காலிஃப்ளவர் உரிக்கப்பட்ட பட்டாணி, முட்டைக் கோஸ் முதலியவைகளைப் பிளாஸ்டிக் பையில் போட்டுக் குளிர்ப் பெட்டிக்குள் வைக்கலாம். தக்காளிப் பழங்களை நன்றாகக் கழுவி ஈரம் போகத் துடைத்து, துவாரங்கள் செய்யப்பட்ட பிளாஸ்டிக் பைகளில் போட்டுக் குளிர்ப் பெட்டிக்குள் வைக்கலாம்.

'கால் ஆணி' பற்றிய சென்ற இதழ் கேள்விக்கு அறுவை சிகிச்சை செய்து கொள்ளுமாறு வைத்தியப் பகுதியில் ஆலோசனை கூறப்பட்டிருந்தது.

"அம்மாப் பச்சரிசி' என ஒரு வகைச் செடி தோட்டங்களில் நிறைய தரையோடு வளர்ந்திருக்கும். இதன் இலையைக் கிள்ளினால் பால் வரும். அச்செடியின் அருகில் அமர்ந்து அந்தப் பாலை எடுத்து காலை மாலை ஆணி உள்ள பகுதியில் தாராளமாகத் தடவி வர பரிபூர்ணமாகக் குணமாகிவிடும். மறுபடி தொடராது.

—எஸ். பட்டம்மா.

வெள்ளரிக்காய், வெண்டைக்காய் போன்றவைகளைக் கழுவாமல் நன்றாகத் துடைத்து துவாரங்கள் செய்யப்பட்ட பிளாஸ்டிக் பைகளில் போட்டுக் குளிர்ப்பெட்டியில் வைத்து, உபயோகிக்கும் போது கழுவ வேண்டும்.

கத்தரிக்காய், பாகற்காய், சுரைக்காய், பூசணிக்காய், பரங்கிக்காய், முருங்கைக்காய், முள்ளங்கி, சர்க்கரை வள்ளிக் கிழங்கு, சேனை, டர்னிப், பீட்ரூட், காரட் போன்றவை, குளிர்ப் பெட்டிக்குள் வைக்கப்பட்டாலும் காற்றோட்டமான இடத்தில் இருக்க வேண்டும். எனவே இவைகளைப் பிளாஸ்டிக் பைகளில் போட்டு வைக்கக் கூடாது.

## புதினா, கொத்துமல்லி

புதினா, கொத்துமல்லி போன்ற வாசனை மிகுந்த கீரை வகைகள் வாங்கியவுடனேயே பயன்படுத்தப்பட வேண்டும். நாள்பட்டு உபயோகித்தால், இவைகளிலுள்ள வாசனை, ஆவியாகி விடுவதால், இவைகளை உபயோகித்துப் பயனில்லை. செலரியில் லிமோனின், புதினாவில், மெந்தால், மெதில் அசிடேட், கொத்துமல்லியில் டைலால்டினைட் போன்ற வாசனைச் சுவைகள் உள்ளன. இவ்வாசனைச் சுவைகள், நாளாக ஆக, ஆவியாகி விடும் தன்மையுடையவை.

பாலக் கீரை, வெந்தியக் கீரை போன்றவைகளையும், வாங்கிய அன்றே உபயோகித்து விட வேண்டும். உடனே உபயோகிக்க முடியவில்லை என்றால் வேர்களை நீக்கிக் கழுவி, நல்ல கீரைகளைப் பொறுக்கி, உலர வைத்துப் பிறகு பிளாஸ்டிக் பையில் போட்டு வைக்கலாம். இதையும் ஒரு நாளுக்குமேல் வைத்து உபயோகிக்கக் கூடாது.

உருளைக் கிழங்கு, வெங்காயம் போன்றவற்றிற்குக் காற்றோட்டம் தேவை. ஆகவே இவைகளைப் பிளாஸ்டிக் பைகளில் வைக்கக் கூடாது. உருளைக்கிழங்கைக் குளிர்ச்சியான அதிக வெளிச்சம் இல்லாத, ஈரமில்லாத இடத்தில் வைக்க வேண்டும். அதிக வெளிச்சமுள்ள இடத்தில் வைக்கும் போது, உருளைக் கிழங்குக்குப் பச்சை நிறம் வந்துவிடுகிறது.

## பிரெட், கேக்

மெழுகுக் காகிதப் பைகள், ரொட்டி, பிஸ்கட், கேக், பிசைந்தரொட்டிமாவு போன்றவைகளைப் பேக் செய்யப் பயன்படுகிறது. இவைகளை நீண்ட காலம் பாதுகாக்க வேண்டுமானால், மெழுகுப் பேப்பர் வைக்கப் பட்ட, காற்றுப் புகாத டப்பிகளில் போட்டு வைக்கலாம். அல்லது அலுமினியம் ஃபாயில்களில் சுற்றிவைக்கலாம். நீர்விட்டுபிசைந்தமாவைக் குளிர்ப் பெட்டிக்குள் வைக்கும் போது மிகுந்த கவனம் தேவை. பிசைந்த மாவில், புரோட்டீன், குளூட்டன் என்ற பசையுள்ளது. ஆகவே, பிசைந்த மாவை வைக்கும் பாக்கெட்டை நன்றாக சீல் செய்து, பிறகு மிகக் குறைந்த உஷ்ணநிலையில் வைக்க வேண்டும்.

பிரெட்டில் 38 சதவீதம் நீர் இருக்கிறது. இந்நீர் வற்றி விட்டால், பிரெட், உலர்ந்து பொடிப் பொடி ஆகி, விடுகிறது. பிரெட்டை மெழுகுத்தாளில்சுற்றிக்காற்றுப்புகாதடப்பிகளில் வைக்க வேண்டும். மாரி (Marie), குளுகோஸ், க்ரீம் க்ரேக்கர்ஸ் போன்றபிஸ்கட்டுகள் குறைந்த கொழுப்புச் சத்து (24 சதவீதம்) உடையவை. இவைகளை மெழுகுத் தாளில் சுற்றி காற்றுப் புகா டப்பிகளில் வைப்பது நல்லது.

பேடாக்கள், பர்பி வகைகள், ஜிலேபி போன்றஇனிப்புவகைகளை,ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குக் கொண்டு செல்லும் போது, மெழுகுத்தாளில் பேக் செய்வது நல்லது. பசுப்பாலில் தயாரிக்கப்பட்ட கோவாவில் நாலிலிருந்து ஐந்து சதவீதம் கொழுப்புச் சத்தும், எருமைப் பாலில் தயாரிக்கப்படும் கோவாவில் ஏழிலிருந்து எட்டு சதவீதம் கொழுப்புச் சத்தும் இருக்கிறது. பாலிலிருந்து தயாரிக்கப்பட்ட பண்டங்கள் அதி விரைவில் கெட்டுவிடுகின்றன.

பால்பண்டங்கள் கெடுவது, அவைகளிலுள்ள சர்க்கரை, கொழுப்புச் சத்து, நீர், எந்த முறையில் பண்டங்கள் தயாரிக்கப்படுகின்றன, எந்த உஷ்ணநிலையில் பாதுகாக்கப்படுகின்றன என்பதைப் பொறுத்தது. பால் பண்டங்களைக் குளிர்ப் பெட்டிக்குள் வைத்திருந்தாலும், ஒரு சில நாட்களுக்குப் பிறகு அவைகளில் திரிதிரியாக, நூல் போன்ற ஒரு நிலை ஏற்படுகிறது. இரசாயன மாற்றதால் துர்வாசனை வருகிறது.

நறுக்கிய வெள்ளரிக்காய் மீது, மெழுகுத் தாளைப் போட்டு வைத்தால், நீர் வற்றி உலராமல் இருக்க உதவுகிறது.

இங்கு கொடுக்கப்பட்டுள்ள அட்டவணை மைசூரிலுள்ள மத்திய உணவு ஆராய்ச்சி நிலையம் தயாரித்தது.

| பண்டம் | உஷ்ணநிலை (°C) | எவ்வளவு வாரங்கள் குளிர்ப்பெட்டியில் வைக்கலாம் | குளிர்ப்பெட்டியிலிருந்து எடுத்த பிறகு (நாட்கள்) |
|---|---|---|---|
| ஆப்பிள் | 2 — 3 | 18 | 9 |
| கொய்யாப்பழம் | 8 — 10 | 4 | 3 |
| பலாப்பழம் | 11 — 13 | 6 | 3 |
| எலுமிச்சம்பழம் | 5 — 7 | 6 | — |
| மாம்பழம் | 5 — 10 | 11 | 3 — 4 |
| ஆரஞ்சு | 5 — 7 | 6 — 18 | 4 — 5 |
| பப்பாளிப்பழம் | 4 — 6 | 5 | 3 |
| அன்னாசிப்பழம் | 8 — 10 | 6 | — |
| சப்போட்டா | 0 — 2 | 10 | 5 |
| பேரிக்காய் | 0 — 2 | 12 | — |
| திராட்சை | 0 — 2 | 8 | — |
| பீன்ஸ் | 0 — 2 | 2 | 1 |
| பீட்ரூட் | 0 — 2 | 7 | — |
| பாகற்காய் | 0 — 2 | 4 | 2 |
| கத்தரிக்காய் | 8 — 10 | 4 | 2 |
| முட்டைக்கோஸ் | 0 — 2 | 12 | — |

| | | | |
|---|---|---|---|
| காலி பிளவர் | 0 — 2 | 7 | — |
| இஞ்சி | 2 — 3 | 15 | — |
| வெண்டை | 5 — 10 | 2 | 2 |
| புடலங்காய் | 18 — 21 | 2 | 2 |
| சர்க்கரை வள்ளிக் கிழங்கு | 11 — 12 | 13 | 5 |
| மரவள்ளிக் கிழங்கு | 0 — 2 | 28 | — |
| தக்காளி (பச்சை நிற மாக இருக்கும்போது) | 2 — 3 | 6 | 4 |
| தக்காளி (மஞ்சள் நிற மாக இருக்கும்போது) | 5 — 7 | 3 | 3 |

| பண்டம் | குளிர்ப்பெட்டிக்குள் ஷெல்பில் (4 °C) நாட்கள் | உறை பெட்டியுள் (Freezer chest) (−10 °C) நாட்கள் |
|---|---|---|
| சமைக்கப்பட்ட உணவு. | | |
| சோறு | 4−5 | |
| பருப்பு (வேக வைத்தது) (அதிக நீரில்லாமல் கெட்டியானது) | 6−7 | |
| பருப்பு (வேக வைத்தது) (மேலே நீர் நிற்கிற நிலையில் உள்ளது.) | 3−4<br>3−4 | |
| கறிகள் — (அதிகமான மசாலா சேர்த்துக் கெட்டியானது.) | 7−8 | 12−14 |
| பால் | | |
| உடைக்காத பாக்கெட்டிலோ அல்லது சீல் செய்யப்பட்ட சீசாக்களில் | 24−36 மணி | |
| காய்ச்சப்பட்டது | 36−48 மணி | |
| பாலில் தயாரித்த கஸ்டர்டு | 5−6 நாட்கள் | |
| மசாலா சேர்க்கப்பட்ட மாமிசம், மீன் கறிகள் | 6−7 நாட்கள் | 10−12 |
| முட்டை (புதியது) | 60−70 நாட்கள் | |
| சமைக்கப்படாத மாமிசம், மீன் (பாலிதீன் பைகளில் வைத்து) | 1 நாள் | |

நன்றி: சயின்ஸ் டுடே.
ராஜி.

"மிளகுதான் மிளகாய்க்குப் பதிலாக நமது முன்னோர்கள் பயன்படுத்தி வந்துள்ளனர். இடையே ஏற்பட்ட சமூக மாற்றங்களால்தான் எங்கோ கிடந்த மிளகாய்க்கு இவ்வளவு மதிப்பு ஏற்பட்டது. மற்றபடி இதில் ஒன்றும் பயனில்லை. மாறாக பக்க நோய்கள் பலவற்றையும் ஏற்படுத்தும். மிளகு அவ்வாறுச் செய்யாது. உடலுக்கும் நல்லது. எனவே மிளகையே எப்போதும் பயன்படுத்துங்கள்!

—சிவா ராவணன்.



'லக்ஷ்மி' எழுதும்
சொர்க்கத்தின்
கதவுகள்
தொடர்கதை
கல்கி தீபாவளி (10·11·85)
சிறப்பிதழில் ஆரம்பம்.
அதிக பக்கங்கள் :: அதே விலை

# சில ப்ரச்னைகள்



எப்பொழுதும் புக்ககத்தாரையும், கணவனையுமே வில்லனாக (வில்லர்களாக!) பார்த்துப் பார்த்துப் பழகிப் போன கண்களுக்கு, புகையும் அடுப்பாக இன்னொரு பிரச்னை இருப்பது கூடத் தெரியத்தான் செய்கிறது.

கூட்டுக் குடும்பங்கள் சிதறி தனிக்குடித்தனங்கள் பெருகிவிட்ட காலமிது. படித்த பெண்களில் பலரும் வேலைக்குப் போகிறார்கள். குழந்தை பெற்று வளர்ப்பது மட்டுமல்ல; அதோடு எத்தனை வேலைகள் இப்போது.

குழந்தையைப் பள்ளிக்குத் தயார் செய்வது முதல் அதைக் கூட்டிப் போவது, லன்ச், திரும்பவும் கூட்டி வருவது, ஹோம் ஒர்க் இப்படி ஒரு பட்டாளம் வேலைகள். அம்மா தான் தற்காலத்தில் குழந்தைகளுக்கு வாத்தியார். வீட்டில் இருக்கும் பெண்ணாக இருந்தால் இன்னும் கேட்கவே வேண்டியதில்லை. கரெண்ட் பில், பால் கார்டு, ரேஷன், டெலிபோன் பில், வீடு கட்ட பிளானுக்கு அலைய, கொத்தனாரைச் சமாளிக்க சகலமும் செய்யும் ரோபாட் அவள்தான்.

ஆக அவளுக்கும் ஒரு துணை தேவையாக இருக்கிறது. 'சாயங்காலம் களைத்து வரும் நேரம் மாமியாரை அதட்டி காப்பி போட்டுத் தரச் சொல்ல முடியாது. அம்மாவாக இருந்தால் தேவலை என மனம் சொல்கிறது.

விளைவு —

பெண்ணின் வீட்டில் அம்மா இருப்பது எனும் நாகரிகம் தற்காலத்தில் பல வீடுகளில் வந்துவிட்டது. நல்லதுதான். பெத்த தாயாரைப் போல பெண்ணுக்கு யாரும் செய்ய முடியாதுதான்.

சண்டை, சச்சரவு இல்லாமல் பெரும்பாலான குடும்பங்கள் போய்விடுகின்றன.

"அம்மா, பத்து மணிக்கு 'க்ளாக்ஸோ' கரைச்சுக் குடுத்துடு. ஒரு மணிக்கு.... ப்ரிட்ஜ்லே கேரட் ஜூஸ் வச்சுருக்கேன். எடுத்து ஸ்பூனாலே குடுத்துடு. அப்புறமா தண்ணீர்..."

இப்படிக் கைக்குழந்தையின் அயிட்டங்களை உரிமையோடு சொல்லிவிட்டு வேலைக்குப் போகலாம்.

"சாயந்தரம் வர்றப்ப பூரி பண்ணி வச்சுடேன்" சொல்லலாம்.

ராத்திரி குழந்தைகளைத் தூங்கப் பண்ணிட்டு அழகாக நைட் ஷோ போகலாம். இன்னும் எவ்வளவோ.

இப்படிச் சந்தோஷப் படுகிற பல பெண்களும் இருக்கத்தான் செய்கிறார்கள்.

ஒரு சில இடங்களில்தான் கோளாறு.

"ஏண்டி கலா, இன்னுமா உன் புருஷன் ஊருக்கு நூறு ரூபா அனுப்பிண்டிருக்கார்....

"ஆமாம். ஏம்மா....?

"நல்லாக் கேட்டே போ. ஒரு பொண்ணை பெத்தாச்சு. அவளுக்கும் சேக்க வேணுமோ. என்னை, உன் மாமனார் மாமியாருக்கு வர்ற பென்ஷன் போதாதா? என்ன அவங்களுக்குக் குறை.....?"

இப்படி ஆரம்பிக்கும் தூண்டில்.

என்ன உன் மாமியார் உனக்குச் செஞ்சு கிழிச்சுட்டது? என்னவோ மூன்றும் மனுஷா வந்து பாக்கறா மாதிரி நீ புள்ள பெத்தப்ப வந்து பாத்தா...."

கிராமத்து மாமியார் ஆசையாகச் செய்து கொண்டு வரும் திரட்டுப் பால் கூட எட்டிக் காயாகக் கசக்கும் மகளுக்கு.

இன்னும் சில அம்மாக்கள் உண்டு. பெண்ணின் வீட்டில்தான் தனக்கு சகல விதமான உரிமைகளும் உண்டு என்பது போல நடந்து கொள்வார்கள். அதுவும் சம்பாதிக்கும் பெண்ணாக இருந்தால் கேட்கவே வேண்டாம்.

"அது என்ன, மூணு மாசத்துக்கு ஒரு தடவை வந்து டேரா போட்டாறது உங்க நாத்தனார்காரிக்கு? எனக்குத்தன்னலேப்பா..."

விளைவு இரவு புருஷனுடன் சண்டை.

"இப்போ என்னன்னு உங்க தங்கச்சி இங்க வந்து நிக்கறா....?"

"என்ன வித்யா.. அண்ணனை பாக்கணும்னு வந்திருக்கா...."

மஞ்சுளா ரமேஷ்

"நல்லா இருக்கு. வர்றாளே, ஒரு துரும்பாவது எடுத்துப் போடறாளா? எங்கம்மாக்கு என்ன கடன். இந்த வீட்டுக்கு மாடா உழைக்கணுமின்னு....

"நீதானே சொன்னே, எங்கம்மா என்னோட இருந்தா 'சௌகரியமா இருக்குமின்னு....

"என் தலையில் எல்லாத்தையும் போட்டுடுங்க. நீங்கதான் உங்கம்மாவ கொண்டு வந்து, வச்சுக்கறதுதானே, என்னன்னு. அப்படியே மடமடன்னு வேலை செய்யறதுல கிளிதான்..."

இரவுத் தூக்கம், மறுநாள் டிபன் எல்லாம் குளோஸ் புருஷன்காரனுக்கு.

மன்னியின் 'உம்'மென்ற முகத்தையும், அத்தையின் பாராமுகத்தையும் பார்த்து ரெண்டாம் நாளே ஓட்டம் பிடித்த தங்கை அம்மாவிடம் போய் அழுவாள். விளைவு நீளக் கடிதம்.

"ஆனாலும் இப்படிப் பொண்டாட்டி வீட்டுக்காரங்களை வச்சுண்டு உபசாரம் பண்றவங்களை நான் பார்த்ததே இல்லையப்பா. உன்னைப் பெத்தவங்களை, கூடப் பொறந்தவங்களை மறக்கற அளவுக்கு அப்படி என்ன பொண்டாட்டி மயக்கம்..."

நண்பர்களிடையே கேலிச் சிரிப்பு வேற. ஐயாவுக்கென்ன, மாமியார் வீட்டோட..."

பாவம் மத்தளத்துக்கு ரெண்டு பக்கம் இடி..

இதில் அம்மாவின் மீது கூடத் தப்பு சொல்ல முடியாது. பெண் கூட வந்து இரு என்று சொன்னால் மறுக்க முடியாத. பரிதாபம், வயதால் வருகின்ற ஆற்றாமை, 'ஊரார் பெண் வீட்டில் இருக்கிறாள்' என்று பேசும் பேச்சால் வருகின்ற 'அவமானம், ஏதோ தான் எல்லோராலும் ஒதுக்கப்பட்டது போன்ற பிரமை எல்லாம் சேர்ந்து மனதைக் குழப்புகிறது.

அதனால் அவனுக்கு உலுக்கக் கிடைத்தவள் பெண்தான். அவளுக்குக் கிடைத்தது புருஷன்தான்.

பெண் இங்குதான் சிந்திக்க வேண்டும். சமூகக் கண்ணோட்டத்தில் அம்மா இருப்பது தப்பு என்றாலும், சௌகரியத்திற்காகச் சரிதான். ஆனால் பெற்றவள் கூட இருக்கும்போது முக்கால்வாசிப் பெண்கள் மனதால் குழந்தையாகத்தான் இருக்கிறார்கள்.

'இது என்னுடைய குடும்பம்; நான்தான் தலைவி' என்ற இல்லத்தரசிக்கான கம்பீரங்கள் வருவதில்லை. பிரச்னைகளுக்குப் பயந்து ஓடி ஒளியும் குழந்தையாக, உணர்ச்சி வயப்படும் சிறுமியாகத்தான் இருக்கிறாள்.

கூட்டுக் குடும்பமோ, தனிக் குடித்தனமோ, திருமணம் ஆகிவிட்டாலே பெண்ணின் பொறுப்புக்கள் ஏறிவிடுகின்றன. சிறகடித்துப் பறந்த கனவுகள் மாறிப் போய், மண்ணின் மேடு பள்ளங்களை அளக்க வேண்டியவளாகிறாள். மனிதர்களின் தாரதம்யங்களை உணர வேண்டியவளாகிறாள்.

'யார் என்ன சொன்னாலும் சீர் தூக்கி ஆராய வேண்டியவள் அவள்தான். குடும்பம் பூஞ்சோலையாக இருப்பது அவள் கையில்தான் இருக்கிறது. யார் 'கோள்' மூட்டினாலும், யார் தூற்றினாலும் குடும்ப முன்னேற்றமே வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொள்ள வேண்டியவள் பெண்.

கடமைகளும், உரிமைகளும் நிறைந்த அந்தப் பாத்திரத்தை ஜாக்கிரதையாகக் கையாள வேண்டியவள் அவசரப்பட்டு போட்டு உடைத்துவிடக்கூடாது.

வழக்கமான குடும்பங்களில் வருகின்ற பிரச்னைகளானாலும் சரி, மாறுபட்ட குடும்பங்களில் எழுகின்ற தகராறுகள் ஆனாலும் தீர்க்க வேண்டியவள் பெண்தான். குடும்ப விளக்கை அணையாமல் மட்டுமல்ல, அலையாமல் பாதுகாக்க வேண்டியவளும் அவள்தான்.



# சில வார்த்தைகள்



**முதல் பரிசு :**

**நவதான்ய பச்சடி.**

தேவையான பொருட்கள்:

சீரகம் — 1 ஸ்பூன்,
வெந்தயம் — 1 ஸ்பூன்,
கடுகு — 1 ஸ்பூன்,
பாசிப் பருப்பு — 1 ஸ்பூன்,
கடலைப் பருப்பு ஸ்பூன்,
புழுங்கலரிசி — 1 ஸ்பூன்,
மஞ்சள் — 1 துண்டு,
சுக்கு — 1 துண்டு,
கோதுமை — ½ கப்,
உளுத்தம்பருப்பு — ½ கப்,
தயிர் — ½ கப்,
மிளகாய் — 1,
கடுகு, உப்பு — சிறிதளவு.

செய்முறை:

மேற்கண்ட பருப்பு, தானிய வகைகளைத் தனியாக வாணலியில் மணம் வரும் வரை வறுத்து நன்றாகக் கலந்து மாவாக அரைத்து வைத்துக் கொள்ள வேண்டும். புளிக்காத தயிர் ½ கப் எடுத்து அதில் ஒரு மிளகாயைக் கிள்ளிப்போட்டுகடுகுதாளித்துஉப்புசேர்க்க வேண்டும். பிறகு நவதான்ய மாவில் 1 ஸ்பூன் போட்டுக் கலக்கினால் பச்சடி ரெடி. விரும்புகிறவர்கள் தக்காளியையோ, வெங்காயத்தையோ நறுக்கிப் போடலாம். இந்த மாவு ஒரு மாதத்திற்கு மேல் வரும். மணம் நிறைந்த சுவையான பச்சடி இது.

—லக்ஷ்மி சங்கர், சென்னை—59.

**இரண்டாம் பரிசு :**

**முருங்கைக் கீரை பச்சடி**

தேவையான பொருட்கள்:

பொரித்த அப்பளம் — 6,
முருங்கைக் கீரை — 100 கிராம்,
தயிர் — 400 மி. லி.
பெரிய வெங்காயம் — 1,
தக்காளி — 2,
உப்பு — தேவையான அளவு
தாளிக்க — 1 டீஸ்பூன் எண்ணெய்,
சீரகம் — 1 டீஸ்பூன்,

## இம்மாத



இம்மாத இவ்வத்தரசி போட்டிக்கு நடுவர்களாக இருந்தவர்கள்:
ஸ்ரீ வித்யா மாதர் சங்கம்,
புதுக் காலனி, சென்னை—44.

லக்ஷ்மி சங்கர்.





வித்யா

எஸ். சித்ரா.







விஜயா செளந்தரராஜன்

ராஜஸ்ரீ கோபாலன்

# இல்லத்தரசி

கடுகு — 1 டீஸ்பூன்,
வெந்தயம் — ½ டீஸ்பூன்,
பச்சை மிளகாய் — 4,
ரிபைண்ட் ஆயில் — 2 டேபிள் ஸ்பூன்,
தேங்காய்த் துருவல் — 2 டேபிள் ஸ்பூன்.

செய்முறை:

முருங்கைக் கீரையை ஆய்ந்து பொடிப் பொடியாக நறுக்கவும். இதை ஆவியில் வேக வைக்கவும். வெங்காயம், ப. மிளகாய், தக்காளி இவற்றைப் பொடியாக நறுக்கவும்.

தயிரில் உப்பு, தக்காளி, வெங்காயம், வேக வைத்த கீரை, தே. துருவல் ஆகியவற்றைக் கலக்கவும். பொரித்த அப்பளத்தை நொறுக்கி தயிரில் கலக்கவும். (நமத்த அப்பளமாக இருந்தாலும் சிறு துண்டுகளாக்கி உபயோகிக்கவும்.)

வாணலியில் எண்ணெய் விட்டு காய்ந்ததும் கடுகு போடவும். வெடித்ததும் சீரகம், வெந்தயம், ப. மிளகாய், உ. பருப்பு போட்டு வதக்கவும். இதை பச்சடியில் கொட்டிக் கலக்கவும்.

—எஸ். வித்யா, சென்னை—78.

மூன்றாம் பரிசு

ஸிங்தாரு கடி

தேவையான பொருட்கள்:

வேர்க்கடலை — ½ கோப்பை,
கடுகு — 1 மேசைக் கரண்டி,
தேங்காய் — 1 மூடி,
இஞ்சி — 1 துண்டு,
பச்சை மிளகாய் — 4,
கெட்டி மோர் — ½ லிட்டர்,
தாளிக்க — கடுகு, காயம், கறிவேப்பிலை.

செய்முறை:

வேர்க்கடலையை ஊற வைத்து, தேங்காய், பச்சைமிளகாய், இஞ்சி, கடுகு இவைகளுடன் நன்றாக அரைத்துக் கெட்டி மோரில் கலக்கி உப்பு சேர்த்து கடாயில் சிறிது எண்ணெயில் கடுகு காயம் கறிவேப்பிலை இவைகளைத் தாளித்து அரைத்த கலவையை விட்டு சிறிதே சூடாக்கி இறக்கிவிடவும். (கொதிக்கவைக்கக் கூடாது.)

—ராஜஸ்ரீ கோபாலன், பம்பாய்—22.

**ஆறுதல் பரிசு :**
**பிளாஸ்டிக் பச்சடி**

தேவையான பொருட்கள் :

1 ஒரிய பப்பாளிக்காய்
1 கப் சர்க்கரை (200 கிராம்).
1 எலுமிச்சம்பழம் பழம்.

செய்முறை:

பப்பாளிக்காயைத் தோலைச் சீவி நறுக்கி வறுவல் சீவலில் சீவி வைத்துக் கொள்ளவும். தண்ணீரை நன்றாக கொதிக்க வைத்து ஒரு சிறு துளி உப்பு சேர்த்து சீவிய பப்பாளித் துண்டங்களை போட்டு ஒரு நிமிடம் மூடி வைக்கவும்.

சர்க்கரையைக் கம்பிப் பாகாக வைத்துக் கொண்டு அழுக்கு நீங்கியபின் பப்பாளித் துண்டங்களை அதில் போட்டு எலுமிச்சம் பழ ரசத்தைப் பிழிந்து விடவும். இதில் பிளாஸ்டிக் தகடு போல் பப்பாளி ஆகி விடுவதால் இதற்கு பிளாஸ்டிக் பச்சடி என்று பெயர்.

—விஜயா சௌந்தரராஜன், கல்கத்தா—26.

**ஆறுதல் பரிசு :**
**வெஜிடபிள் மசாலா பச்சடி**

தேவையான பொருட்கள் :

பெரிய சைஸ் உருளைக்கிழங்கு — 2.
உளுத்தம்பொடி (வறுத்தது) 2 டேபிள் ஸ்பூன்.
தேங்காய் துருவல் — 2 டேபிள் ஸ்பூன்.
கொத்துமல்லி தழை — சிறுகட்டு.
தயிர் (புளிக்காதது) — 2 கோப்பை.
பச்சை மிளகாய் — 3.
தக்காளி — 1.
காரட் — 1.
பெரிய வெங்காயம் — 1.
தாளிக்க கடுகு உளுத்தம்பருப்பு—சிறிது.
உப்பு — தேவையான அளவு.
இஞ்சி — 1 துண்டு.

செய்முறை:

உருளைக் கிழங்குகளைச் சுட்டு மேல் தோலை அகற்றி உரித்து வைக்கவும். காரட்டைக் கொப்பரை சீவியில் சன்னமாகத் துருவவும். இஞ்சி, மல்லி, பச்சை மிளகாய், தேங்காய்த் துருவலை அம்மியில் நைஸாக அரைக்கவும். வெங்காயத்தை மெலிதாக நீளவாட்டத்தில் நறுக்கவும். மசாலா கலவையுடன் காரட், வெங்காயம், உருளைக்கிழங்கு, நறுக்கிய தக்காளி, உளுத்தமாவு, பிறகு தயிருடன் சேர்த்துக் கலந்து தேவையான உப்பு போட்டு கடுகு, உளுத்தம்பருப்பு தாளிக்கவும். விருந்திற்கு ஏற்ற மசாலா பச்சடி.

—எஸ். சித்ரா, பெரியகுளம்.

**அட்டை வண்ணப் படம் : யோகா**



# காலைப் புதுமை மாலைவரை நீடிக்கச் செய்யுங்கள்!

புதியது






<u>உண்மையான</u> புத்துணர்ச்சி. மற்ற சோப்புகள் தரும் குறைந்த நேர புத்துணர்ச்சி அல்ல. நாள் முழுவதும் உடலின் வியர்வை நாற்றமின்றி திகழும் புத்துணர்ச்சி! புதிய ஸின்த்தால் மட்டுமே அதனைத் தரவல்லது. இப்போது, ஒரு புதிய அற்புத நறுமணம் ஸின்த்தாலில் உள்ளது.

மேலும் அதன் சக்திவாய்ந்த வியர்வை துர்நாற்றம் போக்கும் தன்மை, சரும கிருமிகளை ஒழித்து உங்களை நாள் முழுவதும் நாற்றமின்றி புத்துணர்ச்சியுடன் வைத்திடும்.

**ஸின்த்தால்** மட்டுமே

உங்களை புத்துணர்ச்சியுடன் வியர்வை நாற்றமின்றி நாள் முழுவதும் வைத்திடும்.

Godrej
தயாரிப்பு





# புருவமே முகத்திற்கு அழகு!

ஒரு பெண்ணுடைய முழு அழகை வருணிக்கும் போது கண், மூக்கு, வாய் இவற்றுடன் பார்வையில் படுவது புருவமும் ஆகும். சீரற்ற புருவம் நமது தோற்றத்தையே கெடுக்கும்.

நமக்கு முதலில் புருவத்தை முறைப்படி சீர்திருத்தத் தெரிந்திருக்கவேண்டும். இல்லாவிடில் நமது முகப் பொலிவே கெட்டுவிடும். சிலர் பிளேடு, ரேசர், கத்தி, கத்தரிக்கோல் போன்றவற்றைப் பயன்படுத்தி புருவத்தை சீர்ப்படுத்துகிறேன் என்று சீர்குலைப்பதோடு கண்ணுக்கே ஆபத்தை வரவழைத்துக் கொள்கிறார்கள். மேலும் இக்கருவிகள் மூலம் புருவத்தை எடுத்தால் நாளடைவில் அந்த இடம் பச்சையாக உரு மாறி, சொரசொர வென்று அதன் தன்மை மாறி, சில சமயங்களில் கண்ணில் பட்டு ஆபத்தை விளைவிக்கும்.

புருவத்தைச் சீராக்க நல்ல பயிற்சி வேண்டும். அதற்கென சில விதிமுறைகள் உண்டு. அவற்றைக் கடைப்பிடித்தால் கண்டபடி 'ஷேப்' செய்வதைத் தடுக்கலாம். நல்ல முறையில் 'ஷேப்' செய்த புருவம் முகத்திற்கு நல்லதொரு தோற்றத்தையும், பொலிவையும் கொடுக்கும். நிறைய பேருக்கு ஐ ப்ரோ லைன் எனப்படும் இடத்திற்குக் கீழும், மேலும் கண்டபடி முடி வளர்ந்திருக்கும். சிலருக்கு இரு புருவங்களுக்கு இடையிலும் முடி நிறைய இருக்கும். இவற்றை அகற்றி முகத்திற்கு எடுப்பான புருவத்தை அமைக்கவேண்டும்.

சிலருக்கு நூலினால் அல்லது இடுக்கியினால் முடியை எடுக்கும் போது வலி அதிகமாக இருக்கும். அதை முதலில் பொறுத்துக் கொண்டால் பிறகு பழக்கமாகி விடும். புருவத்தை அடர்த்தியாக சீராக்குவதைக் காட்டிலும் ஓரளவு மெலிதான புருவம் நல்ல தோற்றத்தைக் கொடுக்கும். ஏனெனில் கண்ணிற்கும் புருவத்திற்கும் மத்தியிலுள்ள பாகம் அடர்த்தியான புருவத்தால் சுருங்கி, கண்களை எடுப்பாகக் காட்டாது. அதே சமயம் புருவத்தை ஓரளவு மெலிதாக எடுத்தால் கண்ணிற்கும், புருவத்திற்கும் மத்தியிலுள்ள இடம் விரிந்து கண்கள் அகன்று எடுப்பாகக் காட்சியளிக்கும். முகமும் கம்பீரமாக இருக்கும்.

புருவங்களை பிரஷ் (பல் துலக்கும் சிறிய பிரஷ் போதும்) கொண்டு சீராக்கிய பின் அடர்த்தியில்லாத வெற்றிடங்களில் ஐப்ரோ பென்சில் கொண்டு அழுத்திக் கோடாக வரையாமல் அந்த இடங்களில் மட்டும் மயிரிழை போன்ற (**Featherly strokes**) கோடுகள் வருமாறு சரி செய்ய வேண்டும். அழுத்தமாக ஒரே கோடாக இந்தக் கடைசியிலிருந்து அந்தக் கடைசி வரை வரைந்தால் மிகவும் செயற்கையாகவும் அதேசமயம் விகாரமாகவும் தோற்றமளிக்கும். பென்சிலால் வரையும் போது இயற்கையாக நமது புருவ முடிகளைப் போன்றே தோன்றுமாறு புருவம் காணப்பட வேண்டும்.

மேலும் புருவத்தை 'ப்ளீச்' செய்யக் கூடாது. ஏனெனில் முகத்திற்கு 'ப்ளீச்' செய்த புருவம் நிறம் மாறி முகத்தின் நிறத்திலிருந்து வேறுபட்டுத் தோன்றும். கண்ணாடியில் பார்க்கும்பொழுது உங்கள் புருவம் மிகவும் அடர்த்தியாக, முகத்தோடு ஒட்டாமல் தனித்து இருந்தால் நல்ல அழகுக் கலை நிபுணர்களைக் கொண்டு சரி செய்து கொள்ள வேண்டும். இது மிகவும் எளிதான கலைதான்.

ஐ—ஷேடோ போடும்போது இமையின் வெளிப்புறமாகப் பரவிவிட்டுக் கன்னக்கதுப்புக்களின் நிறத்தோடு கலந்து வருமாறு போட்டுக் கொண்டால் மிகவும் அழகாக இருக்கும்.

மல்லிகா & பார்வதி.



# நாற்பதில் தொடரும் தொல்லை



**பெ**ண்களுக்கு மாதவிலக்கு ஏன் நிற்கிறது என்பதையும், அப்போது அவர்களுக்கு உடலில் ஏற்படும் பல்வேறு தொல்லைகளையும் விளக்குகிறார் சென்னை மாவட்ட குடும்ப நலத்துறையில் பேறுகாலப் பின் பணித் திட்டத்தில் மருத்துவ அதிகாரியாகப் பணிபுரியும் கைனகாலஜிஸ்ட் டாக்டர் திருமதி. கொடிமணி ஷண்முகசுந்தரம் அவர்கள்.

டாக்டர், பெண்களுக்குக் குறிப்பிட்ட வயதில் மாதவிலக்கு நிற்பது ஏன்?

டாக்டர் கொடிமணி: பெண்கள் வயதுக்கு வரும்போது ஈஸ்ட்ரோஜன் (oestrogen) என்னும் திரவம் சினைப்பைகளில் அதாவது ஓவரிகளில் சுரக்கத் தொடங்கும். இதன் காரணமாக மாதவிலக்கு ஏற்படுவதுடன் உடலில் பல்வேறு பாகங்களில் வளர்ச்சியும் மாற்றங்களும் ஏற்படும். ஆனால் பெண்கள் 40 வயதை அடையும் போது வயோதிகம் காரணமாக ஈஸ்ட்ரோஜன் சுரக்கும் அளவு படிப்படியாகக் குறைகிறது. எனவே மாதவிலக்கு நிற்பதுடன் உடலில் பல்வேறு தேய்வும், மாற்றங்களும் ஏற்படும். இந்தக் காலத்தையே 'மெனோபாஸ்' என்கிறோம்.

சில பெண்களுக்கு 40 வயதிலும், வேறு சிலருக்கு 50 வயதிலும் மாதவிலக்கு நிற்கிறது. இதற்கு என்ன காரணம்?'

டா: சராசரியாக நாற்பத்தைந்து வயதில் மாதவிலக்கு நிற்கும். மற்றபடி 40 முதல் 50 வயது இடைவெளி வரைக்கும் நிற்பது இயல்பு. ஆனால் 8% பெண்களுக்கு 40 வயதுக்குள் நின்றுவிடும். இது அவர்கள் குடும்ப வாகு அல்லது பரம்பரை இயல்பு என்று கூறலாம். எல்லாவற்றுக்கும் காரணம் ஈஸ்ட்ரோஜன் சுரக்க வேண்டிய அளவு சுரக்காமல் குறைவதுதான்.



**சின்ன வயதிலேயே வயதுக்கு வந்து விட்டால் சீக்கிரமே மாதவிலக்கு நிற்கும் என்பதும் தாமதமாக வயதுக்குவந்தால் மாதவிலக்கும் தாமதமாக நிற்கும் என்பதும் உண்மையா?**

டா: இது வெகு பரவலாக உள்ள ஒரு கருத்து. மாதவிலக்கு நிற்பதற்கும் ஒரு பெண் பருவமடைந்த வயதிற்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை. இது மட்டுமல்ல, ஒரு பெண்ணிற்கு எந்த வயதில் திருமணம் ஆனது, அவளுக்கு எத்தனை குழந்தைகள், அவளது எடை, உயரம் என்ன என்பவற்றிற்கும் மாதவிடாய் நிற்கும் வயதிற்கும் எவ்விதத் தொடர்பும் கிடையாது.

**நல்ல ஆரோக்கியமான பெண்ணிற்கு மாதவிலக்கு நிற்பதற்கான அறிகுறிகள் யாவை?**

டா: ஒரு பெண் பருவமடைந்தபோது என்ன நடந்ததோ அதற்கு நேர் மாறாக இக்காலத்தில் நிகழும். உதாரணமாக மாதவிலக்கு 15 அல்லது 20 நாட்களுக்கு ஒருமுறை ஏற்படும். ஆனால் உதிரப் போக்கின் அளவு குறைவாக இருக்கும். பிறகு சில மாதங்கள் சென்றதும் மூன்று மாதங்களுக்கு ஒரு முறையும், பிறகு 6 மாதங்களுக்கு ஒருமுறையும், கடைசியாக ஒரு வருடத்திற்குப் பின், ஒரு முறையும் வரும். ஆனால் அப்போதும் உதிரப்போக்கின் அளவு குறைவாகவே இருக்கும். இத்தகைய பெண்கள் பயப்படத் தேவையில்லை. இருப்பினும் மருத்துவரை நாடி இது மெனோபாஸ்தானா என்பதை உறுதி செய்ய வேண்டியது அவசியம்.

தீபாவளிக்கு ஒரு மாத முன்பே கைகாலில் தீப்புண்களை வரவழைக்கும் சாமர்த்தியம் நம் குழந்தைகளுக்கு உண்டு. ஒரு கிண்ணத்தில் சிறிதளவு சுண்ணாம்பு போட்டுத் தேங்காய் எண்ணெய் விட்டு நன்றாகக் குழையுங்கள். வெண்ணெய் மாதிரி வரும். பர்னால் இல்லாத கவலை விட்டு ஒரு சிட்டிகை நல்ல மஞ்சள் பொடி போட்டுப் புண்ணில் தடவுங்கள். நன்றாக ஆறும்.

—சித்ரா.

**சிலர் மாதவிலக்கு நின்று ஒன்றரை அல்லது இரண்டு வருடங்கள் கழித்து மீண்டும் உதிரம் கண்டோம் என்கிறார்களே, இது எதனால்?**

டா: இப்படி உதிரம் கண்டால் இது சில சமயங்களில் ஆரம்பப் புற்று நோயின் அறிகுறியாக இருக்கலாம். எனவே டாக்டரை உடனே கண்டு பரிசோதித்துக் கொள்ள வேண்டும்.

**சில பெண்கள் மெனோபாஸ் சமயத்தில் அடிக்கடி மாதவிலக்கு ஏற்படுவதாகவும் மிகுதியாக உதிரம் போவதாகவும், இந்த நிலை 10 அல்லது 15 நாட்கள் நீடிப்பதாகவும் கூறுகிறார்களே, அது எதனால் டாக்டர்?**

டா: மெனோபாஸ் சமயத்தில் அதாவது 40 வயதுக்குமேல் மாதவிலக்கு ஏற்படும்போது அதிக உதிரப்போக்கு ஏற்பட்டால் உடனே மருத்துவரிடம் சென்று பரிசோதனை செய்துகொள்ள வேண்டும். மாதவிலக்குநிற்பதற்காகத்தான் அதிகமாகப் போகிறது என்று அசிரத்தையாக இருந்துவிடக்கூடாது. ஏனெனில் கருப்பையில் அல்லது சினைப்பைகளில் கடுமையான ரணம் (Infection), கட்டி அல்லது புற்றுநோய் இருக்கலாம். இவைகள் காரணமாக அதிக உதிரப் போக்கு ஏற்படும். மேலும், சுரப்பிகள் சரிவர இயங்காவிட்டாலும், கருப்பையின் உள்பாகம் தடித்து அதிக உதிரப்போக்கு ஏற்படலாம். இதை மருத்துவத்துறையில், ஃபங்ஷனல் யுடரின் ப்ளீடிங் (Functional uterine Bleeding) என்று கூறுவோம்.

**ஏன் பெரும்பாலும் மெனோபாஸ் சமயத்தில்புற்றுநோய்கருப்பையில்**

வருகிறது? கட்டியும் சில சமயம் வருகிறதே?

டா: பெரும்பாலும் கர்ப்பப்பையில் புற்றுநோய் 40 வயதுக்கு மேல்தான் வரும். மாதவிலக்கு நிற்கும் காலமும் இதுவே. இதனால்தான் நமக்கு மாதவிலக்கு நிற்கும் காலத்தில் இவை உண்டாவது போல் தோன்றுகிறது. ஃபைப்ராய்டு என்ற கட்டிக்கு வயது வரம்பு கிடையாது. 24 வயதில் கூட இது வரும். அதிகக் குழந்தைகள் பெற்ற தாய்மார்களுக்குக் கருப்பையின் வாய்புறத்தில் புற்றுநோய், அதாவது கான்சர் ஸெர்விக்ஸ்-வர அதிக வாய்ப்பு உண்டு. எனவேதான் குடும்பக் கட்டுப்பாடு ரீதியில் நாங்கள் அதிகப் பிள்ளைகள் பெற்றுக் கொள்ளாதீர்கள் எனக் கூறுகிறோம். அதனால் மெனோபாஸ் சமயத்தில் எல்லோருக்கும் புற்றுநோய், கட்டி இவை வரும் என்று பயப்பட வேண்டாம்.

சில பெண்கள் மாதவிலக்கு நிற்கும் சமயத்தில் உதிரத்தின் நிறம் மிகவும் வெளிரியதாக இருப்பதாகக் கூறுகிறார்களே, அதற்கு என்ன காரணம் டாக்டர்?

டா: ரத்த சோகை காரணமாக இருக்கும். சில சமயம் கான்சர் இருக்க வாய்ப்பு உண்டு. கர்ப்பப்பை வாயில் புண் இருந்தாலும் வெள்ளை கலந்த உதிரம் வெளிப்படும். எதுவாயினும் மருத்துவ ஆலோசனைப் பெற வேண்டியது அவசியம்.

சில பெண்களுக்கு இளம் வயதிலேயே அதாவது 30 அல்லது 35 வயதிலேயே மாதவிலக்கு நின்று போகிறது. இது எதனால்? என்ன சிகிச்சை அளிக்கிறீர்கள்?

டா: இதற்குப் பல காரணங்கள் உண்டு. சில முக்கிய காரணங்களை மட்டும் கூறுகிறேன். 1. குடும்ப வாகு காரணமாக இருக்கலாம். 2. புகை பிடிப்பதால் மாதவிடாய் அகாலமாக நின்றுவிடும். நம் நாட்டில் இந்த பிரச்சினை அதிகமில்லை. 3. திரவம் சுரக்கும் தன்மையை சினைப்பைகள் காலவரம்புக்கு முன்னதாகவே இழந்து விடுகின்றன. இதற்குக் காரணம் கூற முடியவில்லை. அந்தப் பெண்ணிற்குக் குழந்தைகள் இருந்தால் அப்படியே விட்டுவிடலாம். இல்லாவிட்டால் சிகிச்சை அளிப்பதால் பயன் ஏற்படலாம். 4. கர்ப்பப்பையில் காச நோய் இருந்தாலும் மாதவிலக்கு நின்று விடும். இதற்குக் காசநோய்க்குரிய மருந்துகளைக் கொடுக்க வேண்டும். 5. மன நோய் காரணமாக குண்டாக இருக்கும் சிலர் திடீரென மெலிந்து விடுவார்கள். இதனை அனோரெக்ஸியா நெர்வோஸா என்கிறோம். இந்தப் பெண்களுக்கும் மாதவிடாய் விரைவில் நின்றுவிடும். இதற்கு மனநோய் மருத்துவர் அளிக்கும் சிகிச்சையே சிறந்தது.

தொட்டில்களில் ஆட்டி வளர்க்கப்படும் குழந்தைகள் நன்கு வளர்கின்றன. இவ்வாறு ஆட்டி வளர்க்கப்படும் குழந்தைகளின் உறுப்புகள் அதிர்வடைவதன் காரணமாக அவை சீக்கிரம் வளர்ச்சி அடைகின்றன என்று ஒஹியோ பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த டாக்டர் டேவிட் கிளார்க் கண்டுபிடித்துள்ளார்.

— எஸ். முகம்மது யூசுப்.

எந்த ஒரு சூழ்நிலையில் ஒரு பெண்ணிற்கு செயற்கை முறையில் மாதவிலக்கை நிறுத்துகிறீர்கள்?

டா: கர்ப்பப்பை, சினைப்பை இவைகளில் தோன்றும் நோயை குணப்படுத்த அறுவை சிகிச்சை மூலமோ, கதிர் வீச்சு முறையிலோ சிகிச்சை அளித்தால் அப்பெண்ணிற்கு மாதவிலக்கு நின்றுவிடும். 1. கர்ப்பப்பையில் அதிக அளவு கட்டிகள் இருந்தாலும். 2. சினைப்பைகளில் கட்டி இருந்தாலும் 3. D and C செய்த பிறகும் அதிக அளவு இரத்தப் போக்கு இருந்தாலும், சாதாரண சிகிச்சை மூலமும் குணப்படுத்த முடியாத புண் கருப்பையின் வாயில் இருந்தாலும், கர்ப்பப்பையில் ஆரம்பப் புற்று நோய் இருந்தாலும் கர்ப்பப் பையையே அறுவை சிகிச்சை மூலம் நீக்கிவிடுவார்கள். அதன்பிறகு மாதவிடாய் ஏற்படாது. 1. அதிக இரத்தப் போக்கு இருந்தாலும் 2. அறுவை சிகிச்சை செய்ய

முடியாத புற்றுநோய் ஏற்பட்டிருந்தாலும், 5. பெண் அறுவைச் சிகிச்சைக்கு தகுதியற்றவளாக இருந்தாலும் கதிர் வீச்சு முறையில் சிகிச்சை அளிக்க வேண்டும். 4. மார்பகங்களில் புற்று நோய் இருந்தால் சினைப்பைகளில் உற்பத்தியாகும் ஈஸ்ட்ரோஜன் அதை அதிகமாகப் பரப்ப உதவும். எனவே மார்பகத்தை அறுவை சிகிச்சை மூலம் நீக்கிவிட்டு சினைப்பைகளை எடுக்க வேண்டும். மேற்கண்ட காரணங்களாலும் ஒரு பெண்ணிற்கு மாதவிலக்கு நின்றுவிடும்.

சில பெண்கள் 52 வயதுக்கு மேலும் ஒழுங்காக மாதவிடாய் ஆவார்கள். இவர்கள் மருத்துவர்களை நாடி சோதனை செய்து கொள்ள வேண்டுமா?

டா: 52 வயது வரை மாதவிலக்கு ஏற்பட்டால் உதிரப் போக்கு அளவாகவோ, அதிகமாகவோ இருந்தாலும் கவனிக்காமல் விட்டுவிடக் கூடாது. அதிக உதிரப்போக்கு, கர்ப்பப்பையில் வீக்கம் அல்லது புற்றுநோய் காரணமாக ஏற்படலாம். மருத்துவ ஆலோசனை பெற வேண்டும்.

நிறைய குழந்தைகள் பெற்றவர்களும் அடிக்கடி கருச்சிதைவு செய்து கொள்பவர்களும் மெனோபாஸ் சமயத்தில் தனிப்பட்ட முறையில் ஏதாவது உடல் உபாதை உள்ளதாகக் கூறுகிறார்களா?

டா: அதிகக் குழந்தைகள் பெற்ற பெண்களுக்குப் பெரும்பாலும் மெனோபாஸ் சமயத்தில் கர்ப்பப்பை தளர்ந்து இறங்கிவிடும். இதை புரோலேப்ஸ் அதாவது 'அடி இறங்குதல்' என்கிறோம். இவர்கள் சிறுநீர், மலம் கழிக்கும்போது கர்ப்பப்பை வெளியே வந்து தொல்லை கொடுக்கும். கருச்சிதைவு அடிக்கடி செய்து கொண்டால் கருப்பையின் உள்ளும், கருப்பை வாயிலும் புண்ணோ, புற்றுநோயோ உண்டாக அதிக வாய்ப்பு உண்டு. இதனால் கருச்சிதைவு அடிக்கடி செய்து கொள்ளாமல் ஒரு குழந்தை பிறந்தவுடன் தற்காலிகக் குடும்பக் கட்டுப்பாடு முறையோ, அல்லது இரண்டு பிள்ளைகளுக்குப் பின் நிரந்தர குடும்பக்கட்டுப்பாடு முறையையோ கையாளுவது நல்லது.

திருமணம் செய்து கொள்ளாத பெண்களுக்கும், திருமணமாகிக் குழந்தைகள் பிறக்காத பெண்களுக்கும் மெனோபாஸ் சமயத்தில் பிரச்னைகள் குறைவுதானே?

டா: ஓரளவுக்குக் குறைவுதான். மற்றபடி இவர்களில் சிலருக்கு கர்ப்பப்பையில் ஃபைபராய்டு எனப்படும் கட்டி ஏற்பட அதிக வாய்ப்பு உண்டு. புற்றுநோயும் ஏற்படலாம். அதிக உதிரப்போக்கும் ஏற்படலாம். எல்லாப் பெண்களையும் போலவே இவர்களும் சில காலம் உடல் மாற்றங்களுக்கும் தொல்லைகளுக்கும் உட்பட்டே ஆக வேண்டும்.

மாதவிலக்கு நிற்பது தவிர மெனோபாஸ் சமயத்தில் உடலில் என்னென்ன மாற்றங்கள் நிகழும்?

(இதற்கு விடை அடுத்த இதழில்.)

பேட்டி:

**தாம்பரம் லக்ஷ்மிசங்கர்.**

வாழைத்தண்டை பொடிப்பொடியாக நறுக்கி, அதனுடன் பொடிப் பொடியாக நறுக்கிய காரட், பீட்ரூட், பிஞ்சு அவரைக்காய் (பத்து), பொடிப் பொடியாக நறுக்கிய கோஸ் தக்காளி, இவைகளுடன் சிறிது உப்பு, பச்சை மிளகாய் எலுமிச்சம் பழச்சாறு கலந்து சாலட் செய்தால், குழந்தைகள் மிகவிரும்பி சாப்பிடுவார்கள்: உடம்பிற்கும் மிகவும் சத்துள்ளது. எல்லா காய்கறிகளும் பச்சையாக இருக்க வேண்டும். முள்ளங்கி வாசனை பிடித்தவர்கள் பிஞ்சு முள்ளங்கி (வெள்ளை) பொடிப் பொடியாக நறுக்கி கலக்கலாம்.

— ஆனந்தவல்லி.

# புதிய தீபாவளி வாழ்த்து



கேசட்டில் இருக்கும் பதிவு நாடா சில சமயம் ஒட்ட முடியாத அளவிற்கு அறுந்தோ, அல்லது பாடல் பதிவு செய்ய முடியாத அளவிற்கு வீணாகியோ விடுகிறது. இவற்றைத் தூக்கி யெறியாமல் பயன்படுத்தலாமே!

தேவை:

பதிவு நாடா, கோந்து, கார்ட் போர்டு பேப்பர்கள், அல்லது கிரீட் டிங்ஸ்கார்டுகள், சிறிய கத்தரிக்கோல். (நீங்களாகக் கற்பனை பண்ணிப் படம் வரைய பென்சில் ரப்பர் வைத்துக் கொள்ளுங்கள்.)



இதில் தென்னைமரம், அதன் கீழ் ஒரு வீடு, மரத்தில் அருகில் பறவைப் பறப்பதுபோல்ஒட்டலாம். பூஜாடியில் பூ இருப்பது போல் ஒட்டலாம்.

வரைந்திருக்கும் படத்தின்மேல் கோந்தைபிரஷ்கொண்டுதடவி அதன் மேல் டேப்பை எளிதாக ஒட்டிவிட லாம்.

இதேபோல் பூஜாடியிலும் பூங் கொத்து இருப்பது போல் வெட்டி ஒட்டலாம். பூஜாடி முழுவதும் நாடா வால் ஒட்டி விட வேண்டும். (படத்தில் உள்ளது போல்).

உங்களுக்குப் பிரியமானவர்க ளுக்கு உங்கள் கைப்பட இப்படி வாழ்த்துக் கார்டுகள் செய்து அனுப் பினால் அவர்கள் படும் சந்தோஷத்தை சொல்லவும் வேண்டுமோ?

கார், (பஸ்) வைத்திருப்பவர்கள் நாடாக்களை ஒரு 9'' நீளத்திற்கு சீராக நிறைய வெட்டி எடுத்து எல்லாவற் றின் முனையையும் சேர்த்து சிறு ரப்பர் பேண்டு கொண்டு சுற்றி, பின் நூலால் கட்டிவிட வேண்டும். கடைகளில் கிடைக்கும் பிளாஸ்டிக் மணியை வாங்கி கட்டிய முனை அதனுள் இருக்கு மாறு கோர்த்து, காருக்குள் இருக்கும் கண்ணாடியின் பின் கட்டிவிடலாம். அழகாக இருக்கும்.

பெரம்பலூர் சகுணா.—

# ஷோபா

சென்னை நகரசபை இண்டோர் ஸ்டேடியம். சுந்தரம் பாஸனர்ஸ் நிறுவனத்தின் ஆதரவில் நடைபெறும் டேபிள் டென்னிஸ் போட்டிகள் மும்முரமாக நடக்கின்றன.

"டேபிள் டேன்னிஸில் பி. வித்யா, பி. விஜி சகோதரிகளைப் போல ஷோபா தீபா சகோதரிகள் முன்னணி நட்சத்திரங்களாகப் பரிமளிக்கிறார்கள்!" என்றார் 'பின்னி' கிருஷ்ணஸ்வாமி.



சுந்தரம் பாஸனர்ஸ் டேபிள் டென்னிஸ் ஜூனியர் போட்டியில் வெற்றி பெற்ற குமாரி தீபா தனக்குக் கிடைத்த பரிசுத்தொகையை அப்படியே டேபிள் டென்னிஸ் சாம்பியன் சந்திரசேகர் சிகிச்சை நிதிக்கு வழங்கியிருக்கிறார்.

"நான்தான் தீபாவை விட வயசில் மூத்தவள். ஆனால் அவள் ஆட்டத்தில் என்னை விடக் கெட்டிக்காரி. இருவருமே திருச்சியிலுள்ள செயிண்ட் ஜோசப் ஆங்கிலோ இந்தியப் பள்ளியில் பயில்கிறோம். முதலில் நான் டென்னிஸில்தான் கவனம் செலுத்தினேன். சரியான 'கோச்' கிடைக்காததால் டேபிள் டென்னிஸுக்கு வந்தேன். எனக்கு டீ.வி. ஸ்ரீராம் 'கோச்' ஆக இருந்து கற்றுக் கொடுத்தார். 1984—ம் வருஷம் டேபிள் டென்னிஸ் போட்டியில் ஜூனியர் ராங்க் நம்பர் ஒன்! ஆஜ்மீர்லே தேசிய போட்டியிலே இரட்டையர் போட்டியில் இருவருமே வெற்றி பெற்றிருக்கிறோம்!" என்கிறார் ஷோபா.

"நான் என் அக்காவுக்கு முந்தியே 1981—லிருந்து டேபிள் டென்னிஸ் ஆடி வருகிறேன். எனக்கு ஐ. ஸி. எப். ராமச்சந்திரன் "கோச்!" எனது முதல் பந்தயம் 1982 பாரீஸ் ரிக்ரியேஷன் கிளப் போட்டியாகும். ஆஜ்மீரில் சப் ஜூனியர் தேசியப் போட்டியில் வெற்றி பெற்றேன். எனது 1984ம் வருஷ சிறப்பான ஆட்டத்துக்காக ஜப்பானுக்குப் பயிற்சிக்குச் செல்லும் வாய்ப்பு கிட்டியது. பெங்களூரிலிருந்து பூர்ணிமாவும் என்னுடன் ஜப்பானுக்கு வந்தாள். ஆஜ்மீரில் செமி பைனல் ஆட்டத்தில் செயிடா லிதாஸுடன் ஒன்றரை மணிநேரம் ஆடி ஜயித்ததுதான் எனது மறக்க முடியாத மாட்ச்!"

ஷோபாவும் தீபாவும் திருச்சியில் தினம் இரண்டு மணிநேரம் டேபிள் டென்னிஸ் பயிற்சி செய்கிறார்கள். விடுமுறை நாட்களில் கூடுதலாக ஒரு மணி நேரம் இவர்களுக்கு ஆட முடிகிறது. இவர்களது தந்தை லக்ஷ்மணன் திருச்சியில் பஜாஜ் ஸ்கூட்டர் விற்

# தீபா

பணியாளர்; தமிழக டேபிள் டென்னிஸ் சங்கத்தின் காரியதரிசி.

இளம் டேபிள் டென்னிஸ் நட்சத்திரங்களைப் பற்றி சாம்பியன் சந்திரசேகரிடம் கேட்ட போது: "இரு சகோதரிகளும் டேபிள் டென்னிஸில் முன்னேறி வருகிறார்கள். தீபா விடம் நல்ல ஆட்டக்காரிக்கான 'டெக்னிக்' முழுதும் இருப்பதைக் காணலாம். சர்வதேச அரங்குகளில் தீபா நல்ல பெயர் வாங்கித் தருவாள்!"

தமிழ்நாடு டேபிள் டென்னிஸ் ஆட்டக்காரர்கள் நல சங்கத்தின் தலைவர் பாலாஜியிடம், "தமிழ்நாட்டில் டேபிள் டென்னிஸ் சங்கம் இருக்கும் போது விளையாட்டுக்காரர்கள் நல சங்கம் உருவாக்க வேண்டிய அவசியமென்ன?" என்று வினவினேன்.

"உங்களுக்கு 1977 ல் நிகழ்ந்த ஒரு கசப்பான நிகழ்ச்சியைத் தெரிவிக்க வேணும். 1977 டிசம்பரில் குஜராத்திலுள்ள வல்லப வித்யா நகர் தேசியப் போட்டியில் டீம் போட்டிகளுக்குப் பிறகு நிர்வாகிகள் டேபிள் டென்னிஸ் ஆட்டக்காரர்கள் பங்கஜ் புட்டாலியா ஜெயந்த், சாய்குமார் மீது போலீஸ் கம்ப்ளெய்ண்ட் கொடுத்து அவர்கள் வந்து கலந்து கொண்டால் சட்ட ஒழுங்கு கெடும் என்று தெரிவித்து விட்டார்கள். அந்த மூன்று ஆட்டக்காரர்களையும் போலீஸ் வானில் அழைத்துச் சென்று ஒரு நாள் லாக்கப்பில் வைத்து விட்டார்கள். டேபிள் டென்னிஸ் ஆட்டக்காரர்களுக்கு ஏற்பட்ட இந்த அபகீர்த்தியைக் குறித்துப் பலத்த சர்ச்சை எழுந்தது!

இந்த மாதிரி டேபிள் டென்னிஸ் ஆட்டக்காரர்களுக்கு நேரக் கூடாதென்பதற்காகத்தான் தமிழகத்தில் வி. சந்திரசேகர் வீட்டில் பல டேபிள் டென்னிஸ் ஆட்டக்காரர்கள் ஒன்று கூடித் தமிழக டேபிள் டென்னிஸ் ஆட்டக்காரர்கள் நல சங்கம் தோற்றுவித்தனர். இன்று தமிழகத்தில் தமிழக டேபிள் டென்னிஸ் சங்கமும், தமிழக டேபிள் டென்னிஸ் விளையாட்டுக்காரர்கள் நல சங்கமும் ஒருங்கிணைந்து தமிழக டேபிள் டென்னிஸ் ஆட்டக்காரர்கள் நலனுக்குப் பாடுபடுகிறது!" என்று விவரித்தார் தலைவர் பாலாஜி.

தமிழக டேபிள் டென்னிஸ் சாம்பியன் சந்திரசேகர் உடல் நலனுக்காக இவ்விரு சங்கங்களும் எடுத்துக்கொள்ளும் முயற்சிகள் பாராட்டுக்குரியவை. டேபிள் டென்னிஸ் சிறுமி தீபாவின் சிறு நன்கொடை இனி பெருவெள்ளமாகச் சேரும் என்ற நம்பிக்கை ஒளியைத் தருகிறது.

பி. எஸ். மணி.

புகைப்படங்கள்: திவாகர்



# தீபாவளியா? தீப்புண்ணா?

அந்த இளைஞருடன் அறிமுகம் செய்து கொண்டபின், கைகுலுக்குவதற்காக என் கையை நீட்டினேன். "மன்னிக்கவும்!" என்று அவர், உட்புறமாக வைத்துக் கொண்டிருந்த தன் இரு கரங்களையும் மேஜை மீது வைத்தார். என்ன கொடுமை! அவருடைய இரண்டு கைகளும் தீக்காயத்தால் வெந்து இருந்தன. "இவை, தீபாவளிப் பட்டாசு தந்த பரிசுகள்" என்று அவர் வேடிக்கையாகக் கூறியதைக் கேட்க மிகவும் அதிர்ச்சியாக இருந்தது. தீபாவளி முடிந்து ஒரு மாதம் ஆன போதிலும், தீக்காயம் பட்ட இடங்களில் கொப்புளங்கள் ஆறாமல் நீர் வடிந்து கொண்டு இருந்தது. இவர் என்ன விபரம் அறியாத சிறுவரா? எப்படி இவ்வளவு அஜாக்கிரதையாக இருந்தார்? என்ற எண்ணமே எனக்கு அப்போது ஏற்பட்டது.

ஆனால் தீபாவளிப் பட்டாசினால் ஏற்படும் விபத்தில் அதிகமாக பாதிக்கப்படுபவர்கள் பெரியவர்களே! என்கிறார் டெல்லி "ஐ. ஐ. டி." யைச் சேர்ந்த திரு. தினேஷ் மோகன். அவரும் அவருடைய சகாக்கள் மூன்று பேரும் 1983ம் ஆண்டு, தீபாவளியன்றும், மறுநாளும், டெல்லியில் பட்டாசு வெடித்துத் தீக்காயம் ஏற்பட்டு, ஸப்தர்ஜங் மருத்துவமனை, ஜெயப்பிரகாஷ் மருத்துவமனை ஆகிய இரண்டு மருத்துவமனைகளிலும் சிகிச்சைக்கு வந்தவர்களை ஆராய்ந்தார்கள். அவர்களின் கண்டுபிடிப்புகள் என்ன தெரியுமா?

* அந்த ஆறு நாட்களிலும் வந்த 113 நோயாளிகளின் சராசரி வயது இருபது. இதில் பத்து வயதிற்கு உட்பட்டவர்கள் 17 சதவிகிதமே.

* இவர்களுக்கு தீக்காயம் ஏற்படுத்திய ஆபத்தான பட்டாசு புஸ்வாணம் (**Flower Pot.**) இது திடீரென்று தீப்பிடிப்பதாலும் அல்லது வெடிப்பதாலும் சுமார் 68 சதவிகிதத்தினருக்கு தீக்காயம் ஏற்பட்டது. அடுத்தபடியாக ஆபத்து விளைவிக்கும் "அணுகுண்டு" வெடியால் பாதிக்கப்பட்டவர்கள் 17 சதவிகிதம்.

* பெரும்பாலான நோயாளிகளுக்கு (90 சதவிகிதம்) கைகளிலேயே தீக்காயம் ஏற்பட்டது.

**பட்டாசு தீப்புண் எந்த வகை?**

பட்டாசு – தீக்காயம் ஏற்படும் போது, பெரும்பாலும் நம் தோலின் ஆழமான பகுதியான "டெர்மிஸ்" பாதிக்கப்படுகிறது. இங்குதான் நரம்பு மற்றும் ரத்தக் குழாயின் முடிவுகள், வியர்வைச் சுரப்பிகள், ரோமத்தின் ஆரம்பப் பகுதி போன்றவைகள் உள்ளன. இந்த இடம் தீக்காயத்தால் பாதிக்கப்படும்போது அதை இரண்டாவது டிகிரி தீப்புண் (**Second Degree Burn**) என்று கூறுவார்கள். (தோலின் மேல் பகுதியான 'எபிடெர்மிஸ்' பாதிக்கப்பட்டால் அதை முதல் டிகிரி தீப்புண் என்றும், தோலின் உட்புறமாக இருக்கும் 'உள்ளார்ந்த உறுப்புக்கள்' பாதிக்கப்படும் போது அதை மூன்றாவது டிகிரி தீப்புண் என்றும் பொதுவாகக் கூறுவார்கள்) நமது உள்ளங்கை, விரல் போன்ற இடங்களில் உள்ள தோலில் "எபிடெர்மிஸ்" காணப்படுவதில்லை. எனவே இங்கு ஏற்படும் சிறிய அளவிலான தீக்காயம் உடலின் மற்ற இடங்களில் உள்ள தோலில் ஏற்படும் அதே அளவான தீக்காயத்தை விட அதிகப் பாதிப்பை ஏற்படுத்தும். பெரும்பாலான பட்டாசு தீக்காயங்கள் பார்ப்பதற்கு சாதாரணமாகத் தோன்றினாலும், உடனடியான முறையான மருத்துவ உதவி அளிக்கப்படாவிட்டால், அவைகள் மிகவும் அபாயமான விளைவுகளை ஏற்படுத்தக் கூடும்.



## பட்டாசு விபத்தைத் தடுப்போம்:

முதலுதவி:

பட்டாசு வெடிக்கும் சமயத்தில் நம்மிடத்தில் இருக்க வேண்டிய அவசியமான முதலுதவி மருந்து என்ன தெரியுமா? தண்ணீர்! தண்ணீர் தீக்காயங்களுக்கு உடனடியாக உணரக் கூடிய நிவாரணம் (**Symptomatic Relief**) அவற்றைக் கழுவும் போதே அளிக்க வல்லது. மேலும் ஓடும் நீரில் தீக்காயங்களைக் கழுவுவதால் தோலுடன் ஒட்டிக் கொண்டிருக்கும் வெடி மருந்து வெளியேற்றப்படுகிறது. தீப்புண் மீது நீரை ஊற்றினால் அவ்விடத்தில் சீழ்பிடிக்கும் என்று நினைப்பது தவறு. நன்கு கழுவியவுடன் காயங்களைத் துடைத்துவிட்டு, ''பர்னல்'' அல்லது ''ஸில்வர் ஸல்ஃபோடைஸின்'' போன்ற களிம்புகளைத் தடவ வேண்டும். பின்பு தாமதம் செய்யாமல் தீப்புண் பட்டவர்களை மருத்துவமனைக்குக் கொண்டு செல்ல வேண்டும். எண்ணெய், கொழுப்பு ஆகியவைகளையோ அல்லது பேனா மசி, தோசைமா, பற்பசை போன்றவற்றையோ தீப்புண் மீது தடவுவது நல்லதல்ல!

பட்டாசுகளைக் கையாளும் போது நாம் கவனத்தில் கொள்ள வேண்டிய சில முக்கியமான விஷயங்கள்:



* வெடிகளைப் பத்திரப்படுத்தி வைக்கும் போது தகர அல்லது அலுமினிய டப்பாவில் போட்டு மூடி வைக்க வேண்டும். வீட்டிற்குள்ளேயோ அல்லது கார், ஸ்கூட்டர் போன்ற வாகனங்களுக்கு அருகிலேயோ வெடிக்கக் கூடாது. வெடிக்கும் போது காலணிகளை அணிந்து கொள்ள வேண்டும். புஸ்வாணம், வெடிகள் இவற்றை ஏற்றி கையில் பிடித்துக் கொள்ளக் கூடாது. பட்டாசுக்கு மிக அருகில் சென்று குனிந்து கொண்டு ஏற்றுவதோ அல்லது ஏற்றிய பின்பு ஏன் வெடிக்கவில்லை என்று மறுபடியும் அருகில் சென்று ஆராய்வதோ கூடாது. வெடிகளை காலி டப்பா அல்லது பாட்டிலுக்குள் வைத்து ஏற்றுவது மிகவும் ஆபத்தானது.

* சிறுவர், சிறுமியர் பட்டாசு கொளுத்தும் போது, பெரியவர்கள் அருகிலேயே இருக்க வேண்டும். கையில் பிடித்துக் கொண்டு ஏற்றும் மத்தாப்பு, விஷ்ணு சக்கரம் போன்ற வாணங்களை அவர்கள் உடலைவிட்டு எட்டிப் பிடித்துக் கொண்டு விடுமாறு பார்த்துக் கொள்ள வேண்டும். எரிந்து முடித்த மத்தாப்பு போன்றவற்றை யார் காலிலும் படாமல் ஒரு மூலையில் போடுமாறு அறிவுறுத்த வேண்டும். வளர்ப்புப் பிராணிகளுக்கு அருகில் வாணங்களை விட அனுமதிக்கக் கூடாது. வெடிக்கும் சமயத்தில் சிறுவர், சிறுமியருக்கு தழைவான புரளும் ஆடைகளைக் குறிப்பாக டெர்லின் போன்ற உடைகளை அணிவிக்கக் கூடாது. இவர்களுக்கு பெரும்பாலும் ஆடைகள் தீப்பற்றிக் கொள்வதால் தீக்காயங்கள் ஏற்படக் கூடும். பீதி அடைந்து ஓடுவதால், தீ அதிகம் பரவி பெரிய அளவிலான காயங்கள் ஏற்பட நேரிடும். அந்த சமயங்களில், அருகில் உள்ள பெரியவர்கள் பதற்றம் அடையாமல் சமயோசிதமாக தீயை அணைக்க வேண்டும். கைவசம் ஒரு பக்கெட் தண்ணீர் வைத்திருக்க வேண்டும். அது தீயை அணைக்கவோ அல்லது பட்டாசு தீப்புண் ஏற்பட்டால் அதன் மீது உடனடியாக ஊற்றவோ பயன்படும்.

— சாம்பசி

# இதோ ஹேர் ரிமூவர் பற்றி நீங்கள் அறிய விரும்பிய விவரங்கள் அனைத்தும்!

**எனது கைகளிலும் கால்களிலும் உள்ள ரோமங்களைக் காணவே எனக்குப் பிடிக்கவில்லை. ஆனால் அவற்றை நீக்க பயம். நீக்கினால், அடர்த்தியாகவும் விரைவாகவும் வளராதா?**

நீங்கள் எப்படி ரோமத்தை நீக்குகிறீர்கள் என்பதைப் பொறுத்தது அது. பிளேடு உபயோகித்தால், ரோமம் விரைவாகவும், முரடாகவும் வளரும்...சே! ஆனால் கோத்ரெஜ் ஹேர் ரிமூவர் பயன்படுத்தினால் அப்படி ஆகாது. ஏனெனில், இந்தக் க்ரீம், ரோமத்தை பெண்மையின் மென்மைக்கேற்ப இதமாக நீக்குகிறது, உங்கள் கைகள், அக்குள், கால்களில் உள்ள ரோமங்களை மட்டுமல்லாமல் முகத்தின்மீது உள்ளவற்றைக்கூட சுலபமாக அகற்றலாம்.

**ரோமத்தை நீக்கும்போது வலிக்காதா?**

இதுவும் நீங்கள் பின்பற்றும் முறையைப் பொறுத்திருக்கும். வேக்ஸிங் முறையைக் கையாண்டால் வலிக்கும். ஏனெனில், வேக்ஸிங் செய்யும்போது ரோமம் பிடுங்கப் படுகிறது...ஆ! ஆனால் கோத்ரெஜ் ஹேர் ரிமூவர் ரோமத்தை மெதுவாக, மிக மெதுவாக களைகிறது. உங்களுக்கு ரோமத்தை அகற்றுவதே தெரியாது.

**எனது தோழி ஒருத்தி ரோமத்தை நீக்குவதை நான் பார்த்தேன். அவளது சருமத்தில் சிவப்பாய், திட்டுத்திட்டாய் தடிப்பு ஏற்பட்டது...**

மிக மென்மையான சருமங்களுக்கு இது ஏற்படுவதுண்டு, குறிப்பாக வேக்ஸிங் வழியை பின்பற்றும்போது. ஆனால் கோத்ரெஜ் ஹேர் ரிமூவரில் இயற்கை ஸ்கின் கண்டிஷனரான மஞ்சள் கலந்துள்ளது. ஆகவே, நீங்கள், வேண்டாத ரோமத்தை வழித்து எடுக்கும்போதே சருமத்திற்கு மென்மையும் வழவழப்பையும் கூட வரவழைக்கிறீர்கள்.

**ஹேர் ரிமூவர்கள் அசௌகரியமானவை, நேரமும் வீணாகும் அல்லவா?**

கோத்ரெஜ் ஹேர் ரிமூவரை தடவத் தேவைப்படும் அப்ளிகேட்டரும் அத்துடன் தரப்படுகிறது. க்ரீமை மேலே தடவிக் கொள்ளுங்கள். சிறிது நேரம் விட்டுவைத்து, துடைத்து விடுங்கள். அவ்வளவுதான், மிக எளிதானது! ஆனால், வேக்ஸிங் செய்தாலோ, ஒட்டும் வேக்ஸ், அதற்கென துண்டுத் துணிகள் என பல தொல்லைகள். அதற்கு செலவிடும் நேரமும் அதிகம்.

**ஹேர் ரிமூவர்கள் நாற்றமெடுக்கும் இல்லையா?**

கோத்ரெஜ் ஹேர் ரிமூவரில், மற்ற ஹேர் ரிமூவர்களில் உள்ளது போன்ற ரசாயன நாற்றம் கிடையாது. நேர்மாறாக, இதனில் இனிய வாசனை உண்டு. இனியென்ன? தயங்காமல் கையில்லாத ஜாக்கெட்டுகள் அல்லது ஸ்ட்ராப் இல்லாத ஃப்ராக்குகளை அணிந்து மகிழுங்கள். ஆனால் முதலில் கோத்ரெஜ் ஹேர் ரிமூவர் வாங்குங்கள்.



# சொல்ல நெருங்கி நேரம்

* தேவிபாலாவின் "நேரில் சொல்கிறேன் வா" குறுநாவல் மிகவும் அருமை. அறிவு பூர்வமாக எழுதப்பட்ட கதை. பெண்கள் அவசியம் படிக்க வேண்டியது. ஆசிரியருக்கு பாராட்டுக்கள்.

பிருந்தா, அம்பத்தூர்.



* இந்த மாதம் 6.10.85 'சாவி' இதழில் இதே பெயரில் என்னுடைய சிறுகதை ஒன்று வெளியாகியிருக்கிறது. இந்தப் பெயர் குழப்பம் ஏராளமாக எழுதுவதால் ஏற்பட்ட கவனக் குறைவு. மற்றபடி கதைகள் ஒன்றுக் கொன்று தொடர்பில்லை. இதைத் தெரிவிக்க வேண்டிய கடமைஎனக்கிருப்பதால் அறிவிக்கிறேன், வருந்துகிறேன்!

தேவிபாலா, சென்னை—54.

* மயூரிக்குப் பாராட்டுஎன்றபடி. ஆர். ரமேஷ் அவர்களின் கட்டுரை அற்புதமாக இருந்தது. எங்களின் சுதாவைப் பற்றி அற்புதமாகத் தொகுத்துள்ளீர்கள். சுதாவைப் பாராட்டிய செய்தியை முதலில் வெளியிட்டதும் தாங்கள்தான்.

ஏ. எல். நாராயணன், கோயம்புத்தூர்.

* நவராத்திரி சிறப்பிதழைப் படித்தவுடன் நவராத்திரியை கன ஜோராய்க் கொண்டாடிய திருப்தியும் சந்தோஷமும் நிலவியது.

திருமதி. லட்சுமி மூக்கையா, போடிநாயக்கனூர்.

* சில பிரச்னைகளைப் பற்றி மஞ்சுளா ரமேஷ் அவர்களின் பார்வை ஆழமானது. ஒரு குடும்பத்தில் ஏற்படும் சாதாரண பிரச்னைகள் கூட மூன்றும் மனிதர்களின் தலையீட்டால் பூதாகாரமாய் உருவெடுத்து குடும்பப் பாசத்தின் ஆணி வேரையே பிடுங்கி எறியும் கொடுமையில் சென்று முடிகிறது. இப் பேருண்மையை உணராமலிருந்தவர்களுக்கெல்லாம் மஞ்சுளா ரமேஷ் அவர்களின் கட்டுரை ஒரு அதிர்ச்சி வைத்தியந்தான்.

ஜெயா அசோகன், பூலாம்பட்டி—107.

* மூட நம்பிக்கைகள் ஓர் சாதாரண இந்தியப் பிரஜையின் வாழ்க்கையை எப்படி எல்லாம் அலங்கோலப்படுத்துகிறது என்பதைத் தெள்ளிய நீரோடை போன்ற நடையில் "தூரத்து நட்சத்திரத்தில்" வெளிக் கொணர்ந்த வித்யா சுப்ரமணியம் பாராட்டுக்குரியவர்.

சுமதி, மதுரை—3.

* தமிழ்நாடு நடத்திய 'பந்த்' விபரத்தைசற்று புதிய முறையிலே பெண்களைக் கொண்டு விமர்சித்திருந்தது நன்றாக இருந்தது.

பி. சுவாமிநாதன், கும்பகோணம்.

* 'பரிசளிப்பு விழா' (எரிவாயுப் போட்டி) படங்களும், கட்டுரையும் விழாவுக்கு வர முடியவில்லையே என்ற ஏக்கத்தைப் போக்கியது.

உமார்த்தி, கோவை—43.

* புவனேஸ்வரி பேட்டி கண்ட "எங்கள் வீட்டுக் கொலு" நாலு பேருடைய அனுபவமும் நன்றாக இருந்தது. அதிலும் உஷா சீதாராமன் அனுபவம் கண்ணில் நீரை வர வழைத்து விட்டது.

லட்சுமிபாய், வளவனூர்.

# அன்றும் இன்றும் சிலருக்கு அதே இளந்தளிர் மேனி




எடுப்பான தோற்றம் எழிலான பியர்ஸுக்கு.
அசல் கிளிஸரின் சோப் பியர்ஸ்.

**பியர்ஸ் சருமக் களை: கன்னிப் பருவக் களை.**

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

LINTAS PS 65 2416 TM

# இதற்கு



ஆர். அரிகோபி, குடியாத்தம்.

அரசாங்கவேலைகளில்இருப்பவர்கள் பத்திரிகைகளுக்குச் சொந்தப் பெயரில் படைப்புகளை அனுப்பலாமா? அலுவலக முகவரியைப் பயன்படுத்தினால் சட்டப்படி குற்றமாகுமா?

அரசாங்க வேலைகளில் இருப்பவர்கள் அரசாங்கத்திற்கு விண்ணப்பித்து, அவர்களுடைய அனுமதி பெற்ற பிறகு சொந்தப் பெயரில் எழுதலாம். சிலர் இப்படி எழுதுகிறார்கள். அரசாங்க வேலையில் உள்ள மிகப் பலரும் புனை பெயரில்தான் எழுதுகிறார்கள்.

...... ......

குழந்தைகள் இல்லாத என் சொத்துக்களுக்கு எனக்குப் பின் ஒரு வாரிசு வேண்டுமென்று ஆசைப்படுகிறேன். என் கணவரும் சமீபத்தில் இறந்து விட்டார். வேறு ஜாதியில் வாரிசு எடுக்க முடியுமா?
எனக்குப் பிடித்த வேறு ஜாதிப் பையனை நான் வாரிசாக எடுத்துக் கொள்ளலாமா? அவருக்குவயது 27. அதனால் அந்தப் பையனை வாரிசாக ஏற்றுக் கொள்ள சட்டம் இடம் கொடுக்குமா?

வேற்று ஜாதியைச் சேர்ந்தவரைத் தாராளமாக வாரிசாக எடுத்துக் கொள்ளலாம். வயசு வித்தியாசம் தவறில்லை. ஒரு ஆண் பெண்ணை வாரிசாக எடுத்துக் கொள்ளும் போதுதான் குறைந்தபட்சம் இருவரிடையேயும் பதினைந்து வயது வித்தியாசம் இருக்க வேண்டும் என இருக்கிறது. வாரிசு எடுத்துக் கொள்ள பெண்ணிற்கு அப்படிப்பட்ட நிபந்தனைகளை சட்டம் போடவில்லை. எனவே நீங்கள் தாராளமாகவாரிசுஎடுத்துக்கொள்ளலாம்.

ஸ்ரீநிவாஸன், சென்னை—53.

என் இரண்டாவது பையன் 4.10.1954ல் பிறந்தான். அவன் வீட்டில் நிரம்ப விஷமம் செய்தான் என்பதற்காக ஐந்து வயது முடிவதற்குள்ளாகவே பள்ளியில் சேர்த்துவிட்டேன். பிறந்த தேதி ஒரு வருஷம் முன்னதாக 4.10.53 என்று எழுதிக் கொடுத்தேன்.
இப்போது ஒரு கம்பெனியில் வேலை செய்து வருகிறான். இந்த ஒரு வருட வித்தியாசம் அவன் 55 வயதில் ரிடையராக வேண்டுமென்முல் 54 வது வயதிலேயே ரிடையராக வேண்டும். ஒரு வருடம் எனக்கு சர்விஸ் போகிறதே என்கிறான்.
இதற்காக அவன் பிறந்த ஊராகிய ஸ்ரீரங்கம் முனிசிபாலிடியில் பிறந்த தேதி ஸர்டிபிகேட் காப்பிகேட்டுஎழுதினேன். அதற்குஅவர்கள்,
"இந்த நகராட்சியின் 1954ம் வருடம் பிறப்புப் பதிவேடு 1977 ஆம் ஆண்டின் வெள்ளத்தால் பாதிக்கப்பட்டமையால் தாங்கள் கோரிய பிறப்புச் சான்றிதழை வழங்க இயலாததைத் தெரிவித்துக் கொள்ளப்படுகிறது." என்று பதில் எழுதியிருக்கிறார்கள்.
உரிய விதிமுறைகள் என்ன? மேற்கொண்டு பிறப்புச் சான்றிதழ் அடைய என்ன செய்ய வேண்டும்?

உங்கள் ஊர் குற்றவியல் நடுவருக்கு (ஜுடிஷியல் மாஜிஸ்ட்ரேட்) மனு செய்யுங்கள். உங்கள் மகனின் பிறந்த தேதி, நீங்கள் ஸ்ரீரங்கம் முனிசிபாலிடிக்கு எழுதிய கடிதம், அவர்கள் பதில் எழுதியது என அனைத்தையும் தொகுத்து மனு செய்யவும். பிறகு நீங்கள் என்னுடைய மகனின் பிறந்த தேதி இது தான் என மாஜிஸ்ட்ரேட் முன் உறுதி மொழி கொடுத்தீர்களானல் அவர் விசாரணை செய்து பின் 'டிக்ளேர்' செய்வார்.
அதைக்கொண்டுஸ்ரீரங்கம்முனிசிபாலிடியில் மீண்டும் பதிவு செய்யவும். அவர்கள்




டீ.ஆர்.ரமேஷ்

தரும் சர்டிபிகேட்டை வைத்து உங்கள் மகனின் எஸ். எஸ். எல். சி. புத்தகத்தில் பிறந்த வருடம் திருத்தப்பட வேண்டும். அதைக் கொண்டு அவருடைய வேலை செய்யும் அலுவலகப் பதிவேடுகளில் மாற்றவும்.

வி. பத்மநாபன், திருவனந்தபுரம்.

என் மைத்துனர் மதராஸ் பீச் ரோடில் உள்ள ஒரு கம்பெனியில் பணம் ரூ. 5000 டெபாஸிட் செய்திருந்தார். அது ஜூலை மாதம் கெடுவு முடிந்து விட்டது. அவர் பணத்தைத் திருப்பித் தரும்படி கேட்டார். அவர்கள் 6 மாதம் கழித்துத்தான் தர முடியும் என்று சொல்லிவிட்டார்கள். என் மைத்துனர் 80 வயதுக்கு மேல் ஆனவர். உடல்நிலை சரி இல்லாதவர். அதனால் பணம் சீக்கிரம் தருமாறு 2 கடிதங்கள் எழுதினர். ஆனால் கடிதத்துக்குப் பதில் கூட வரவில்லை. அவருக்குச் சென்னையில் தெரிந்தவர்கள் இல்லை. பண வசதியும் இல்லாதவர். அவருக்கு இந்த சீட்டுப் பணம் வருவதற்கு என்ன வழி செய்தால் சீக்கிரம் வரும் என்பதைத் தெரிவிக்கவும்.

கே. வி. பாலகிருஷ்ணன், கோவை.

நான் சென்னை தி. நகரிலுள்ள ஒரு கம்பெனியில் பிக்ஸட் டிபாசிட் போட்டிருந்தேன். நவம்பர் 85 வரை வட்டி அனுப்பியவர்கள், அதற்குப் பிறகு எந்தத் தகவலும் இல்லை. பல கடிதங்கள் எழுதியும் எந்தப் பதிலும் இல்லை. நான் எந்த வகையில் என் பணத்தைத் திரும்பப் பெறுவது?

இரண்டு கேள்விகளுக்கும் பதில்:

உங்களைப் போன்று பலரும், கஷ்டப்பட்டுக் குருவி சேர்ப்பது போலப் பணத்தைச் சேமிக்கிறார்கள். ஆனால் அதைப் பாதுகாப்பாக எங்கே போடுவது என்று தீர்மானிக்கும் சமயத்தில்தான் தவறு செய்கிறார்கள். சில கம்பெனிகள் கவர்ச்சிகரமான வட்டி விகிதங்களுடன் விளம்பரம் செய்யும்போது அதில் மயங்கி டெபாஸிட் செய்கிறார்கள்.

நாம் கஷ்டப்பட்டுச் சேமிக்கும் பணத்தைத் தேசியமயமாக்கப்பட்ட வங்கிகளிலோ, போஸ்ட் ஆஃபீஸிலோ போடும்போது இப்படிப்பட்ட ஏமாற்றங்கள் நிகழாது.

தனியார் கம்பெனிகள் அனைத்தும் ஏமாற்றுவதாகச் சொல்ல முடியாது. அப்படிப்பட்ட பல பிரபல பைனான்ஸ் நிறுவனங்கள் உள்ளன. அவற்றுள் சில ரிசர்வ் வங்கிக் கட்டுப்பாட்டின் கீழும் உள்ளன. நீங்கள் பணத்தை டிபாசிட் செய்யுமுன் இந்த விவரங்கள் அனைத்தும் தெரிந்து கொண்டு, பங்குதாரர்கள் யார் போன்றவற்றையெல்லாம் தெரிந்து கொண்டே போட வேண்டும்.

உங்கள் இருவரைப் பொறுத்தவரை சென்னை நீதிமன்றத்தில்தான் வழக்குத் தொடர வேண்டும். நீங்கள் பணம் கட்டியதற்கான ரசீதுகள், மற்ற விவரங்களுடன் வக்கீலை அணுகவும்.

## புக்........ஷெல்ஃப்

### அக்கினி வளையம்

ஈழத்தில் தினம் தினம் தமிழர்கள் சிந்தும் ரத்தத்தைப் பேனாவில் தோய்த்து எழுதியதைப் போன்ற கதைகள். அங்கு நடந்த உண்மை சம்பவங்களைக் கதைகளாக்கி எழுதியிருக்கிறார் ஆசிரியர் பூங்கோதை.

தேனருவி பதிப்பகம், 211/5, அண்ணா நகர் மேற்கு, அண்ணா நகர், சென்னை—101. விலை. 17/—.

### ஆரோக்கியம் தரும் யோகாசனங்கள்

பெயருக்கேற்ப யோகாசனங்களினால் ஏற்படுகின்ற நன்மைகள், எப்படிச் செய்ய வேண்டும் எனும் விளக்கவுரைகள் படங்களுடன் யோகாசனங்களை விளக்குகிறது. முதலில் பிராணயாமத்தைப் பற்றியும் கூறுகிறார் ஆசிரியர் ஞானமூர்த்தி. விலை. 11/—

### சுலப சமையலும் சுவையான ஊறுகாய்களும்

வீட்டில் வழக்கமாகச் செய்கின்ற சமையலைக் கூறுகிறது. புதுமணப் பெண்ணிற்கு சமையலறை அறிமுகமில்லாதவர்களுக்கு மிகவும் உதவியாக இருக்கும்.

மேற்கண்ட இரண்டு புத்தகங்களின் வெளியீட்டாளர்கள் அநுராகம், 10, ஹென்ஸ்மென் ரோடு, தி. நகர், சென்னை—17 விலை 8.50.

### பெண்ணுக்கு நீதி

சமுதாயம் ஆணுக்கொரு நீதி, பெண்ணுக்கொரு நீதியாக எப்படி நடந்து கொள்கிறது என்பதைப் பல்வேறு கோணங்களிலிருந்து கூறுகிறார் ஆசிரியர் உமா சந்திரன். தன் தாயாரின் மனத் துன்பத்தையும் கூறியிருக்கிறார்.

உமா சந்திரன் பிரசுரம், H. 118/2, 33வது குறுக்குத்தெரு, பெசண்ட் நகர், சென்னை—90. விலை. 9/—.

# எல்லைகளின் விளிம்பில்



வீட்டு வாசலை நெருங்கிய போது மாலு வுக்குத் தூக்கி வாரிப் போட்டது.

காக்கி உடையில் இரண்டு போலீஸ் ஆபீஸர்கள் நின்று கொண்டிருந்தார்கள். பாலு வுடன் ஏதோ பேசிக் கொண்டிருந்தார்கள். பாலுவின் முகம் வெளிறியிருந்தது. அவன் அவர்களை வீட்டுக்குள் அழைத்துச் செல் வதைக் கவனித்து, அம்மா பலவீனமான குரலில்,

''என்னடி மாலு இது. போலீஸ் வந்தி ருக்கு?'' என்றாள். ''பாலு ஏதானும் தப்புத் தண்டாவிலே மாட்டிண்டிருப்பானோ?''

''நிச்சயமா அப்படி இல்லை! வேற எந்த விஷயமாவது இருக்கும்!'' என்றாள் மாலு தீர்மானமாக.

''பாலுவோட முகத்தைப் பார்த்தியோ? பழைய தெளிவே இல்லே. அவனோட கல் யாணமும் ஒரு தப்புதான் மாலு!''

மாலு சட்டென்று அம்மாவை நிமிர்ந்து பார்த்தாள். அவளுடைய கண்களில் தெரிந்த துக்கத்தில் மிகத் தொலைவைப் பார்த்து விட்ட ஆழமும் சோர்வும் தெரிந்தன.

''ரொம்ப நாளாத் தோணிண்டிருக்கு மாலு. அவன் சந்தோஷமா இல்லே!''

மாலு கனிவுடன் அவள் தோளைப் பற்றிய படி வீட்டை நோக்கி நடந்தாள்.

''நாம பண்ணின தப்புக்கு நாம அனு பவிக்கத்தான் வேணும்மா. ஆனாக் கவலைப் படாதே. அவன் தெளிஞ்சுட்டான். சரியான பாதைக்குத் திரும்பிட்டான்.''

''அந்த சித்ரா ஏன் ஒட்டவே மாட்டேங் கறு?''

அவள் சங்கடத்துடன் சிரித்தாள். ''அவள் ஒட்டாத கேஸ்னு அப்பவே சொன்னேனே? ஒட்ட வைக்க முயற்சி பண்றதிலே அர்த்தமே இல்லே.''

வீட்டு வாசலை அடைந்ததும் அவர்கள் ஓசைப்படாமல் உள்ளே நுழைந்தார்கள்.

''எனக்கு நிச்சயமாகத் தெரியாது'' என்று பாலு சொல்லிக் கொண்டிருந்தான்.

''அவர் என் மாமனாரே தவிர அவருடைய விவகாரங்களில் நான் தலையிட்டதில்லை.''

''நீங்கள் வேலை பார்க்கும் கம்பெனிக்கு அரசாங்கத்தின் தரப்பில் அவர் அட்வை ஸர்! அவரால்தான் உங்களுக்கு வேலைக் கிடைத்தது!''

வாஸந்தி



"அது தவறு. நான் நேர்முகத் தேர்வில் செலக்ட் ஆனவன். அப்பொழுது எனக்கு மிஸ்டர் நாகநாதனைத் தெரியவே தெரியாது!"

"நீங்கள் வேலை பார்க்கும்..."

"நான் அந்த வேலையை ரிஸைன் செய்து ஒரு வாரமாகிறது!"

"ஆ, விஷயத்துக்கு வருகிறீர்கள். ஏன் ரிஸைன் செய்தீர்கள்?"

"நான் என் ரூமுக்குப் போறேன்" என்று மெல்லிய குரலில் சொல்லிவிட்டு பாலு தன் அறைக்குச் சென்றான்.

அம்மா சரியாகச் சொன்னாள். அவனுடைய கல்யாணம் ஒரு மிகப் பெரிய தவறு. எத்தனை விதங்களில் மாட்டிக் கொண்டிருக்கிறான்! இப்பொழுது ஏதோ மிகப் பெரிய விஷயம் நடந்திருக்கிறது. நாகநாதன் செய்யும் தில்லுமுல்லுகள் வெளியில் வந்துவிட்டதா? இவனை அதில் மாட்ட வைக்கப் பார்ப்பார்களோ? பாலுவை அவர்கள் கேள்வி கேட்கும் போது தான் அங்கு போவது அநாகரிகம் என்கிற நினைப்பில் அவன் தன்னறையிலேயே நின்றான்.

அவர்கள் கிளம்பும்போது சொல்வது கேட்டது.

"உங்களுடைய வாக்கு மூலம் பல சந்தர்ப்பங்களில் எங்களுக்குத் தேவைப்படும்.



மிஸ்டர் பாலகிருஷ்ணன். உங்கள் ஒத்துழைப்புத் தேவை.''

''அது என்னுடைய ட்யூட்டி!'' என்றான் பாலு.

அவர்கள் சென்ற பிறகு, தொங்கிய முகத்துடன் பாலு உள்ளே நுழைவதைக் கண்டு மாலு விரைந்தாள். அம்மாவும் அப்பாவும் அதிர்ச்சி அடைந்திருந்தவர்கள் போல் மௌனமாக அமர்ந்திருந்தார்கள்.

''என்ன பாலு?'' என்றாள் அவள் மெல்ல.

பாலு நிமிர்ந்து அவளைப் பார்த்தான். இந்தளவு பயங்கர கோபத்தை இதுவரை அவள் அவன் விழிகளில் கண்டதில்லை.

''நாகநாதன் ஏதோ தில்லுமுல்லு பண்றார்னு எனக்கு சந்தேகம். ஆனா இந்தளவுப் பெரிய தேசத் துரோகின்னு எனக்குத் தெரியாது!''

''என்ன செஞ்சாராம்?''

''நம்ம தேசத்து ராணுவ ரகசியங்களை எல்லாம் வெளிநாட்டானுக்கு வித்துண்டிருக்காராம்.''

''அடிப்பாவி!'' அவளையறியாமல் வார்த்தைகள் வெடித்தன.

''பாலு!'' என்றார் அப்பா லேசான கண்டிப்புடன். ''எதையும் நிரூபிக்கிற வரை சந்தேகம்தான். இந்த ஆபீஸர்கள் சொன்னா அதுதான் உண்மைன்னு அர்த்தமில்லே ப்ரூவ் ஆற வரை ஒரு மனுஷனைக் கண்டிக்கக் கூடாது!''

''ப்ரூஃப் கிடைச்சிருக்கறதினாலேதான் அரெஸ்ட் பண்ணியிருக்கா.''

''அரெஸ்ட் பண்ணியாச்சா?''

''ஆமாம், இன்னிக்கு மத்தியானம். அவருக்கு எல்லா மினிஸ்ட்ரிலேயும் பெரிய மனுஷங்க எல்லாரும் பழக்கம். தன்னை யாரும் ஒண்ணும் பண்ண முடியாதுங்கற திமிரு ரொம்ப ஜாஸ்தி.''

மாதுளம்பழ (தோல்) பச்சடி

மாதுளம் பழம் கிடைக்கும் காலத்தில் [illegible] உபயோகித்தபின் தோலைத் தூக்கி வெளியில் எறியாதீர்கள். தோலை நன்கு [illegible] பத்திரப்படுத்தி [illegible] உலர்த்தி [illegible] வேண்டும் போது அதில் [illegible] கொதிக்கும் நீரில் [illegible] எடுத்து அத்துடன் சிறிது தேங்காய், பச்சை மிளகாய் சேர்த்து அரைத்துத் தயிரில் கலக்கி பச்சடி செய்தால் [illegible] இருக்கும். வயிற்றில் [illegible] நன்றாக இருக்கும். வயிற்றுப் போக்குக்கும் [illegible] நல்லது.

—எம். எஸ். [illegible]

அவன் சட்டென்று நிறுத்தினான். மேற்கொண்டு பேசினால் சித்ராவைப் பற்றிப் பேச்சு வரும் என்று பயந்தவனைப் போல.

பேச்சை வளர்த்த வளர்த்த ஏதாவது அசம்பாவித வார்த்தைகள் வரும் என்கிற தயக்கத்துடன் எல்லாரும் தங்கள் எண்ணங்களில் மூழ்கியவராய் மௌனமானார்கள். அம்மா கைகால் கழுவிக் கொண்டு சுவாமி விளக்கேற்றப் போனாள்.

''இது என்ன சோதனைடி மாலு'' என்று அம்மா முணுமுணுத்தாள். ''இனிமேல் வெளியிலே தலைகாட்ட முடியாது.''

''அவமானம்தான்'' என்றாள் மாலு. ''பெரிய இடத்து சம்பந்தம்னு சந்தோஷப்பட்டே. சிநேகிதர்கள் கிட்டேயெல்லாம் பெருமை அடிச்சிண்டே. இந்த சம்பந்தத்தாலே உங்க அந்தஸ்து உசந்து போயிட்டதா நீயும் அப்பாவும் நினைச்சுண்டேள். அதை பாலன்ஸ் பண்ற மாதிரி இந்த அவமானம் வந்திருக்கு.''

அம்மா அதற்குப் பிறகு வாயே திறக்கவில்லை. இந்த சம்பவம் மூலமாவது இவர்கள் மனிதர்களின் தார தம்யத்தை உணரக் கற்றுக்கொள்ளட்டும் என்று அவள் ஆயாசத்துடன் நினைத்துக் கொண்டாள்.

''டீ சாப்பிடுவேளா எல்லாரும்?'' என்று அவள் சகஜமாக வினவியபடி பாத்திரத்தில் நீரை அளந்து காஸில் வைக்கப் போகும் சமயத்தில், அழைப்பு மணி தீவிரத்துடன், அவசரத்துடன் ஒலித்தது.

எல்லார் உடம்பும் ஒரு விநாடி விறைத்துக் கொள்வதை அவள் உணர்ந்து வாசற் கதவைத் திறந்தாள்.

சித்ரா நின்றிருந்தாள்.

சட்டென்று வியப்புடன் மெலிதாக மாலு புன்னகைத்து ''ஹாய்!'' என்றாள்.

சித்ரா புன்னகைக்காமல், ''பாலு இருக்கானா?'' என்றாள் ஆங்கிலத்தில். ''அவனைப் பார்க்கணும்!''

''உள்ளே வாயேன்!''

''நான் அவனோடு தனியாகப் பேசணும்!''

''என் ரூமிலே உட்காரு. நான் அவனை அனுப்பறேன்!''

அந்த வீட்டுடன் தனக்கு சம்பந்தம் இருக்கிற நினைப்பே இல்லாதவள் போல் தயக்கத்துடன் சுற்றிலும் பார்த்து மாலு சுட்டிக் காட்டிய நாற்காலியில் சித்ரா அமர்ந்து கொண்டாள்.

மாலு கூடத்துக்குச் சென்று ''பாலு! சித்ரா வந்திருக்கா. உன்னோட தனியா பேசணுமாம்,'' என்றாள்.

அடி உதட்டைக் கடித்தபடி பாலு எழுந்தான்.

மாலு தேநீர் கவனிக்கச் சென்றாள்.

''யாருடீ?'' என்றாள் அம்மா.

''உன் நாட்டுப் பெண் சித்ரா!''

''இதென்ன கூத்து!'' அம்மாவின் விழிகள் காட்டிய ஆச்சரியத்தில் மெல்லிய சந்தோஷ இழை ஓடிற்று.

''உன்னைப் பார்க்க வரல்லே!'' பாலுவோட்த் தனியாப் பேச வந்திருக்கா.''

''ஓ!'' அம்மாவின் குரலில் உற்சாகம் வடிந்து போயிற்று.

''அவ அப்பாவுக்கு இப்படி ஆச்சேன்னு பயந்து போயிருப்பா. ஏதோ பாலுவாவது தனக்கு உறவுங்கற ஞாபகம் அவளுக்கு இருந்ததானு சரி!''

அம்மா ரொம்பவும் வெறுத்துப் போய் விட்டாள்! இந்த ஒரு வருஷத்தில் என்கிற மெல்லிய அனுதாபம் அவளுள் ஏற்பட்டது.

அவள் தேநீரைக் கலந்து கோப்பைகளில் ஊற்றுகிற சமயத்தில் சித்ராவின் குரல் உயர்ந்து கேட்டது.

''நீ ஒரு சுயநலக்காரன்! நீ ஒரு ஃப்ராட்! அப்பா நல்ல நிலைமையிலே இருந்த வரைக்கும் அவருடைய தயவு வேண்டியிருந்தது உனக்கு. அவர் மேல இப்படிக் கேஸ் வந்தும் விலகிக்கப் பார்க்கறே!''

''நீசொல்றதுநியாயமில்லேன்னுஉனக்கே தெரியும் சித்ரா!'' என்றான் பாலு.

''உங்கப்பாவுடைய எண்ணங்களுக்கும் என் கொள்கைகளுக்கும் ஒத்து வரல்லேன்னு உனக்குத் தெரியும். அதனாலேயே நான் வேலையை ரிஸைன் பண்ணினேன்னு தெரியும்! என்னைப் பிழைக்கத் தெரியாதவன்னு நீ ஏசிக் காட்டல்லே?''

ஒரு விநாடி மௌனத்திற்குப் பிறகு சித்ராவின் குரல் கேட்டது.

''சரி, அதை நா வாபஸ் வாங்கிக்கறேன். எங்கப்பாவை ஸப்போர்ட் பண்ணிப் பேசு.''

பாலுவிடமிருந்து பதில் இல்லை. மாலு சமையலறையில் மெல்லிய எதிர்பார்ப்புடன் நின்றாள்.

''அவர் எங்கப்பா பாலு! யுவர் வைஃப்ஸ் ஃபாதர். நானொருத்தி அவருடைய சொத்து பூராவும் எனக்கும் உனக்கும்தான்.''

''யாருக்கு வேணும் அவருடைய பணம்? தேசத்தை வித்து சேர்த்த பணம். நா அதை இந்தக் கையாலே தொடுவேன், அனுபவிப்பேன்னு நினைக்கறியா?''

பாலுவின் குரல் பயங்கரமாக உயர்ந்தது.

''எந்தத் துரோகத்தை மன்னிச்சாலும் தேசத் துரோகத்தை மன்னிக்க முடியுமா? நான் அவருடைய மாப்பிள்ளைன்னு சொல்லிக்க வெட்கப்படறேன்! உன்னைச் சந்திச்சதுக்கு வெட்கப்படறேன். உன்னைக் கண்டு மயங்கினதுக்கு வெட்கப்படறேன். உங்கப்பாவுடைய கேஸ் விவரத்துக்கு முந்தியே நான் உறவை விட்டு வந்தாச்சுன்னு தெரிஞ்சுக்கோ. நீ என்னுடைய வைஃப்னு இப்போதான் உனக்கு ஞாபகம் வந்ததுக்கு ரொம்ப தேங்க்ஸ்.''

''வைஃப்னு உனக்கு நான் அடிமையா இருக்கணும்னு எதிர்பார்க்கறே!''

''நுக். சித்ரா. இனிமே அதைப் பத்தி விவாதிக்க லாபமில்லே. நீயும் நானும் ஒரே

சாம்பார் பொடி திரிக்கும் பொழுது ஒரு கிலோவிற்கு 100 கிராம் சுக்கும் தட்டிப் போட்டு கலந்து திரிக்கவும். சாம்பார் வாசனையாக இருப்பதுடன், பருப்பு ஒத்துக் கொள்ளாமல் உடலில் வாயு ஏற்படுவதையும் தடுக்கும்.

—ஜெயா. வி. ராமன்.

கோணத்திலே இருக்க முடியாதுன்னு எனக்கு எப்பவோ தெரிஞ்சுப் போச்சு. உன் இஷ்டப்படி நீ இருந்துக்கோ. எனக்கு அப்ஜெக்ஷன் இல்லே. நா என் இஷ்டப்படி இருக்கேன்.''

''நான் வந்தது என் அப்பாவுக்காக!''

''ஸாரி. ஒரு தேசத்துரோகிக்கு வக்காலத்து என்னாலே பேச முடியாது. பொய் சாட்சியங்கள் சொல்ல முடியாது. அவர் என் அப்பாவா இருந்தாலும்!''

''உதவாக்கரையாயிருந்தாலும் நீ ஒரு ஜம்பம் பிடித்தவன்! வேலைக் கிடைக்காமல் திண்டாடப் போறே! அப்ப என்னையோ எங்கப்பாவையோ தேடிண்டு வராதே!''

''நிச்சயமா மாட்டேன்! எதுக்குமே வர மாட்டேன் கவலைப்படாதே!''

மறு நிமிஷம் சித்ரா ஆத்திரத்துடன் வெளியேறும் அரவம் கேட்டு அம்மா பதைப்புடன் கூடத்துக்கு விரைந்தாள்.

''என்னடா பாலு இது. இப்படியா ஆத்திரப்பட்டு வார்த்தைகளைக் கொட்டறது! அவ கலங்கிப் போயிருக்கா! சமாதானப் படுத்தப் பார்ப்பியா....'' என்றாள்.

''அவளை சமாதானப்படுத்த முடியாதும்மா'' என்றான் பாலு நிராசையுடன்.

''நீயும் அப்பாவும்தான் உங்களை சமாதானப்படுத்திக்கணும். சித்ராவுக்கும் இடையே உறவு தொடர முடியாதுங்கற முடிவுக்கு நான் வந்து ரொம்ப நாளாச்சு.''

மாலு நிதானமாக தேநீரைக் கொண்டு வந்து எல்லாருக்கும் கொடுத்தாள்.

''எனக்கு ஒண்ணும் புரியலேயில்லே'' என்று அம்மா திரும்பத் திரும்ப மெல்லிய குரலில் சொன்னாள்

''இந்தக் கல்யாணம் நிச்சியமான போது நா எத்தனை சந்தோஷப்பட்டேன்!''

மாலு வாயே திறக்கவில்லை. இன்னின்ன செயலுக்கு இன்னின்ன விளைவுதான் இருக்கும் என்கிற வருத்தம் ஆழ்ந்திற்று.

பொழுது சாயும் நேரத்தில் யாரோ வாசற் கதவை பலமாகத் தட்டினார்கள். பக்கத்து வீட்டுக்காரர் நின்றிருந்தார்.

''அந்தப் பெண்ணுக்கு, கலாவுக்கு என்னவோ ஆகிவிட்டது! அவள் வீட்டிலிருந்து ஒரே சத்தம். எல்லோருமாய் போய் விசாரிப்போம்!'' என்றார்.

சரேலென்று அம்மா முன்னால் பாய்ந்தாள். மாலு தொடர்ந்தாள்.

(தொடரும்)

# சிறந்த சமையலறை

வடிவமைப்பு:

"இந்தியாவில், குறிப்பாக தென்னகத்தில் மனையடி சாஸ்திரத்தின்படி, இவ்வறை, இல்லத்தின் தென்கிழக்கு மூலையில் அமைந்திருக்க வேண்டும். குறைந்தபட்சம், அடுப்பு மேடையானது கிழக்கு நோக்கி சமைக்கும் அளவில் இருத்தல் வேண்டும் என்பது சாஸ்திரம். இதன்படி சமையல் அறையை அமைத்துக் கொள்வது கடினமானதல்ல. இவ்வறையோடு தொடர்புடையவைகள் என்னென்ன என்பதை முதலில் காண வேண்டும்.

சாப்பாட்டு அறை, சர்வீஸ் வெராண்டா, ஸ்டோர் ரூம் ஆகியவைகளே மிக நெருங்கிய தொடர்புகள் கொண்டவை. மேலும், சமையல் செய்வதில், குளிர் சாதனப் பெட்டி, அரைக்குமிடம், கழுவுமிடம், தயாராகுமிடம் அடுப்பு தயாரித்த உணவை வைக்குமிடம் என்று ஆறு பெரும் பிரிவுகள் கொண்டு உள்ளன. இவைகள் எதில் தொடங்கி எதில் முடிகின்றன என்பதையும், அறையின் எந்தப் பகுதி எந்த அளவுக்கு பயன்படுகின்றன அல்லது தொந்தரவுக்கு உள்ளாகின்றன என்பதையும், விளக்கும் வரைபடங்கள் 1 & 2 ன் மூலம் நன்கு அறியலாம். இந்த புள்ளி விபரங்கள் மூலம் சமையல் அறையினை அமைப்பதற்குரிய அடிப்படையை நன்கு தெரிந்து கொள்ளலாம். (இப்புள்ளி விவரங்கள் 'International Standards Residential' லிருந்து எடுக்கப்பட்டவை.) இந்த எளிய அடிப்படையில் நடுத்தர வர்க்கத்தினருக்காக அமைக்கப்பட்ட சிறந்த சமையல் அறையினை வரைபடம் 3 ன் மூலம் அறியலாம்.

குளிர் சாதனப் பெட்டி:

நமது நாட்டில் பெரும்பாலும் இதனை சாப்பாட்டு அறையில்தான் அனைவரும் வைக்க விரும்புகிறார்கள். இதனால், ஒவ்வொரு முறையும், சமையலுக்குத் தேவையான கீரை, காய்கறி, முட்டை, மற்றும் பானங்களை இங்கிருந்து எடுத்துச் செல்ல வேண்டியுள்ளது. விருந்தினரோ, நண்பரோ வந்திருக்கும் நேரத்தில் அவரை உபசரிக்க சாப்பாட்டு அறைக்கும் சமையல் அறைக்குமாக, மாறி மாறி ஓடிச் சென்று, குளிர் பானங்களோ, அல்லது பழவகைத் துண்டுகளையோ தயார் செய்ய வேண்டியிருக்கிறது. மாறாக, இது சமையல் அறையில் முன்பாக இருந்தால், சாப்பாட்டு அறையிலிருந்தும் சரி, சமையல் அறைக்கும் சரி," மிக வசதியாக இருக்கும் என்புதால் இதனை அவ்வாறே அமைப்பது சாலச் சிறந்தது.

அரைக்குமிடம்:

மிக்சர், அம்மிக்கல், அருகில் கிழே, ஆட்டுக்கல் போன்றவைகளை வைத்துக் கொள்ளுமிடம். சமைக்கத் தேவையான உணவுப் பொருட்களை அருகில் உள்ள சிங்க்கில் கழுவி, அரைப்பதற்கு ஏற்றவாறு அமைந்து இருக்க வேண்டும். மேலும் இது ஒரு பக்கமாக இருந்தால் மின் வசதிக்கும், சுத்தம் செய்வதற்கும் எளிதாக இருக்கும்.




FLOW OF WORK IN FOOD PREPARATION



PERCENTAGE DISTRIBUTION OF TRIPS IN FOOD PREPARATION

DRG-No:1

கழுவுமிடம்:

சமையலுக்குரிய பாத்திரங்களைக் கழுவி சுத்தம் செய்யவும், காய்கறி, கீரை போன்றவைகளை நறுக்கப் படுவதற்கு முன்போ, பின்போ சுத்தம் செய்வதற்கு ஏதுவாக இது அமைக்கப்பட்டுள்ளது. மேலும் சுத்தம் செய்யப்பட்ட பாத்திரங்கள் எளிதில் உலர்வதற்கு வசதியாக ஜன்னலுக்கு அடியில் அமைந்திருப்பது நல்லது. இதில் வெந்நீர் சப்ளை மற்றும் உலரும் மேடையையும் அமைத்துக் கொள்ளலாம். இது பல அளவில், எளிதில் சுத்தம் செய்யக் கூடியவாறு எவர்சில்வர், கடப்பைக்கல், மார்பிள் போன்றவைகளில் கிடைக்கிறது.

தயாரிக்குமிடம்:

இப்பகுதி காய்கறிகளை நறுக்க, அடுப்பில் வேக வைக்குமுன் பொருட்களை தயாராக எடுத்து வைக்க உபயோகமாகுமிடம். இது அரைக்கும் இடத்திற்கும், கழுவுமிடத்திற்கும் பின்பாக, அடுப்புக்கு முன்பாக அமைந்திருத்தல் நல்லது

அடுப்பு:

நவீன அடுப்புகள் பல அளவுகளில்கிடைக்கின்றன. அளவுக்கேற்றபடி சமையல் மேடையை அமைத்துக் கொள்ள வேண்டும். இவ்விடத்தில் விபத்து நேர வாய்ப்பு இருப்பதால் எளிதில் இப்பகுதியிலிருந்து விடுபடுவதற்கு அல்லது விபத்தினை கட்டுப்படுத்துவதற்குஎளிதாகஇருக்குமாறு, நெருக்கடியின்றி அமைந்திட வேண்டும்.

ஸ்டோரேஜ்:

சமையல் அறையில் தேவையான முக்கிய பகுதியாகும் இது. போதுமான அளவிற்கு ஸ்டோரேஜ்இல்லையென்றால்சமையல்அறையினை சுத்தமாக வைத்துக் கொள்வது முடியாததாகும். முடிந்த அளவிற்கு இப்பகுதி அதிக அளவில் இருப்பது நல்லது. சமையல் மேடைக்கு இரண்டு அடிக்கு மேலும், அடியிலும் இதனை அமைத்துக் கொள்ளலாம். எந்த அளவில், எந்த உயரத்தில் இருந்தால், எளிதாக எடுக்க, வைக்க முடியும் என்பதை வரைபடம்—'4' ன் மூலம் தெரிந்து கொள்ளலாம். அதிக எடையுள்ளவைகளை கீழ்ப்பகுதியிலும், மற்றவைகளை மேல் பகுதியிலும்வைத்தல் நல்லது. இது தவிர ஸ்டோருக்கு என்று தனி அறை இருந்தால் நலமே.

வெளிச்சம்:

சமையல் அறையில் போதுமான அளவிற்குவெளிச்சம்தரக்கூடியஜன்னல் அமைத்துக் கொள்ள வேண்டும். பொருத்தப்படுகின்ற விளக்குகள் ப்ளோரசன்ட் (Flourescent) விளக்குகளாக — டியூப் லைட் போன்றவைகள் இருத்தலே நல்லது. இவ்விளக்குகளை சமையல் மேடைக்கு மேலுள்ள ஸ்டோரேஜ் தட்டின் அடியில், ஆங்காங்கே பொருத்திக் கொள்வதைவிட, சமையல் மேடையில்லாத நான்காவது, சுவரில் கதவுக்குமேல் பொருத்திக் கொள்வதே சிறந்தது. இதனால் அறையின் எல்லாப் பகுதிகளுக்கும் சமமான, நேரடி வெளிச்சம் தருவதோடு, சமையல் மேடையில் வேலை செய்யத் தொந்தரவோ,

# இப்படித்தான் இருக்கும்







TYPICAL CABINET DIMENSIONS

வெப்பக் காற்றோ (ஸ்டோரேஜ் தட்டின் கீழிருப்பதால் வருவது போன்று) இல்லாது இருக்கிறது.

காற்றோட்டம்:

சமையல் அறையில் போதுமான அளவிற்குக்காற்றோட்டம் இருந்தால்தான், அதன் வெப்பம் தணிந்து குளிர்ச்சி அடையும். இதற்காக சமையல் அறையின் இருபுறங்களில் ஜன்னலை வைப்பது சரியல்ல. இதனால் அறையில் காற்றின் வேகம் அதிகரிப்பதால், உணவுப் பொருட்கள் வேக எடுத்துக் கொள்ளும் நேரம் அதிகமாகும். இதைக் கட்டுப்படுத்த ஒரு பக்க ஜன்னலே சரியானது. வெப்பக் காற்றை வெளியேற்ற எக்ஸாஸ்ட்டின் விசிறியை ஜன்னலின் மேற்பகுதியில் அமைக்க வேண்டும். இதைவிட, நவீன முறைப்படி, குக்கிங் ரேஞ்ஜிலிருந்து வெளிவரும் வெப்பக் காற்று, நீராவி போன்றவைகளை, நேரடியாக அதற்குமேல் சிம்னி போன்ற அமைப்பினால், குழாயின் மூலம் எக்ஸாஸ்ட்டின் விசிறியில் இணைத்து, வெகு எளிதாக வெளியேற்றலாம். இதனால் சமையல் அறை வெப்பம் அடையாததோடு மிக விரைவில் குளிர்ச்சி அடைய ஏதுவாகிறது. இதன் அமைப்பை வரைபடம் 3 லும் 4 லும் காணலாம்.

நிறம்:

பொதுவாக சமையல் அறை வெளிச்சமான நிறத்தினை (Light Colours) கொண்டிருத்தல் நல்லது. நீண்ட நேரம் இங்கு வேலை செய்ய வேண்டியிருப்பதால் அழுத்தமான நிறம் இருந்தால் கண்கள் சோர்வடைய, விரைவில் மனதால், உடலும் சோர்வுடைய காரணமாகிறது. ஆகவே வெள்ளை, பாதி வெள்ளை, வெளிரிய மஞ்சள் போன்ற வண்ணங்களையே சுவருக்கும், மேல் தளத்திற்கும் உபயோகிக்க வேண்டும்.

இதர வசதிகள்:

எரிவாயு சிலிண்டர்களை சமையல் மேடைக்குக் கீழாக, குக்கிங் ரேஞ்சுக்கு அருகில் வைக்குமாறு அமைத்தல் வேண்டும். தயாரான உணவுகளை சமையல் அறையில் வைத்த இடத்திலிருந்து சாப்பாட்டு அறையில் இருந்தவாறே ஒரு திறந்த பகுதியை (Hatch Opening), (குறைந்த அளவில், 3' X 2') அமைத்துக் கொள்வது சிறந்தது. இதன் மூலம் காலையில், அலுவலகத்திற்கும், பள்ளிக்கும் செல்பவர்கள் சாப்பாட்டு அறையில் இருந்தவாறே, காலை உணவை ஒரு ஸ்டூலின் உதவியால், உண்டு செல்ல வசதியாகிறது. தோசை, இட்லி, காப்பி போன்ற டிபன், பதார்த்தங்களைச் சூடாக அவ்வப்போது சாப்பாட்டு அறையில் இருந்தவாறே உண்ண இது உதவுகிறது.

சமையல் மேடை மீதும் அதன் பக்கச் சுவரின் மீதும் (upto 2') மிக எளிதில் சுத்தம் செய்து கழுவக் கூடிய, கழுவியபின் விரைவில் உலரக் கூடிய பொருட்களால் இதன் மேற்பகுதியை அமைத்துக் கொள்ள வேண்டும். இதற்காக கடப்பைக்கல், சலவை செய்யப்பட்ட கருங்கல், மார்பிள் (Marble), போன்றவைகளை உபயோகித்துக் கொள்ளலாம். இதுபோலவே சமையல் அறையின் தரையும் இருத்தல் வேண்டும்.

சமையல் அறையில் இருந்தவாறே வீட்டின் முன்புறக்கேட்டைப் பார்க்குமளவில் அதன் ஜன்னலை அமைக்கமுடியுமானால் அதுமிகவும் சிறந்தது. மங்கையர்கள் தொடர்ந்து வேலையில் ஈடுபட்டு இருக்கும்பொழுது, வீட்டிற்கு வருபவரை உபசரிக்கச் செல்லுமுன், தன்னை ஓரளவிற்குச் சரி செய்து கொள்ள ஒரு முகக் கண்ணாடி சமையல் அறையில் பொருத்திக் கொள்வது நல்லது. குழந்தைகள் உள்ள வீட்டில் சமையல் அறையிலும் விளையாட்டுப் பொருட்களை வைத்துக் கொள்ள வசதி இருப்பதும் நல்லது.

சீதாராம் ராஜி.

மாதுளம் பழ சாதம்

புளிப்புள்ள மாதுளம்காயைத்தோலை நீக்கி, உள்ளே இருக்கும் மணிகளை ஒரு பாத்திரத்தில் போட்டு நன்றாக நசுக்கி அதிலிருந்து வரும் சாற்றை ஒரு கிண்ணத்தில் சேகரித்துக் கொண்டு அதில் சிறிதளவு உப்பைச் சேர்த்து கலந்து வைக்கவும். வாணலியில் கடுகு, உ. பருப்பு, க. பருப்பு இவைகளை வறுத்துக்கொண்டு பச்சைமிளகாய்களை பொடியாக நறுக்கி, சிறிது மஞ்சள் தூளையும் சேர்த்து வதக்கி கீழே இறக்கிக் கொள்ள வேண்டும். ஆற வைத்துள்ள சாதத்தில் மாதுளம் பழச் சாற்றையும், தாளித்து வைத்துள்ளதையும் போட்டுக் கலந்தால் எலுமிச்சை பழச் சாதம் போலவே இருக்கும். வயிற்றுக்கும் நல்லது.

—எம். எஸ். சுதா.



# வேஸ்டில் ஒரு ஸ்வீட் ஆர்ட்

பொழுதும் போக வேண்டும் — செலவும் அதிகம்கூடாது—கண்ணைப் பறிக்கும் கலையம்சமும் வேண்டும்! இப்படியான எதிர்பார்ப்புகளுடன் கூடிய சகோதரிகளுக்கு இதோ ஓர் கலைப்படைப்பு.

**தேவையான உபகரணங்கள்:**

1. அவசரமற்ற மிக நிதானமான பொறுமை (ஒரு நாலைந்து நாட்களுக்காவது.).
2. அழகிய ஓவிய டிசைன்.
3. கைக்கூடை, 'ப்ளவர்வாஸ்' போன்றவற்றிற்கு உபயோகித்து சுத்தரித்துவிடப்பட்ட வேஸ்ட்டான சிறு சிறு ஒயர் துண்டுகள் — தேவையான பல வண்ணங்களில்.
4. 'க்விக் ஃபிக்ஸ்' எனப்படும் ஒட்டுப் பசை ஒரு டியூப்.
5. அரை இஞ்ச் பருமனுள்ள அட்டை (டிசைனுக்குத் தகுந்த அளவு)

செய்முறை:

ஒயர் துண்டுகளை நிறம் வாரியாகப் பிரித்துக்கொண்டு சாதாரண கத்தரிக்கோலால் மில்லிமீட்டர் மில்லிமீட்டராக (வெட்டப்பட்ட நகத்தின் உருவ அமைப்பினதாக) சிறுசிறு துண்டுகளாக்கிப் பின்னர் அவற்றை உள்ளங்கையில்வைத்துத்துண்டுகளின் நடுவே சிறிய அளவினதான கத்தரிக்கோலால் மேலும் மேலும் வெட்ட (கை பத்திரம்!) அவை தூளாகி கசகசா மாதிரி ஆகிவிடும்.

வெவ்வேறான கலர் துகள்களை சிறு சிறு பாலிதீன் பைகளிலோ சிறுசிறு கிண்ணங்களிலோ தனித்தனியேசேகரித்துக் கொள்ளவும். ஒவ்வோர் வண்ணத்திலும் சிறிய குங்குமடப்பி கொள்ளளவு (அல்லது சற்று அதிகமாக) சேகரித்துக் கொண்டால் கூடப் போதும். டிஸ்கோ ஒயர்களின் நடுவில் உள்ளகோட்டினைமட்டும்நரம்புபோல் நீள வெட்டிக் கொண்டு அவைகளைத் துண்டுகளாக்கி எடுத்து வைத்துக் கொண்டால்துகள்கள் இருகலர்களில் பளிச்சிடும். சில இடங்களுக்கு இவை வெகுவாகப் பயன்படும். சிறு துகள் மட்டுமின்றிப் பெரும் துகளாகவும்

ஒயர் துண்டுகளை வெட்டிக் கொண்டால் முகம், கண் போன்ற இடங்களுக்கு சிறு துகள்களும் திரைச்சீலை போன்ற இடங்களுக்கு பெரிய அளவிலானதுமான துகள்களை உபயோகிக்கலாம்.

முன்பு கூறப்பட்ட உங்களுக்குப் பிடித்த டிஸைனை வெள்ளைத் தாளில் வரைந்து கொண்டோ அல்லது பிரதி எடுத்துக் கொண்டோ அதனை அரை இஞ்ச் பருமனுள்ள அட்டையில் சாதாரண பசையினால் ஒட்டிக் கொள்ளவும். ஓரளவுக்கு 8'' X 6'' என்ற அளவில் படங்களை வரையறுத்துக் கொள்ளுதல், மற்றும் சிடுக்கான படங்களை தவிர்த்தல் நல்லது. பின்னர் ஒட்டுப் பசையினை நீண்ட ஊசி அல்லது கம்பி அல்லது ப்ளாஸ்டிக் தண்டு அல்லது சிறு பிரஷ்ஷினால் வெள்ளைப் பேப்பர் டிஸைன் படத்தின் பகுதியில் தடவி உடனுக்குடன் அந்த இடத்திற்குரிய கலர் ஒயர் துகள்களை விரல்களினால் சமமாகத் தூவவும். டிஸைனின் கோடோ அல்லது வெள்ளைப் பேப்பரோ தெரியாத வகையில் பரவலாகத் தூவ வேண்டும்.

ஒரு நிமிடம் கழித்து விரல்களினால் நேரிடையாகவோ அல்லது வேறொரு தாளினைக் கொண்டு மூடியோ துகள்களை லேஸாக அழுத்தவும். துகள்கள் பரவலாகவும் ஒரே சீராகவும் டிஸைனில் ஒட்டிக் கொள்ளும். சிறு சிறு அளவில் பசையினைத் தடவித் துகள்களை ஒட்டிக் கொண்டு அடுத்தடுத்து மேலே தொடர்வது நல்லது. இவ்வாறு டிஸைனை முழு அளவில் முடிக்க நீங்கள் விரும்பிய டிஸைன் வண்ண ஒயர் துகள் ஓவியமாக எழில் பெற்று வரும்.

உதாரணமாக சிகப்புக் கலர் துகள்களை நிரப்பத் தொடங்கினால் படத்தில் அவ்வண்ணம் இடம்பெறும் இடங்கள் முழுவதும் அந்த வண்ணத்து ஒயர் துகள் பதிப்பித்தலை முடித்து காய்ந்தபின் அட்டையினை தூக்கி லேஸாகத் தட்டினால் ஒட்டியது போக மற்ற துகள்கள் கொட்டிவிடும். பிறகு பிசிறில்லாமல் நேர்த்தி செய்து கொண்டு, விடுபட்ட இடங்களில் மீண்டும் பசையினை தடவி துகள்களை பதிப்பிக்கவும். ஓர் வண்ணம் முடிந்த பின் அடுத்தவண்ண துகள்களைப்பதிப்பிக்க ஆரம்பிப்பது மிகவும் நல்லது. அட்டையினைத் தட்டும் போது முன்பு பதிந்த கலர் துகள்களில் சில அடுத்த கலர் துகள்களுடன் சேர்ந்து விழ வாய்ப்பிருப்பினும், அவற்றை உடன் பிரித்து நீக்கி விடவும். கொட்டிய துகள்களை சிதறி விடாமல் சேகரிக்கவும். மறுபடி உபயோகிக்க பயன்படும். 'அவுட் லைனை' முதலில் பதிப்பித்தல் நல்லது. எழும்பியதாக ஓவியம் அமைய ஆசைப்படுபவர்கள் முதலில் பதித்த கலர் மேலேயே மேலும் க்விக் பிக்ஸை தடவி மேலும் அதே வண்ண ஒயர் துகள்களை பதிப்பிக்க ஓவியம் எழும்பலாக அமையும். படம் முடியும் வரை ஃபேனை உபயோகிக்க வேண்டாம். ஏனெனில் பசை உடனுக்குடன் காய்ந்து துகள்கள் ஒட்டாமல் போய்விடும்.

— ஜெயலக்ஷ்மி ராகவன்.

## ''நைலான் ரிப்பன்''



அரிசி மாவு — 2 டம்ளர்,
பொட்டுக் கடலை மாவு — ½ டம்ளர்,
காரப்பொடி — ருசிக்குத் தகுந்தபடி,
பெருங்காய நீர் — கொஞ்சம்,
ஆயில் அல்லது டால்டா,
உப்புப் பொடி —
வேகவிட — தே. எண்ணெய் அல்லது ரீபைண்டு ஆயில் அல்லது டால்டா.

மாவை லேசாக வறுக்கவும். (இடித்த மாவானால் இளம் சிவப்பு நிறம் ஆக்கவும்.) பொட்டுக்கடலைமாவைப்போட்டு ஒரு கரண்டி கொதிக்கும் எண்ணெய் விட்டு உப்பு, காரப்பொடி வகைகளைப் போடவும். மாவை அழுத்தமாகவும் நன்முகவும் கொஞ்சம் தளரப் பிசைந்து ரிப்பன் அச்சில் பிழியவும். நைலான் ரிப்பன் மாதிரி மிருதுவாகவும், கரகரவென்றும் இருக்கும். வயதானவர்கள் கூட வாயில் போட்டுக் கொண்டால் கரைந்துவிடும்.

— சித்ரா.



கல்யாணமான புதிது. என் கணவருக்கு சிகரெட் புகைக்கும் பழக்கம் மட்டுமே உண்டு என்று நினைத்திருந்த எனக்கு அவருடைய செயல்கள் சில சந்தேகத்தை மூட்டின.

குளிப்பதற்கென்று போனால், ஒரு மணி நேரமாகும். ஆனால் தண்ணீர் சப்தமே கேட்காது. நடு இரவில் திடீரென்று காணாமல் போய்விடுவார். மொட்டை மாடியில் மல்லாக்க படுத்துக்கொண்டு புகைத்துக்கொண்டிருப்பார். போய் அழைத்து வந்தால், ஒரு விதமாக பார்ப்பார். கண்கள் சொருகி போயிருக்க, கால்கள் தள்ளாடும். பேச்சு கூட உளறல்தான். ஒரு பக்கெட் தண்ணீர் கூட இழுக்க முடியாமல் சிரமப்படுவார். சாப்பாட்டை ஏனோதானோவென்று கொறிப்பதோடு சரி.

இவருடைய நடத்தைக்குக் காரணம் புரியாமல் தவித்துப் போயிருந்தபோதுதான், அந்தச் சம்பவம் நடந்தது. வேலைக்காரிக்குத் துணி துவைக்கப் போடும்போது தற்செயலாக அவருடைய பாண்ட் பையை ஆராய்ந்தபோது அது தட்டுப்பட்டது. சிறிய பொட்டலம். அதனுள் பச்சையாய்ப் பொடி.

"என்னங்க இது! பொட்டலம்?" என்று நான் கேட்டவுடன் துள்ளி பதறி கொண்டு வந்தார். "இதையேன் எடுத்தே?" என்று கன்னென்று விழுந்து, என் கையிலிருந்து சடக்கென்று பறித்துக் கொண்டார். "என்ன பொடி இது?" என்று நான் மீண்டும் கேட்டதற்கு, "மைண்ட் யுவர் பிஸினஸ்!" என்று எரிந்து விழுந்துவிட்டு வெளியே போய்விட்டார்.

'என்ன வஸ்து அது?' என்ற கேள்வி என்னுள் உழல ஆரம்பித்தது. நான் தாய்மை யுற்றிருந்த காலம் அது. பரிசோதனைக்காக டாக்டரிடம் சென்ற நான் மெல்ல இவருடைய விசித்திர போக்கையும் கண்டு எடுத்த பொட்டலத்தையும் பற்றி விவரமாய் சொன்னபோது அவர் தெரிவித்த செய்தி எனக்கு அதிர்ச்சியைத் தந்தது. "நீங்க சொல்றதை பார்த்தால் அது கஞ்சாவாகவோ அல்லது ஹெராயினாகவோ இருக்க வேண்டும்" என்று ஆரம்பித்து அதனுடைய கடுமையான விளைவுகளையும், அதற்குப் பலியானவர்களின் விபரீத முடிவையும் சொல்லி, கலங்கி போயிருந்த எனக்கு, "நீங்கள்தான் படிப்படியாக திருத்த வேண்டும்" என்று ஆறுதல் வழங்கி அனுப்பி வைத்தார்.

அவருடைய தமக்கையின் மூலம் அவருக்குக் கல்லூரி நாட்களின் போதே அந்தப் பழக்கம் உண்டு என்பதை உறுதிப்படுத்திக் கொண்ட போது, 'ஆண்டவனே! என்ன செய்யப் போகிறேன்?' என்று கையைப் பிசைந்து கொண்டு நின்றுவிட்டது என்னவோ நிஜம்தான். பிறகு எனக்கு நானே தைரியம் சொல்லிக் கொண்டு, பல மணி நேரங்கள் சிந்தித்து என்னுடைய முதல் அஸ்திரத்தை ஏவினேன்.

'கஞ்சா', 'போதைக்கு அடிமை', 'அபின்' என்ற தலைப்புக்களில் நிறைய கட்டுரைகள், புத்தகங்கள் ஆகியவற்றை நூலகத்திலிருந்து எடுத்து வந்து அவருடைய கண்களில் படும்படி வைத்தேன்.

பிறகு, "ஏங்க, கஞ்சா அடித்தால் சும்மா வானத்திலே பறக்கற மாதிரி இருக்குமாமே! கலர் கலரா தெரியுமாம். குஷியா இருக்குமாம். இதிலே போட்டிருக்கே? அப்படிங்களா?" என்றேன். அதற்கு அவரிடமிருந்து பதிலேதும் வராமல் போகவே, நானே தொடர்ந்தேன். "இங்கே எழுதியிருக்கிறதைப் பார்த்தா எனக்கே ஒருமுறை கஞ்சா அடிக்கணும்னு ஆசையா இருக்கு. எங்கங்கே கிடைக்கும்? புகைச்சு பார்த்து நிஜமான்னு தெரிஞ்சுக்கணும்...." நான் வார்த்தையை முடிக்கக்கூட இல்லை. 'பளார்' என்று ஒரு அறை விழுந்தது.

"வயிற்றிலே குழந்தையை வச்சுகிட்டு, கஞ்சாவா புகைக்கிற கஞ்சா? என்ன துணிச்சல்? பொம்பளையா நீ?" காச்மூச்சென்று கத்த ஆரம்பித்தார்.

"சபாஷ்! குழந்தை பெண்டாட்டி ஞாபகம் வேறு இருக்கா? நீங்க கஞ்சா புடிச்சா மட்டும்; உடம்பு பாழாகாதா? நான், குழந்தை எல்லாருமே விதிக்கு வந்திடுவோமே" என்று அழ ஆரம்பித்தேன்.

வசமாய் பிடிபட்டுவிட்ட நிலையில், அவர் ஒரு கணம் ஸ்தம்பித்துப் போய்விட்டார்.



சிறிது நேரம் பேசவே இல்லை. அப்புறம் தானே, கல்லூரி நாட்களில் நண்பர்களால் கஞ்சா அறிமுகமானதும், தான் எக்கச்சக்க மாய் அடிமையாகி, திருமணமான பின்பும் கூட அதன் மாயப் பிடியினின்று விலக முடியாமல் தவிப்பதையும் சொல்லி, என் கை களைப் பற்றியவாறே கண் கலங்கியதும், நான் அப்படியே உருகிப்போனேன். இவரை எப்படியாவது கஞ்சாவினுடைய ஆதிக்கத் திலிருந்து விடுவித்தே தீருவது என்று முடிவு எடுத்துக் கொண்டு, செயலாற்றவும் ஆரம் பித்தேன்.

அவர் கொண்டு வரும் சிகரெட்டுகளை எறிந்துவிட்டு, சாதா சிகரெட்டுகளை மாற்றி வைத்தேன். இதைப் புரிந்துக் கொண்டா லும், என்னைக் கேட்க முடியாமல் 'கம்', மென்று இருந்தார். இது என் முதல் வெற்றி யாயிற்று. அவரிடமிருந்து லேசாக கஞ்சா வாசனை வந்தாலும், அன்று முழுவதும் நான் பட்டினி. பச்சைத் தண்ணீர் கூட குடிக்காமல் பிடிவாதம் பிடிப்பேன். என்னுடன் என் குழந்தையும் வாடுவதைக் கண்டு பதறுதா அவர் மனம்? சில நாட்களில் திருட்டுத் தனமாக கஞ்சா அடிப்பதும் நின்றுவிட்டது. நடு ஜாமத்தில் அவர் எழுந்துக் கொண்டால், அவரை படுக்கையைவிட்டே போகமுடியாத படி, இறுக்கமாய் அணைத்தவாறே, தூங்கா மல் விழித்தே கிடப்பேன். அது இல்லாமல் ரொம்பப் பித்து பிடித்ததுபோல் தோன்றி னால், பாலில் ஒரு காம்போஸ் போட்டுக் கொடுத்துவிடுவேன். அவர் நிம்மதியாகத் தூங்க, நான் கண்ணீர் சிந்தியபடி அவரையே பார்த்துக் கொண்டிருப்பேன். பணத்தை அளவாய்க் கொடுப்பேன்.

டாக்டரிடம் சென்று மாத்திரைகளைப் பெற்றுக் கொண்டோம். சத்தான உணவு, மருந்து எனது சிறு கட்டுப்பாடுகள், பணி விடைகள் இவைகள் அவருள் பெரும் மாறு தலை உண்டு பண்ணியதும் நான் மகிழ்ந்து போனேன்.

இதற்கிடையே எங்களுக்கு அழகான ஆண் குழந்தை பிறக்கவே, அவருடைய ஈடுபாடு அவன் பக்கமாய்த் திரும்பியது. ஆறே மாதங் களில்கஞ்சாவின் நினைவுகூட அவரைவிட்டே விலகிப் போனது. சாப்பாட்டுக்குப் பிறகு சிகரெட் புகைப்பார். அதுவும் எனது பர் மிஷனோடு.

இப்போது நாங்கள் நிறைவாய் வாழ் கிறோம். நான்கு பேருக்குத் தெரியாமல், நான்கு சுவர்களுக்குள்ளேயே அவரைத் திருத்தி, நல்வாழ்வு படுத்த எனக்கு மனோ பலத்தையும், சாமர்த்தியத்தையும் தந்த இறை வனுக்குத்தான் நன்றி சொல்ல வேண்டும்.

— திருமதி அனுராதா சேகர்,
சென்னை — 88.





# ...எப்படித் திருத்தினேன்

என் கணவரிடம் எல்லாவித நல்ல குணங் கள் இருந்தாலும் குடும்பத்திற்கு ஒத்து வராத எங்களுக்குப் பிடிக்காத ஒரு குணத்தையும் கொண்டிருந்தார்.

என் கணவர் மிகுந்த செலவாளி. பணம் எவ்வளவுகையில்இருந்தாலும்அதைஉடனே செலவு செய்யும்வரை அவருக்குத் தூக்கம் வராது.வேண்டியவை,வேண்டாதவைஎன்ற பாகுபாடே கிடையாது. கண்ணில் கண்ட பொருட்களை எத்தனை விலையானாலும் கவலைப்படாமல் வாங்கிவிடுவார்.

"வீட்டுச் செலவுக்கு வைத்திருக்கும் பணத் தில் இப்படிக் கன்னாபின்னாவென்று சாமான் களை எல்லாம் வாங்கி வருகிறீர்களே!" என்று நான் கோபித்தாலும், "இதுவும் நம் வீட்டிற்காகத்தானே வாங்கினேன். எனக் காக வாங்கினேனா?" என்பார்.

"நமக்கு மூன்று குழந்தைகள். படித்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் மேற்படிப் புக்காக சேமித்து வைக்க வேண்டாமா? இப் படி செலவு செய்கிறீர்களே" என்று எத் தனையோ முறை சண்டை போட்டும் அவர் திருந்தவில்லை. மாதாந்திர சாமான்கள் வாங் கிப்போட நான் படும் அவஸ்தை கொஞ்ச நஞ்சமல்ல. பத்தாம் தேதியே மாசக் கடைசி மாதிரிதான்.

இவரைத் திருத்த யோசித்து ஒரு வழி கண்டு பிடித்தேன். இவர் தானோ, குழந்தை களோ சாப்பிடாவிட்டால் ரொம்பவும் வருத்தப்படுவார்.



மறுதினம் நான் சமையலே செய்யவில்லை. குழந்தைகளிடம் என் திட்டத்தைக் கூறியதும் அவர்களும் என் திட்டத்திற்குச் சம்மதித்தார்கள்.

மாலை என் கணவர் வீடு திரும்பியதும் நாங்கள் எல்லோரும் பேசாமல் அமர்ந்திருந்தோம். ''என்ன எல்லோரும் டல்லா இருக்கீங்க? இதோ பார், ஃபாரின் பொம்மை! கீ கொடுத்தால் டான்ஸ் ஆடும்'' என்றபடி ஒரு பெரிய பார்சலைக் காட்டிச் சிரித்தார்.

''அப்பா, அம்மா இன்னிக்கு சமைக்கவே இல்லை. அம்மா, நாங்க யாரும் சாப்பிடவே இல்லை'' என்றான் பெரிய மகன். அவர் பதறியபடி, ''வாட்! சாப்பிடவில்லையா? ஏன்? என்ன ஆச்சு?'' என்றார்.

''மாதம் ஐந்து தேதிக்குள் கண்டதை வாங்கிப் பணம் பூரா செலவு செய்துவிட்டால் வீட்டுக்கு வேண்டிய உப்பு, புளி, மிளகாய், அரிசி எல்லாம் எங்கிருந்து வரும்? நீங்கள் வாங்கிக் கொண்டு வந்த பொருட்களை எல்லாம் வேடிக்கைப் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருக்கிறோம். அப்போதாவது பசிக்காமல் இருக்கிறதா பார்க்கலாம்'' என்றேன் ஆத்திரமாக.

அவர், ''அடடா! இதுதான் கோபமா! பாவம் குழந்தைகள்'' என்றார் மனம் தாங்காமல்.

''ஒரு நாளைக்கே இப்படிப் பதறுகிறீர்களே. நீங்கள் சேமிக்காமல் செலவு செய்யும் வேகத்தைப் பார்த்தால் இனி மாதம் பதினைந்து நாட்களாவது நம்ப குழந்தைகள் பட்டினி கிடக்க நேரிட்டாலும் ஆச்சரியமில்லை'' என்றேன்.

அவர் வருத்தம் மேலிட ''இப்படி என்று தெரியாமல் போய்விட்டதே. நான் இனி கண்டவற்றை வாங்குவதை நிறுத்திவிடுகிறேன். பணத்தை அப்படியே உன்னிடம் கொடுத்துவிடுகிறேன். 'பிராமிஸ்' போதுமா? உங்கள் உண்ணாவிரதத்தை நிறுத்திவிட்டு ஏதாவது சமைத்துச் சாப்பிடுங்கள். நான் இந்தப் பொம்மையை என் நண்பனிடம் வாபஸ் செய்துவிட்டு இருநூறு ரூபாயை வாங்கி வந்துவிடுகிறேன்'' என்றபடி கிளம்பினார்.

இப்போது என் கணவர் சிக்கனத்திற்கு ஓர் எடுத்துக் காட்டாக இருக்கிறார். சேமித்து ஸ்கூட்டர் வாங்கிவிட்டார். குழந்தைகளின் படிப்புச் செலவும், முக்கியமான வீட்டுச் செலவும் தவிர வேறு எந்தச் செலவானாலும் பலமுறை யோசித்த பின்பே செய்கிறார்.

— விஜயஸ்ரீ, திருச்சி—14.

எனக்குத் திருமணமாகி ஒரு வருடம் ஆகிறது. நான் என் பெற்றோருக்கு ஒரே பெண். மிகவும் செல்லமாக வளர்ந்தவள். ஓரளவு வசதி உள்ள இடத்தில்தான் திருமணம் செய்து கொடுத்தார்கள். என் கணவருக்குஏற்கனவேஒருபெண்ணின்தொடர்பு இருந்திருக்கிறது. திருமணம் செய்துவிட்டால் திருந்தி விடுவார் என்று நம்பி திருமணம் செய்தார்கள். ஆனால் அவர் திருமணம் ஆகியும் திருந்தவில்லை. என்னை அடித்துத் துன்புறுத்துவார். நானும் இதை என் பெற்றோருக்குத் தெரிவிக்க விரும்பவில்லை. என்றாவது ஒருநாள் திருந்துவார் என்ற நம்பிக்கையில் இருந்தேன்.

அன்று கிருத்திகை. விரதம் இருப்பது வழக்கம்தான். காலை மணி 10 இருக்கும். குளித்துவிட்டு மதிய உணவிற்குச் சமைக்க பரணையில் இருந்து விறகு எடுத்துக் கொண்டு இருந்தேன். எங்கோ சென்றுவிட்டு வந்தவர்,

''இப்போதுதான் விறகு எடுக்கறியா? எப்போ சமைச்சு எப்ப சாப்பிடறது? அவளா இருந்தா என்னை இவ்வளவு நேரம் சாப்பிடாமல் இருக்க விடமாட்டா'' என்று கூறிக் கொண்டே விறகுக் கட்டையால் அடித்துவிட்டார்.

கையைப் பிடித்து வெளியே இழுத்து வந்து, 'நீ வெளியே போ'' என்று கூறினார்.

அந்த நேரத்தில் தலைதீபாவளிக்கு அழைத்துச் செல்ல என் பெற்றோர் வந்து கொண்டிருந்தனர். அவர்கள் வருவதைப் பார்த்த நான், ''வேண்டாங்க. லேசாத்தான் காயம் பட்டிருக்கு. இதுக்கு எதுக்கு டாக்டர்கிட்ட... வேண்டாம். எல்லாம் சரியாயிடும்!'' என்று கூறினேன்.

அம்மா வந்து, ''என்னம்மா இது?'' என்று கேட்டதற்கு, ''விறகு எடுக்கும்போது விறகு தலையில் விழுந்து லேசா காயம் பட்டிருக்கு. இதுக்குப்போய் டாக்டருகிட்டே இழுத்துட்டு போறாரும்மா'' என்று கூறி மறைத்துவிட்டேன்.

என் கணவர் திகைத்துப் போய் நின்றுவிட்டார். அன்று முதல் என் கணவர் அப்பழக்கத்தை விட்டுவிட்டார். நாங்கள் இப்போது சந்தோஷமாக இருக்கிறோம். பொறுமைக்கு அழிவு இல்லை என்பதை நான் மட்டும் அறிந்ததல்லாமல் மற்ற பெண்களுக்கும் தெரிவிக்க விரும்புகிறேன். இது என் கணவரின் முழு சம்மதத்தோடு எழுதுகிறேன்.

— சுமதி சுரேஷ், சென்னை—85.

---

# தீபாவளிக்



# கோலங்கள்



ஆர். பத்மாவதி

நமக்குத் தேவையான சானிடரி பாதுகாப்பு கிடைக்குமா என்பதும் நிச்சயமில்லை. அது மட்டுமல்ல; எப்போது எந்த அசம்பாவிதம் நடந்து அவமானப்பட வேண்டி வருமோ என்று பயந்து நடுங்கிக் கொண்டே இருக்க வேண்டும்.

என்னைப் பொறுத்தவரையில் இதிலெல்லாம் ஓரளவு பழக்கப்பட்டுவிட்டேன் என்றே சொல்லலாம். தவிர, அந்தக் காலத்தில் சங்கடமான அந்த 5 நாட்களில் பெண்கள் வெளியே போவது என்கிற வழக்கமெல்லாம் அறவே கிடையாது.

---

**ஆனால் இப்போது காலம் மாறிவிட்டது... பெண்கள் மாதத்தின் அந்த 5 நாட்களில்கூட துடிப்பாக செயல்பட வேண்டியுள்ளது.**

---

ஆனால் இப்போது காலம் மாறிவிட்டது. இப்போது கேர்ஃப்ரீ போன்ற நவீன சானிடரி பாதுகாப்பு கிடைக்கும் இந்த நாளில், என் மகளும் நான் இளம் பெண்ணாக இருந்ததைப் போலவே ஏன் வீட்டிற்குள் அடைபட்டுக் கிடக்கவேண்டும். நான் வளர்ந்த காலம் வேறு. என் மகள் வளரும் சூழ்நிலை வேறு இன்றைய சிறுமிகள் மாதத்தின் அந்த 5 நாட்களில் கூட துடி துடிப்பாக செயல்பட வேண்டியுள்ளது.

என் மகளைப் பாருங்களேன். அவள், நான் இளம் பெண்ணாக இருந்த காலத்தில் செயல்பட்டதைவிட மிக...மிக சுறுசுறுப்புடன் செயல்பட வேண்டியிருக்கிறது...படிப்பு விஷயத்திலும் சரி, இதர வேலைகளிலும் சரி. நாங்கள் இருந்ததைப் போல என் மகளையும் வீட்டிற்குள் முடக்கிப்போட நான் விரும்பவில்லை.

அதனால்தான் நான் கேர்ஃப்ரீயைத் தேர்ந்தெடுத்தேன். என் மகளின் துடிப்புக்கும் துள்ளலுக்கும், ஆட்டத்துக்கும் ஓட்டத்துக்கும் ஈடு கொடுக்கும் இணைபிரியாத் தோழி கேர்ஃப்ரீ.

முக்கியமான அம்சம் என்னவென்றால் கேர்ஃப்ரீ ஒரு ரெடிமேட் நாப்கின். துணியையும் பஞ்சையும் வைத்து மடித்து, நேரத்தை வீணாக்கும் தொல்லை கிடையாது.

நான் அந்தக் காலத்தில் செய்தது போல என் மகள் துவைத்து, காயப் போட்டு, சங்கடப்பட வேண்டியதில்லை. தேவையான நேரத்திலே சட்டென்று புத்தம் புதுசாக, சுத்தமான ஒரு நாப்கினை எடுத்து அவள் உபயோகிக்கலாம்.

ஒரு விஷயத்தை நான் ஒப்புக்கொண்டாக வேண்டும். முதலில் எனக்கு இத்தகைய ரெடிமேட் நாப்கின்மீது கொஞ்சம் அவநம்பிக்கை இருக்கவே செய்தது. ஆனால், இப்போது என் மகள் மாசாமாசம் கேர்ஃப்ரீ பயன்படுத்தி மகிழ்ச்சியோடு இருப்பதைப் பார்த்ததும் எனக்குப் பூரண நம்பிக்கை ஏற்பட்டு விட்டது. தேவையான சானிடரி பாதுகாப்புக்கும், அசம்பாவிதம் எதுவும் நடக்காமல் தடுக்கவும் சானிடரி நாப்கின் பெரிதாக, கனமாக இருக்க வேண்டும் என்று நான் எண்ணி வந்தது தவறு என்பது இப்போது விளங்குகிறது.

கேர்ஃப்ரீ உபயோகிப்பதால் சுகமாகவும் பாதுகாப்பாகவும் உணர்வதாக என் மகளே சொல்கிறாள். பயமின்றி, கவலையின்றி வெளியே சுற்றவும் முடிகிறது என்றும் கூறுகிறாள். அப்பாடா! எனக்கு ஒரு கவலை விட்டது.

---

**கேர்ஃப்ரீ பயன்படுத்துவதில் சிரமமோ சிக்கலோ எதுவுமே கிடையாது. இதனாலேயே என் மகளுக்கு எந்த விதமான பிரச்னையும் இல்லை. அதைக் குறித்து நான் சந்தோஷப்படுகிறேன்.**

---

எனக்குக் கிடைக்காத ஒரு சுதந்திரமும் பாதுகாப்பும் கேர்ஃப்ரீ மூலம் என் மகளுக்குக் கிடைத்திருப்பதைப் பார்த்துப் பூரிப்படைகிறேன். ஒரு பெண்தான்—அதுவும் ஒரு அன்னைதான்—என்னுடைய மன உணர்வுகளைச் சரியாகப் புரிந்துகொள்ள முடியும்.

காலத்தோடு நாமும் மாறியாக வேண்டும். அதுவும் நமக்கு அதிக சுதந்திரமும் பாதுகாப்பும் தருகிற கேர்ஃப்ரீ வடிவிலே அந்த மாற்றம் இருக்குமானால், அதை நாம் வேண்டாம் என்று ஒதுக்குவானேன்?




கிடைக்கிறது. 10 உள்ள பேக் மற்றும் சிக்கனமிக்க 20 மற்றும் 30 உள்ள பேக்குகளிலும்

*கேர்ஃப்ரீ சானிடரி நாப்கின்கள்— பூரண சுகம், பரிபூரண பாதுகாப்பு மாறுகின்ற காலத்துக்கேற்ற மகத்தான வசதி.*

Johnson & Johnson

# ராசி பலன்

## நவம்பர் '85



### மேஷம்

உடல்நலம் சரியில்லாமல் இருப்பவர்கள் இந்த மாதம் மேலும் எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும். எந்தச் செய்திக்கும் அதிகம் அலட்டிக் கொள்ளாமல் நடப்பது எல்லாம் நன்மைக்கே என இருந்து விடுவது நல்லது. உறவினர்களிடையே சுமுகமான உறவு நிலவும். குடும்பப் பந்தம், பற்று காரணமாக உங்களுடைய எதிர்காலம் தெளிவுடையதாகவே இருக்கும். பணப் பிரச்னை அதிகம் இராது.



### ரிஷபம்.

தெய்வ அருளால் நடந்தது போல சில விஷயங்கள் இம்மாதத்தின் முதல் பதினைந்து தினங்களுள் நடக்கும். இதனால் காழ்ப்புணர்ச்சியால் உங்களை விட்டு உறவினரோ நண்பர்களோ பிரியக் கூடும். இதைப் பற்றிக் கவலைப்படாமல் மேற்கொண்டு எதிர்காலத் திட்டங்களில் கவனம் செலுத்துவது நல்லது. ஆனால் அந்த நபரிடம் ஜாக்கிரதையாக இருப்பது நல்லது. தெய்வ அருள் உங்களுக்கு நிறையவே உண்டு.



### மிதுனம்

குழந்தைகளால் அதிகப் பணச் செலவு அல்லது மனோ பாதிப்பு ஏற்படும். அவர்களுடைய உடல் சுகவீனம் காரணமாகவோ, மற்ற பிரச்னைகளின் காரணமாகவோ உங்களுடைய அலுவல்களில் பாதிப்பு ஏற்படலாம். மனத்துக்கு இனிய உறவுகளிடம் அதிக உரிமைகளை எடுத்துக் கொள்ளாமல் இருப்பது நல்லது. அதிர்ஷ்டப் பரிசோதனைகளில் ஓரளவே வெற்றி உண்டாகும். மாத இறுதிக்குப் பிரச்னைகள் சுமுகமாகும்.



### கடகம்

பணத் தட்டுப்பாடு அதிகமாக இருக்காதுதான். எனினும் உங்களுடைய உடல் அல்லது மனநிலை பாதிக்கக் கூடிய விசேஷங்கள் ஏற்படலாம். இதனால் உங்கள் வாழ்க்கையில் முக்கியமான பல திருப்பங்களைக் காணுவீர்கள். எந்த நிலையிலும் மனம் கலங்காத நீங்கள் தகுந்த துணையுடன் பல பிரச்னைகளைக் கடந்து விடுவீர்கள். குடும்பத்தில் மனவேற்றுமையைப் பொருட்படுத்தாமல் இருந்து விடுவது நல்லது.



### சிம்மம்

வியாபார ஒப்பந்தங்களிலும், புதிய முயற்சிகளிலும் முன்னேற்றம் ஏற்படும். வயதில் இளையவர்களின் ஒத்துழைப்புடன் பல நல்ல காரியங்களுக்கு அடித்தளம் இடுவீர்கள். இதுவரை இருந்து வந்த பிரச்னைகள் முடிந்து பூரண சுதந்திரத்துடன் செயல்படும் உரிமை உங்களுக்கு ஏற்படும். பணவரவு நல்ல முறையில் இருக்கும். மேலதிகாரிகளின் ஒத்துழைப்பும் கிடைக்கும்.

### கன்னி



பொருளாதாரப் பிரச்னை திடீரென்று ஏற்பட்டு உங்களுக்கு நெருக்கடியை உண்டாக்கக் கூடும். உங்களைவிட மூத்தவர்களிடம் இருந்து கிடைக்கும் உதவியால் அதைச் சமாளித்து விடுவீர்கள். மேலதிகாரிகளின் கவனம் உங்கள் மேல் நல்ல முறையில் விழும். இம்மாதத்தின் பிற்பகுதியில் பலன்களைத் தரக் கூடிய திட்டங்கள் சாதகமாக முடியும்.

### துலாம்



வெகுநாட்களாக உங்களிடம் இருந்து வந்த குழப்பமெல்லாம் நீங்கி மனமகிழ்ச்சியும், சுமுகமான உறவும் ஏற்பட நிறைய வாய்ப்புக்கள் இருக்கின்றன. வெளியூர்ப் பிரயாணங்களின் மூலமாக நீங்கள் எதிர்பார்த்த லாபங்கள் அதிக சிரமமின்றிக் கிட்டிவிடும். கணவன் மனைவி உறவும் சந்துஷ்டியுடன் இருக்கும். இம்மாதம் பொதுவாக விசேஷங்கள் ஏதுமின்றி அமைதியாகவே செல்லும்.

### விருச்சிகம்



தவறாகப் புரிந்து கொள்வதாலும், முன் கோபத்தாலும் உங்களுடைய நல்ல எதிர்கால வாய்ப்புக்களை இழந்து விடாதீர்கள். மற்றவர்களுடன் சுமுகமாகச் செல்லும் குணத்தைப் பெற்று விட்டீர்களானால் அமைதியான தீர்க்கமான எதிர்காலம் உண்டு. குடும்பப் பகையினால் சில தொந்தரவுகள் முதல் வாரத்தில் ஏற்படும். பணப் பற்றாக்குறை அதிகமாக இராது.

### தனுசு



எதையுமே மிகவும் ஆராய்ச்சி செய்யும் நோக்கத்துடன் ஆழமாக விசாரிக்க முற்பட்டு உங்களைச் சுற்றியிருப்பவர்களிடம் கெட்ட பெயர் வாங்கிக் கொள்ளாதீர்கள். உங்களுடைய தவறில்லாத மனத்தைப் புரிந்து கொள்ளாததால் வீண் பழிக்கு ஆளாக நேரிடும். ஒதுங்கியிருந்து உங்களுடைய கடமையைச் செய்து வந்தீர்களானால் நல்ல பயன்கிட்டும். குடும்ப உறவிலும் சில மாற்றங்கள் ஏற்படவிருக்கிறது.

### மகரம்



உடல்நலக் குறைவினால் திட்டமிட்ட வேலைகளை அல்லது வெளியூர்ப் பிரயாணங்களைத் தள்ளிவைக்க நேரிடும். உடல் நலம் பெரிய அளவில் பாதிப்பில்லாமல் விரைவில் குணமடைந்து விடுவீர்கள். குடும்பத்தில் மாத நடுவில் சுப நிகழ்ச்சிகள் உண்டாகும். உங்களுடைய உறவினரின் மூலம் சுபச்செய்தியொன்று வரும். இதனால் நீண்ட நாளாகத் தடைப்பட்டிருந்த காரியம் விரைவில் கூடிவரும்.

### கும்பம்



சில பிரச்னைகளுக்கு என்ன செய்வது என்று தெரியாமல் தவிக்கலாம். வேலைப்பளுவும் அதிகமாக ஏற்பட்டு அன்றாடக் கடமைகளையும் செய்ய முடியாமல் போகலாம். இவையனைத்தும் முதல் பதினைந்து நாட்களுக்குள் முடிவடைந்து நிலைமை சீர்பெற்று விடும். பண வரவு சுமுகமாக இருக்கும். குடும்பத்தினர்களுடன் கேளிக்கைப் பொழுது போக்குக்கு இம்மாதத்தின் கடைசி வாரம் சிறந்தது.

### மீனம்



உங்களுடைய சொத்து அல்லது உறவினர் அல்லது வாகனத்தினால் ஓரளவு தொல்லையும், அதனால் சில நாட்களுக்கு அலைச்சலும் ஏற்படலாம். ஓரளவு பணச் செலவும் அதிகமாக இருக்கலாம். ஆனால் குடும்பத்தினரிடையே உறவும், குழந்தைகளிடம் சந்துஷ்டியும் அதிகமாகவே இருக்கும்... வெளியூர்ப் பிரயாணங்களோ, தெய்வ வேண்டுதல்களோ நல்ல முறையில் நிறைவேறும்.

# கோலங்கள் கோலமாவதில்லை

**மே**ளச் சத்தம் இங்கேயே கேட்கிறது. ஜதையாக பாண்ட் வேறு. விமலா வீட்டுக் கல்யாணம் நேற்றிலிருந்தே தெருவில் யாரையும் தூங்க விட்டிருக்காது. அத்தனையொரு அமர்க்களம்.

"என்ன சொல்றீங்கலே, பாருங்க. லேடீஸ் டிரெஸ் பண்ணிக்கறதுன்னு கொஞ்சம் நேரம் ஆகத்தான் செய்யும். ஆம்பிளைங்களாட்டம் ஒரு ஷர்ட்டை மாட்டிக்கிட்டு பாண்ட் ஜிப்பை இழுத்துக்கிட்டே ஓட முடியுமா...?"

"அந்த குறை வேணுன்னிட்டுத்தான் யூனிசெக்ஸ் டிரெஸ்ஸெல்லாம் வந்துடுத்து. இன்னமும் கர்நாடகமா புடவைதான் கட்டிப்பேன்னு... ஆமாம், உனக்கும் காதம்பரிக்கும் வித்தியாசம் இல்லையா... அடுத்தபடியா தன் கல்யாணம் வரச்சே சௌகரியமா முன்னோடியா இருக்குமேன்னு இப்பவே அலங்காரத்திலே ஒத்திகை பாத்துக்கறாப்பல இருக்கு. கேக்கறதா, காதம்பரீ..."

கிருபாகரனும் குஸுமாவும் சீண்டுவதைக் கேட்டுச் சிரித்துக் கொண்டே வெளிப்படுகிறாள் காதம்பரி. "நீங்க என்ன சொன்னாலும் நோ கமெண்ட்ஸ்..."

"ஐய்யே, இதானா புடவை... இதுக்குத்தானா இத்தனை நாழி...குஸுமாவைப்பாருங்க. இந்த ஆறு இஞ்ச் அகலம் சரிகையே போறல்லே. இந்த க்ஷணம் கடைக்குப் போய் பத்து இஞ்ச்லே கெட்டிக் கரை போட்ட புடவை வாங்கணும்னு. எந்த பாங்க்லே கொள்ளையடிக்கலாம்னு யோசிச்சிண்டிருந்தேன்."

"நல்லவேளை, ஞாயிற்றுக் கிழமையா, கடை கிடையாதே. தப்பிச்சேன்..." கிருபாகரன், குஸுமாவைப் பார்த்துக் கண்ணடிக்கிறார்.

காதம்பரி குனிந்து பார்த்துக் கொள்ளுகிறாள். சிவப்பு நிற கிரேப் புடவை சிம்பிளாத்தான் இருக்கிறது. நேற்று வர பூஜை (மாப்பிள்ளை அழைப்பின்) யின் போது பார்த்த தகடு புடவை, ஜரிகை ஜாலப்பா. லேஸ் அங்கவஸ்திரங்களின் முன் இது இன்னும் சாதாரணமாய்த்தான் காட்டும்.

"அவர் சொல்றதையெல்லாம் சீரியஸா எடுத்துக்காதீங்க. எதை உடுத்தினாலும் உங்களுக்கு நல்லாருக்கு. சேப்பு கலர்லே அப்படியே டாலடிக்கிறீங்க இன்னும் என்ன வாங்க. ரொம்ப லேட்டா வுது..."

அந்தப் பெரிய வீட்டைச் சுற்றித் தோட்டம் பூராவையும் அடைத்துப் பந்தல். நம் ஊரைப் போல ஓலை வேய்ந்த கொட்டாரப் பந்தல் இல்லை. படுதாவிலானஷாமியானா. பச்சை ஓலை முகப்பு. வாழைக்குலையும் தென்னம்பாளையும் துலுக்க சாமந்தி சரமுமாய் ஜோடனை. தோரண விளக்குகள்.

அந்த பகட்டையும் மினுமினுப்பையும் பார்த்துக் கொண்டே நுழைகிறாள் காதம்பரி. பன்னீர் துளிகள். சந்தனம். மஞ்சள் குங்குமம் தேங்காய் வைத்த தாம்பூலப்பை எல்லாம் முதலிலேயே நீட்டப்படுகின்றன.

"ஏனு இஷ்டு லேட்டு...." கேட்டுக் கொண்டு எதிர்ப்படுகிறார் விமலாவின் மாமியார்.

"லேடீஸ் சமாசாரா கொத்தில்லே...." என்று ஆரம்பிக்கும் கிருபாகரனை வெட்டுகிறாள் குஸுமா.

"லேடீஸை சொல்றதே வாடிக்கையா போச்சு. உங்களுக்கு...."

"சரி, சரி, காதம்பரியை கூட்டிட்டு போயி முன்னாடி உட்காரு. ஷார்ப் கல்யாணமெல்

**கோமளாவரதன்**

லாம் ,, எப்படியிருக்குதுன்னு பார்க்கட்டுமே...''

விமலா எதிர்ப்பட்டு கையைப் பற்றிக் கொள்கிறாள். இதே தெருவிலே இருந்துண்டு இப்பதானு வரது. அதுவும் குலசேமா கூட்டிண்டு வரணும்... என்னடா காணமேன்னு

''நிஜமா சொல்லுங்க, இவ்வளவு பேர் மத்தியிலே என் ஞாபகம் வந்துதா...?''

''வராம போகுமா. அப்புறம் சிநேகத்துக்கு என்ன அர்த்தமாம்... முன்னூர வாங்க...'' கன்னடக்காரர்களின் கல்யாண சடங்குகள் ரொம்ப மாறுபட்டுத்தான் இருக்கின்றன. அவள் அமர்ந்த போது மணமகன் ஏற்கெனவே மேடையில் இருக்கிறான். பஞ்சகச்சமும் தலைப்பாகை நெற்றிப் பட்டமுமாக நிற்பவன் முன் திரை போல துணி பிடிக்கப்படுகிறது. உள்ளிருந்து மணமகளை அழைத்து வருகிறார்கள்.

புடவையின்மேல் ஒரு பட்டுத் துணியை மடித்து மார்பின்குறுக்காக ஆங்கில 'வி' போல போர்த்தி. பூவும் நகையும், புன்னகையும் மின்ன...

சுப வேளையில் திரை விலகி இருவரும் பார்த்துக் கொள்ள வேண்டுமாம்.

''அப்படின்னு வழக்கம். ஆனா எங்க ஜெயா அவனை எத்தனையோ தரம் பார்த்தாச்சே. பார்த்து பழகி, பிடிச்சுதானே கல்யாணம் பண்ணிக்கிறாங்க. ஆனாலும் சம்பிரதாயம்னு வரச்சே எதைவிட முடியறது சொல்லுங்க....'' வென்று ரன்னிங் காமெண்டரி கொடுக்கிறாள் விமலா.

முகூர்த்தத்தின்போது மணமக்களின் கைகளை சேர்த்து வைத்து, அதில் வெற்றிலைப் பாக்கு தேங்காயெல்லாம் வைத்து வந்திருந்த பெரியவர்களெல்லாம் பால் வார்க்கின்றனர்.

''அதென்ன அவங்களை ஆளுக்கொரு தட்டு அரிசி மேலே நிக்க வெச்சிருக்கீங்க.''

''அரிசி சுபிட்சத்துக்கு அறிகுறி. தமிழ் நாட்டிலே இந்தமாதிரி இல்லையா....''

''ம்ஹூம்....''

வரிசையாக எல்லோர் கையிலும் அட்சதைக் கொடுத்துக் கொண்டே செல்கிறார். ஒருவர் அதற்குள் ஏதோ வேலையாகக் கூப்பிட, உள்ளே எழுந்து செல்கிறார்கள் விமலாவும் குலமாவும்.

சுற்றுமுற்றும் பார்க்கிறாள் காதம்பரி. பக்கத்திலிருந்தவர்கள் சிநேகமாய் முறுவலிக்கிறார்கள்.



எத்தனை பேர் வந்திருக்கிறார்கள்! பந்தல் கொள்ளாதகூட்டம். எட்டின உறவு, கிட்டின உறவு, தெரிந்தவர் அறிந்தவர் அத்தனை பேரும் குழுமியிருப்பார்கள் போலிருக்கிறது. கல்யாணப் பெண் ஜெயா அப்படி நேராக இந்த வீட்டுப் பெண் இல்லை. விமலாவின் மாமனுக்கு அண்ணுபேத்தியோஎன்னமோவென்று சொன்னார்கள். என்ன உறவு கொண்டாடிக் கொண்டு இந்தக் கல்யாணம் இங்கே நடக்கிறது... உறவுகள் கொண்டாட வேண்டுமென்றுதான் நடக்கிறது. குண்ட்லுபேட்டையில் பெரிய மிராகதார். ஆனாலும் அத்தனை உறவுகளும் வர போக சௌகரியம் என்று இங்கே மைசூரில் நடத்துகிறார்கள். கல்யாண மண்டபம், சத்திரம் என்று செய்

யக்கூடாதா. இவர்கள் வீட்டில் செய்கிறார்கள். இவர்களும் என்னவோ தங்கள் பெண்ணுக்கே கல்யாணம் போல இப்படி ஓடியாடி உழைக்கிறார்கள். என்ன ஒற்றுமை. என்ன இணைந்த மனப்பான்மை!

அவள் கல்யாணமுந்தான் நடந்தது. ஆனால் உறவு என்று ஈ காக்கா இல்லை சத்தப்படுத்தாமல் தாத்தா கோவிலில் ஏற்பாடு செய்துவிட்டார். மாலை மாற்றி தாலி கட்டினதுதான் சடங்கு. அவர்தான் எல்லா உறவுமாக மொத்தமாய் நின்றார். ஆசீர்வதித்தார். அப்பா, வாஞ்சிநாதன், அந்த சமயத்துக்கு வந்து அட்சதைத் தூவியிருக்கக் கூடாது... வாழில்லாவிட்டாலும் மனிதனுவது வாழ்த்தியிருக்கக் கூடாதா, இல்லையே.. லட்சுமிக்கு உடம்பு சரியில்லாமல் போய் விட்டதென்று நொண்டி சாக்கு. சமயத்துக்கு இல்லாத உறவு. அப்புறம் ஆயிரம் இருந்தென்ன... இந்த மாதிரி ஆகுமா... இப்படியொரு குடும்பத்தில் அவள் ஏன் பிறக்காமல் போனாள்...?

தன் நினைவில் அமிழ்ந்து போனவளுக்கு என்னவோ குறுகுறுவென்கிறது. ஏதோ புரியாத உணர்வு.

சுற்றிலும் பார்க்கிறாள். சரியான கல்யாண சந்தடி. மறுபடி அவள் மேடைப் பக்கம் பார்வையை திருப்பியபோது, மேடைக்குப் பக்கத்தில் தூணருகில் ஒருவன்.... இவளையே பார்க்கிற மாதிரி இல்லையா... தெரியவில்லை. இப்போது அவன் மேடையைப் பார்ப்பது போலத்தான் படுகிறது.

தலையைத் தாழ்த்திக் கொள்ளுகிறாள். சற்றுப் பொறுத்து அவள் தலையை நிமிர்த்தும் போது..... அவன் இங்கேதான் பார்த்துக் கொண்டிருக்கிறான்.

தன் பின்னால் யாரையாவதா... அவள் லேசாய் திரும்பிப் பார்க்கிறாள்... ம்ஹூம்...

புடவை விலகியிருக்கிறதோ....

சரேலென்று குனிந்துப் பார்த்துக் கொள்கிறாள். புடவை, நெக்லஸ் எல்லாம் சரியாய்த்தான் இருக்கிறது.

லேசாய் சிரித்தானே இப்போது.... பிரமையா?...

எங்கேயாவது அவளை மீட் பண்ணியிருக்கிறானா, தொழில் முறையில்.... தலையை தாழ்த்தி ஓரக் கண்ணால் பார்த்து அந்த முகத்தை நினைவு அடுக்குகளில் தேடிப் பார்க்கிறாள். ம்ஹூம், சந்தித்த ஞாபகமில்லை.

திடீரென்று மேளம் வீறிடுகிறது. கருகமணி பொட்டு கட்டி, ஜெயாவைத் தன்னுடைய வளாக்கிக் கொண்டிருக்கிறான் மாப்பிள்ளை.

'பார்த்துப் பேசி, பழகி நீயாகவே தேர்ந்தெடுத்திருக்கிறாயாம். நாங்கள் சபை கூடியென்னவோ அங்கீகரித்து லைசன்ஸ் கொடுத்துவிட்டோம். அதற்கும் மேலே அதிர்ஷ்டம் என்று ஒன்று இருக்கிறதே.... உன் அதிர்ஷ்டம் எப்படியோ, பெண்ணே...' என்று நினைத்துக் கொண்டே, மற்றவர்களுடன் சேர்ந்து அட்சதையைத் தூவுகிறாள் காதம்பரி.

(தொடரும்)

# பேரீச்சம்பழ இனிப்புப் பச்சடி



பேரீச்சம்பழம் — 50 கிராம்.
கசகசா — ½ டீஸ்பூன்.
வெல்லம்—தூள் செய்தது ஒருகரண்டி அளவு.
புளி — சிறு எலுமிச்சை அளவு.
தேங்காய் — 1 சிறு துண்டு.
ஏலக்காய் — 2.
சீரகம் — ½ டீஸ்பூன்.
பச்சை மிளகாய் — 4.

செய்முறை: பேரீச்சம்பழத்தை கொட்டை நீக்கி வெந்நீரில் ஊற வைக்கவும். புளியைக் கரைத்து அதில் வெல்லத்தையும் சிறிது உப்பையும் போட்டு கொதிக்க வைக்கவும். தேங்காய், ஏலக்காய், கசகசா இவைகளை விழுதாக அரைத்து ஊறிய பேரீச்சம் பழத்தைத் தண்ணீரை வடிகட்டி எடுத்து நன்கு கையால் மசித்து கொதிக்கும் புளிக் கரைசலில் போட்டுக் கிளறவும். ஒன்று போலக் கொதித்து வரும் போது இறக்கி வைத்து நறுக்கிய பச்சை மிளகாய்களையும் சீரகத்தையும் தாளித்து இறக்கி வைக்கவும். புளிப்பும் இனிப்புமாக நன்றாக இருக்கும். காரமான அடை கட்லெட் போன்றவைகளுக்கும் வற்றல் குழம்பு சாதத்துக்கும் மற்றும் பஜ்ஜி, வடை ஆகியவற்றுக்கும் கூடத் தொட்டுக் கொள்ள நன்றாக இருக்கும்.

— ஜி. லதா.

# மோதிரம் ஒரு புதையல்



**கி.ராதாகிருஷ்ணன்**

நம் நாட்டின் பண்டைய நாகரிக வளர்ச்சியையொட்டி வளர்ந்த அணிகலன்களின் வரலாற்றைப் பற்றித் தெரிந்து கொண்டோம். அவ்வகையில் ஆதி மனிதர்கள் உடை அணிவதற்கு முன் உடலை அணிகலன்கள் மூலம் அலங்கரித்துக் கொண்டனர்.

கடலோரப் பகுதியில் இருந்தவர்கள் கிளிஞ்சல்கள், மீன் எலும்பு, பற்கள், அலைகளிலே அடித்துக் கொண்டு வரப்பட்ட பல்வகை நிறங்களுடன் கூடிய கூழாங்கற்கள் இவற்றை அணிகலன்களாகப் பயன்படுத்தினர். மலைப் பிரதேசங்களில் மான்களின் கொம்பு, 'யானைத் தந்தம், விலங்குகளின் எலும்புகள், அணிகலன்களாக ஆயின. நதியோர சமவெளிப் பிரதேசங்களில் தங்கம், இரத்தின கற்களை உபயோகிக்க முற்பட்டனர். நம் நாட்டு ஐந்திணைகளையொட்டி இருந்தது எனக் கூறலாம்.

பொன், இரத்தின கற்கள், அணிகலன்களைச் சுற்றிப் பல்வகை நம்பிக்கைகளும் நிலவி இருந்தன. நன்மை; கேடு, அதிர்ஷ்டப் போன்ற விளைவுகளில் நம்பிக்கை வைத்திருந்தனர். வியாதிகளைக் குணப்படுத்த மருத்துவத்திலும் பயன்படுத்தினர். இஷ்ட தேவதைகளை அலங்கரித்தனர். சவங்களை அணிகலன்களுடன் புதைத்தனர்.

மேற்கத்திய நாகரிகம் பல்வகையில் பிரிந்திருந்தது. சுமேரியாவில் பொன், இரத்தின ஆபரணங்கள் மலிந்து இருந்தன. ஆதி காலத்திலேயே அணிகலன்களைப் பற்றிய பலநுணுக்கங்களை அறிந்திருந்தனர். எகிப்து நாட்டிற்கு தனித்தொரு வரலாறு இருந்தது. ஃப்ரோவாக்களின் கல்லறைகளில் அணிகலன்கள் கொட்டிக் குவிந்திருந்தன.

தேவ கணங்கள், தாமரை மலர், பாம்பு, கழுகு எனப் பல உருவங்கள் சமய நம்பிக்கைகளையொட்டி பொறிக்கப்பட்டிருந்தன. தெய்வங்களுக்கு, அரசர்களுக்கு, பாமர மக்களுக்கு எனப் பல்வகையில் அணிகலன்கள் வேறுபட்டன. எகிப்து கலாச்சாரத்தில் பிற்காலத்தில் கிரேக்க, ரோம நாகரிகம் ஊடுருவிற்று. எகிப்து நாட்டில் பல அணிகலன்களில் ஸ்பிங்ஸ் உருவம் (பெண்ணின் தலை, சிங்க உடல் கொண்டது) தொன்மை காலங்களில் பொறிக்கப்பட்டிருந்தது. கிட்டத்தட்ட சிம்ம வாகனத்தில் துர்க்கை அம்மனின் உருவத்தை நினைவூட்டும்.



மைசீனியன் நாகரிகம் கி.மு. 2000 ஆண்டு அளவிலிருந்து தழைத்திருந்தன. கல்லறைகளில் கிடைத்த சான்றுகளின்படி அக்காலத்து அரசர்களின் ஆடைகளில் வட்ட வட்டமான பொன் தகடுகள் பின்னப்பட்டிருந்தன. மலர்கள், பறவையினங்கள், வண்ணத்துப் பூச்சிகள், ஸ்பிங்ஸ் உருவங்கள் ஆபரணங்களில் பொறிக்கப்பட்டிருந்தன. பொன் சங்கிலிகளில் காளையின் தலை, தாமரை மலர், பிறைச் சந்திரன், மாதுளை, பேரீச்சைப் பழ வகைகள் போன்ற உருவங்களும் இருந்தன. ஒரு அணிகலனில் கதிரவனின் ஒளிக்கிரணங்களுடன் கிராமிய சூழ்நிலை, வேட்டையாடுதல், போர்க் காட்சிகள் சித்திரிக்கப்பட்டிருந்தன. அத்தகட்டை இரு வண்டுகள் தாங்கிக் கொண்டிருந்தன. ஃபினீஷியன் நாகரிகம் தனித்தன்மையுடன் விளங்கியிருக்கவில்லை. கடல் வாணிப வழித்

தடங்களில் அமைந்திருந்ததால் மத்திய தரைக் கடல் நாடுகளின் கலாசாரங்களை ஒட்டியிருந்தது.

எட்ருஸ்கன் நாகரிக வழியில் வந்த அணிகலன்களில் மான், பறக்கும் சிங்கம், ஸ்பிங்ஸ், போர் வீரர்கள், குதிரை வீரர்கள் போன்ற உருவங்கள் பொறிக்கப்பட்டிருந்தன. கிழக்கத்திய நாடுகளின் பண்பாடுகளையொட்டி பல உருவங்களை ஆபரணங்களில் சித்திரித்தனர்.

எட்ருஸ்கனைப்போலவே கிரேக்க நாகரிகத்தில் கிழக்கத்திய நாடுகளின் (Oriental) பிரதிபலிப்பைக் காண முடிந்தது. கிரேக்க, ரோமாபுரியுடன் இந்திய நாட்டு வாணிகம் தொடர்பு கொண்டிருந்ததை வலியுறுத்துகிறது. மகாவீரன் அலெக்சாண்டர் காலத்தில் ஆசிய வட்டாரங்களில் கிரேக்க நாகரிகம் படர்ந்தது. கி. மு. மூன்றாவது நூற்றாண்டில் பொன் வளையல்களிலும், மோதிரங்களிலும் பாம்பு உருவங்கள் பொறிக்கப்பட்டன. ரோமாபுரியில் அரசவையைச் சார்ந்தவர்கள், செல்வந்தர்கள் மோதிரத்தை சிறப்புச் சின்னமாக அணிந்தனர். மகளிர் வளையல்களும், பொன் பதக்கங்கள், காதணிகளை அணிந்திருந்தனர். முத்துக்களும், இரத்தின கற்களும் பொன்னால் ஆன அணிகளில் கோக்கப்பட்டிருந்தன.

மேற்கூறிய பண்டைய கால நாகரிகங்களுக்குப் பின் இடைக்கால நாகரிகம் (Middle Ages) தோன்றிற்று. கி. பி. நான்காவது நூற்றாண்டிலிருந்து ரோமாபுரி சாம்ராஜ்யம் சரிய ஆரம்பித்தது. கிருத்துவ மதம் பரவியது. கி. பி. 8 வது 9 வது நூற்றாண்டுகளில் உருவ வழிபாடுகளுக்கு எதிர்ப்புத் தோன்ற சமய முறைப்படி பொறிக்கப்படும் உருவங்களுக்குப் பதிலாக மலர், இலைகள் போன்ற சித்திரங்கள் பொறிக்கப்படலாயின. பைஸாண்டியன் கலாசாரம் தோன்றியது. ஈரான் அராபியர்களால் ஆக்கிரமிக்கப்பட்டவுடன் இஸ்லாமிய கலாசாரம் அந்நாடுகளைச் சுற்றிப் பரவியதும் அணிகலன்களின் உருவங்களுக்குப் பதிலாக வேறு பல வகைகளில் சித்திர வேலைப்பாடுகள் தோன்றலாயின. மொராக்கோ, அல்ஜீரியா, ட்யூனிஸியா நாடுகளுக்குப் பரவின.

மேற்கு ஐரோப்பிய நாடுகளில் மோதிரம் பரவலாக அணியப்பட்டது. சமய நம்பிக்கைக்கு ஒட்டிய வகையிலும், அதிர்ஷ்டத்தைத் வரவழைக்கும் ரக்ஷை போலவும், அரசாங்க அதிகாரத்தின் முத்திரையாகவும் விளங்கியது. கி. பி. 15, 16 ஆம் நூற்றாண்டு கலாசார மறுமலர்ச்சி (Renaissance) காலம் தொட்டு தொன்மையும், புதுமையும் அணிகலன்களில் இணைக்கப்பட்டன.





சீன நாட்டு பண்டைய காலத்தில் பிற நாடுகளைப் போன்று இல்லாது அணிகலன்கள் குறைந்த அளவிலேயே புழக்கத்திலிருந்தது. ஷாங், ஹான், டாங் ஆட்சி காலங்களில் பொன் அணிகள் அணியப்பட்டன. ஆப்பிரிக்கா, தென் அமெரிக்கா, வட அமெரிக்க நாடுகளில் பொன், வெள்ளி, வயிரம், இரத்தின கற்கள் இயற்கை வளத்தோடு நிரம்பியிருந்ததால் அணிகலன்களுக்குத் தொன்மையான வரலாறுகள் உண்டு. அணிகலன்களில் பாம்பு உருவம் அதிகமாக பதிக்கப்பட்டிருந்தது.

# வண்ணமயமானது வாழ்க்கை
# கோ-ஆப்டெக்ஸ் அதை
# ஒளி மிகுந்ததாக ஆக்குகிறது

இந்த ஆண்டு தீபாவளிக்கு
கோ-ஆப்டெக்ஸின் புதிய
புதிய ரக வண்ணத் துணி
களைத் தேர்ந்தெடுத்து
வாங்குங்கள்





20-50%
சிறப்புத் தள்ளுபடி



கோ ஆப்டெக்ஸ்
கைத்தறி



Efficient/-DIPR

# புத்தாடை போல் வெண்மை!

**சலவை தோறும் பொலிவு...சலவைக்கு சலவை...பவர் பேக்டு ஸர்ஃப் புத்தாடைபோல் வெண்மை பொலிய வெளுக்கிறது!**

வெளுக்கும் ஒவ்வொரு சட்டைக்கும், ஒவ்வோர் ஆடைக்கும் வெண்மை மிடுக்கு, புதுமைக் கருக்கு-அளிக்குது பவர் பேக்டு ஸர்ஃப். அன்றன்றே வாங்கி அணிவது போல என்றென்றும்...கோடித் துணிபோல் கோலப் புதுமை.

இதுவரை இல்லாத ஏற்றமான சக்தி செறிந்து வருகுது பவர் பேக்டு ஸர்ஃப்... பேராற்றல் மிகுந்தது. பேணிக் காப்பதில் உயர்ந்தது. ஆழ ஊடுருவித் துப்புரவாக்கும் சக்திபடைத்தது! அடைந்திராத அமோகமான நுரைவளம் மிகுந்தது.

விடாத அழுக்கையும் விரட்டியடிக்கும், வெண்மையினை வாழ்விக்கும், காலமெல்லாம் துணிப் புதுமை காக்கும்.

வெண்ணிறமோ, வர்ணமோ...விசேஷத் துணிகள், அன்றாடத் துணிகள் எல்லாமே ஒளிமிளிரும் ஒப்பற்ற வெள்ளைவெளேர்... ஸர்ஃப் சலவையிலே...நித்தமும் நிலைபெறுமே புத்தாடைக் களையுடனே.

சலவைப் பவுடர்கள் பலநூறு இருக்கலாம், ஆனால் உங்கள் குடும்பத் துணிகளுக்கு நம்பிக்கையானது ஸர்ஃப் ஒன்றுதான்... ஸர்ஃப் அன்றி வேறில்லை.




**ஸர்ஃப் சலவை: ஒப்பற்ற வெள்ளைவெளேர், சகல துணிகளுக்கும் புதுமை ஜோர்!**

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

LINTAS SU 317 2517 TM





தேங்காய் பர்பி முறுகி விட்டதா? கவலையின்றி பாலில் ஊற விடுங்கள். மீண்டும் கிளறி இறக்கும் சமயம் நெய்யில் வறுத்தகடலைமாவைச் சிறிது தூவுங்கள். மறுபடி கட்டியாக வரும்.

—சித்ரா.

விட போவன் கொடுப்பதே தேவலை என்று நினைப்பவனைப் போல் அசையாமல் நின்றான்...

புவனா வரைய ஆரம்பித்தாள்... சித்திரங்கள்... எல்லாமே நிழல் சித்திரங்கள்...

"என்ன புவனா வரையறே?" சேஷாமணி அருகில் வந்தான். புவனா நிமிர்ந்து பார்த்தாள். அவள் கண்களில் கண்ணீர். ஏற்கெனவே மூளிக் கழுத்தும், வெற்று நெற்றியும். இதற்கு அலங்காரமாகவா இந்த நீர் முத்துக்கள்?

வரவர புவனாவின் கண்ணீரைக் கண்டாலே சேஷாமணிக்கு எரிச்சல் வர ஆரம்பித்து விட்டது! இவளுக்காக நான் எத்தனை கடன்பட்டேன்! செலவழித்தேன்! அத்தனையும் பாழ்! இவள் நெற்றி போல அத்தனையும் பாழ்! இழந்த பணத்தை இனி எப்படிப் பெற முடியும்? ஆயுஸு பர்யந்தம் இந்தக் குடும்பத்தை எப்படித் தாங்க முடியும்?

இப்போது சேஷாமணி புவனாவிடம் வந்ததே ஒரு முக்கியமான விஷயம் பேசத்தான்! இதை இரைந்து தான் பேச வேண்டும். அப்போதுதான் புவனாவிற்குக் கேட்கும். ஆனால் இரைந்தால்மற்றவர்களுக்கும்கேட்டுவிடுமே! இது மற்றவர்கள் கேட்கக் கூடாத விஷயமாயிற்றே!

வேறு ஒன்றுமில்லை.

கிரனை ஏதாவது ஒரு அனாதை ஆஸ்ரமத்தில் சேர்த்துவிட்டு, புவனாவையும் யார் வீட்டிற்காவது சமையலுக்கு அனுப்பலாமா என்கிற அற்புத யோசனைதான்!

சேஷாமணி தொண்டையைக் கனைத்துக் கொண்டான். அப்போது... வாசலில் ஒரு பெரிய படகுக் கார் வந்து நின்றது.

* * * * *

தன் கணவன் சொல்வதை எல்லாம் படுத்தபடி கேட்டுக் கொண்டிருந்தாள் பத்மா. அவளால் எழுந்தான் இதுவரை முடியாமல் இருந்தது.

இப்போது பேசக் கூட முடியவில்லை. எப்படிப் பேசுவாள்?

சேஷாமணி சொல்லிக் கொண்டே போனான்.

"நான் நினைக்கவே இல்லை பத்மா. நம் மனைத் தேடி இவ்வளவு பெரிய அதிர்ஷ்டம் வரும்னு நான் நினைக்கவே இல்லை. ஒரு ரூபா ரெண்டு ரூபா இல்லை! ஒரு லட்ச ரூபாய்! நினைச்சுப் பார்க்கவே முடியலை. லாட்டரி அடிச்ச மாதிரி என்ன ஒரு அதிர்ஷ்டம்! புவனாவுக்கு செலவழிச்சுட்டேனேன்னு வருத்தப் பட்டேன். இப்போ வருத்தப்பட அவசியமே இல்லை. எல்லாத்துக்குமா சேத்து புவனா ஒண்ணுக்குப் பத்தா தந்துட்டா!"

சேஷாமணி அடுக்கிக் கொண்டே போனான்! பத்மாவால் காது கொடுத்தே கேட்க முடியவில்லை! கடவுளே! என் காதும் செவிடாகிப் போய் விடக் கூடாதா என்று தான் அவளுக்கு வேண்டிக்கொள்ளத்தோன்றியது.

நேற்று பெரிய படகுக்காரில் சேஷாமணியைத் தேடிக் கொண்டு வந்தது...? வடக்கே ஒரு பெரிய ஜமீன்தார்... பிள்ளை வாரிசு இல்லாத அவர் தன் பிரும்மாண்டமான சொத்துக்கு ஒரு நல்ல வாரிசைத் தேடி சுவீகாரம் எடுத்துக் கொள்ள விரும்பினாராம். ஊர் ஊராய் க்ஷேத்திராடனம் செய்து கொண்டே வந்தாராம். வந்த இடத்தில்...? கண்ணாமூச்சி விளையாடிய பிள்ளைகள் தென்பட்டிருக்கிறார்கள்! சுட்டியான கிரண் அவர் கண்களில் பட்டிருக்கிறான்! சேஷாமணியின் குடும்பத்தைப் பற்றி விசாரித்திருக்கிறார்.

ஜமீன்தாருக்குத் தமிழ் தெரியாது. ஹிந்தியும் ஆங்கிலமும்தான் தெரியும். தான் கேட்ட விபரங்கள் திருப்தியாக இருக்கவே நேரே சேஷாமணியைத் தேடிக் கொண்டே வந்து விட்டார்!

பிள்ளையைத் தத்துக் கொடுத்துவிட வேண்டும். பிறகு உறவு கொண்டாடக் கூடாது. என்றாவது விருப்பப்பட்டால் முன் தகவல் தெரிவித்துவிட்டு ஜமீனுக்கு வரலாம். அனுமதி வாங்கிப் பிள்ளையைப் பார்க்கலாம். பிள்ளை ஆரம்பத்தில் கொஞ்சநாள் மறக்க சிரமப்படுவான். பிறகு ஜமீன் வசதிகளும், ஆடம்பரங்களும் அவனை எல்லாவற்றையும் மறக்க அடித்துவிடும்.

இதற்கு விலைதான் லட்ச ரூபாய்!

சேஷாமணி விவரித்த போது பத்மாவிற்கு பகீர் என்றது.

அவர்கள் கேட்டது கிரனைத்தான்! இவள் பிள்ளையை இல்லை!

இருந்தாலும் ஒரு தாயின் உணர்வுகளை அவளால் புரிந்து கொள்ள முடிந்தது!

வாழ்வை இழந்து, வைபவங்களை இழந்து பிறந்த வீட்டில் மகனுடன் 'வாழ' வந்த புவனாவை அண்ணனே அடித்துக் கொன்று விடுவானோ?

அன்று புவனாவின் புக்ககத்து மனிதர்கள் பணத்திற்காக எதுவும் செய்யும் கொலை பாதகர்கள் என்று சேஷாமணி கத்தினானே!

இன்று அதே பணத்திற்காக இவன் பண்ணப்போகிறபாவத்திற்குஎன்னபெயர்?

பத்மா தடுத்தாள். சேஷாமணி கத்த ஆரம்பித்து விட்டான்.

"மூதேவி! உங்கிட்டே வந்து சொன்னேன் பாரு... அவ என் தங்கை... அவளுக்கு நான் செலவழிச்சேன். அதை நான் திரும்ப வாங்கிக்கறேன். உனக்கென்ன? உனக்குக் கடனெழவு அழுதே என் பிராணன் போயிட்டது! ஏதாவது புவனாகிட்டே மூச்சு விட்டே.. கொன்னுடுவேன்... நல்ல வேளை புவனாவுக்குக் காது கேட்காது... நீ இரைஞ்சுதான் கத்தணும்... நான் இங்கேயே இருப்பேன்... ஜாக்கிரதை..."

பத்மா பேச்சிழந்து போனாள். நாளை அவர்கள் வந்துவிடுவார்கள்... அதற்குள்.. அதற்குள் புவனாவிற்குச் செய்தியை தெரியப் படுத்தி அவளை.... அவளை பிள்ளையுடன் எங்காவது ஓடிப் போய்விடச் சொல்ல வேண்டும்... பத்மா யோசித்துக் கொண்டிருந்தாள்.

* * * * *

யாரும் சந்தேகப்படாதபடி திட்டம் தீட்டினான் சேஷாமணி.

கிரணைக் கூப்பிட்டான்.

"என்ன மாமா?" — என்றபடி ஓடோடி வந்தான் கிரண்.

"உனக்கு ஒரு பெரிய அதிர்ஷ்டம் வந்திருக்கு கிரண். இந்த வீடுக்கு உன்னை தெரிஞ்சவாளோட வெளியூர் அனுப்பப் போறேன் தெரியுமா?"

"வெளியூரா? ஹை!" —என்று சந்தோஷப் பட்டவன் ஒரு கணம் தயங்கி...

"அம்மா" — என்று இழுத்தான்.

"மாமிக்கு உடம்பு சரியில்லாம படுத்த படுக்கையா இருக்கா... மாமிக்கு ஹெல்ப் பண்ண அம்மா வேண்டாமா? அம்மாதான் சொன்னா. நமக்குத் தெரிஞ்ச மாமா வடக்கே இருந்து வந்திருக்கா. நீ அவாளோட வடக்கே எல்லாம் சுத்திப் பார்த்துட்டு ஒரு மாசத்துலே திரும்பிடலாம். சந்தோஷமா போயிட்டு வா என்ன?"

கிரண் யோசித்தான்.

"ஏன் மாமா, கூட செல்லப்பாவும் வரட்டுமே... ரெண்டு பேரா போறோம்..."

"என்ன பண்றது. செல்லப்பாவுக்கு அதிர்ஷ்டமில்லே.வடக்கேஎல்லாம்போகணுமானா ரொம்பப் பணம்செலவாகும்.வந்தவா ஒத்தருக்குத்தான் செலவழிப்பாளாம். அம்மா தான் உன்னை வடக்கே அனுப்பணும்னு ஆசைப்படறா. அதனால உன்னை மட்டும் அனுப்பறேன். ஒரே மாசத்துலே வந்துடலாம்."

"ஏன் மாமா... நான் அங்கே இருந்து வரும் போது அம்மாவுக்கு ஏதாவது ப்ரஸெண்ட் வாங்கிண்டு வரலாமா?"

"பேஷா... டெல்லியிலே இருந்து ஷால், கல்கத்தா ரஸகுல்லா, அப்புறமா பம்பாயிலே இருந்து ஸ்வீட்ஸ் எல்லாம் வாங்கிண்டு வா. பாவம் அம்மா... இதை எல்லாம் பார்த்தா சந்தோஷப்படுவா..."



கிரண் மகிழ்ந்து போனான்.

எவ்வளவு பெரிய அதிர்ஷ்டம்!

இந்தச் சின்ன வயதில் என்னால் என் அம்மாவுக்கு இத்தனை வாங்கித் தர முடியுமா?

"சரி மாமா... நான் கிளம்பறேன்... இப்பவே பெட்டியிலே துணிமணி எல்லாம் எடுத்து..." சேஷாமணி இடைமறித்தான்.

அசடு... அசடு... உன்னோட அழுக்குச் சட்டையையும், கிழிசச் சட்டையையும் அவாள்ளாம் பார்த்தா சிரிப்பா... பெயிண்ட் போன தகரப் பெட்டியிலே நீ உன்னோட பழைய துணியெல்லாம் அடைச்சுக்க வேண்டாம். எல்லாம் புத்தம் புதுசா உனக்கு வாங்கித் தருவா... என்ன?"

கிரண் ஆச்சரியத்தில் வாய் பிளந்தான்.

* * * * *

"என்ன அண்ணா சொல்றே" —என்றாள் புவனா.

"ஆமாம்மா... நான் உன் கிட்டே முதல்லே சொல்லலே. எல்லாம் கூடிவந்தப்புறமா சொல்லிக்கலாம்னு நினைச்சுட்டேன். உன்னோட புக்காத்துக்காரா மேலே நான் கேஸ் போட்டிருந்தேன்... கேஸ் ஜெயிச்சாச்சு... நாளைக்கு சில பத்திரங்களை எடுத்துண்டு வக்கீல் எல்லாம் நம்மாத்துக்கு வருவா... உனக்கும் பணம் வரும். நீ ஒண்ணுமே பண்ண வேண்டாம்... அவா காட்டற பேப்பர்லே கையெழுத்துப் போடணும்... அப்புறமா எனக்கு சந்தோஷம்... சம்மதம்னு சிரிச்சுண்டு தலை ஆட்டணும்... அவ்வளவே தான்... நீ இன்னும் கூடப் பணம் எதிர் பார்க்கறியான்னு அவா நினைக்கக்கப்படாது பாரு... அதனாலே எனக்கு இது போதும்... சம்மதம்னு சொல்லிக் கையெழுத்துப் போடணும்... அவ்வளவுதான்..."

புவனா தயங்கினாள்.

"அண்ணா, என்னோட மாமியார் மாமனார் யாராவது வருவாளா?"

அவா எதுக்கும்மா வரப் போறா? கோர்ட்டுக்குப் போயாச்சுன்னா அப்புறம் எல்லாத்துக்குமே வக்கீல்தான் வருவார். எல்லாம் நானே பேசிக்கிறேன்... நீ சிரிச்சபடி கையெழுத்துப் போட்டாப் போதும்..."

புவனா தலையாட்டினாள்.





படுத்தபடி இதை எல்லாம் கேட்டுக் கொண்டிருந்த பத்மாவின் வயிறு எரிந்தது. பாவி! பாவி! எப்படித் திட்டம் திட்டுகிறார்! கடவுளே தன் சொந்த அண்ணனால் ஏமாற்றப்படுகிறோம் என்று தெரியாமலே இந்தப் பைத்தியம் ஏமாறப் போகிறதே! என்ன செய்வது? பத்மா யோசித்தாள்.

கணவன் காவல் நிற்கிறான்.

இரைந்து பேச முடியாது...

புவனாவிடம் எப்படியாவது எழுதிக்காட்டி விட வேண்டியதுதான். எப்படி எழுதுவது? கணவன் சந்தேகிக்காமல் எப்படி எழுதுவது?

பேப்பர் பென்சில் வேண்டுமானால் குழந்தைகளிடம் தான் கேட்க வேண்டும்.

ஆனால் சேஷாமணி புரிந்து கொண்டு விடுவார்!

எப்படி? எப்படி? சேஷாமணிக்குப் புரியாமல் புவனாவிற்கு மட்டும் புரிய வைப்பது எப்படி?

திடீரென்று பத்மாவிற்கு நினைவுக்கு வந்தது.

புவனா படம் வரைவாளே!

அந்தத் தூரிகை... அந்த பேப்பர்... அது.. அது போதும்...

''புவனா... புவனா...''

இரைந்து கூப்பிட்டாள் பத்மா...

''என்ன மன்னி?'' — என்றபடி புவனா சமையல் அறையிலிருந்து வந்தாள்.

''ரொம்ப நாளா எனக்கொரு ஆசை புவனா... நீ ஆத்துலே எல்லாரையும் போஸ் கொடுக்கச் சொல்லி கேட்டுட்டே... ஆனா எங்கிட்டே கேட்கவே இல்லையே...'' புவனா திகைத்தாள்.

''ஆமாம் புவனா... வரவர என் உடம்புக்கே முடியலே... நான் சாகறதுக்குள்ளே என்னையும் படம் வரையேன்... நான் போஸ் கொடுக்கறேன்...'' கஷ்டப்பட்டு இரைந்து தான் பேசினாள் பத்மா...

''என்ன மன்னி வேண்டாததை எல்லாம் பேசிண்டு? கட்டாயம் நான் உங்களை வரையறேன்! அதுக்கென்ன இப்போ அவசரம்?''

''அவசரம்தான்... இப்பவே என்னை வரைய ஆரம்பியேன்...''

புவனா ஆச்சரியப்பட்டாள். சேஷாமணிக்குக் கூட ஆச்சரியமாக இருந்தது.

புவனா தூரிகையையும், போர்டையும் எடுத்துக் கொண்டு வந்தாள்.

சிரித்தபடி, சிரமப்பட்டு எழுந்து உட்கார்ந்தாள் பத்மா.

பத்மாவை போர்ட் மறைத்தது...

பத்மாவைப் பார்த்தபடி புவனா ஸ்கெட்ச் போட ஆரம்பிக்கிறாள்.

நாளைய இனிய பொழுதைப் பற்றிக் கனவு கண்டபடி சேஷாமணி மறுபுறம் அமர்ந்திருக்கிறான்.

புவனா வரைந்து கொண்டிருக்கிறாள்.

* * * * *

இதுதான் சரியான நேரம். சேஷாமணி சாய்ந்தபடியே உறங்க ஆரம்பித்து விட்டான். அவன் குறட்டை ஒலி கேட்கிறது. புவனா தன்னை மறந்து வரைந்தபடி இருக்கிறாள்...

பத்மா... மெல்ல... மெல்ல... எழ முயல்கிறாள்.

கண் எதிரில்... கை அருகில்... வண்ண வண்ண நிறங்களில் தோய்ந்த தூரிகைகள்... பேப்பர்கள்... மெதுவாக... எம்பி... தூரிகையை எடுக்க முயன்றபோது...

பத்மாவின் நெஞ்சிலே ஒரு மின்னல் வலி... முகத்தின் நரம்புகள் இழுத்துக் கொள்கிற மாதிரி ஒரு உணர்வு...

கடவுளே... நான் சாகக் கூடாது... இப்போது சாகக்கூடாது... நான் சொல்ல நினைத்ததை புவனாவிற்கு உணர்த்திவிட்டுப் பிறகு



ரிப்பன் பலவகை உண்டு.

தேவையான பொருட்கள்:

கடலை மாவு — 4 டம்ளர்,
அரிசி மாவு — 1 டம்ளர்,
இஞ்சி — 50 கிராம்,
பச்சைமிளகாய்—பத்து,உப்பு,பெருங்காயம்

பொறிக்க — இஷ்டப்பட்ட எண்ணெய், தேங்காய்ப்பால் — ½ டம்ளர்.

கடலை மாவையும் அரிசி மாவையும் கலக்கவும். இஞ்சி; பச்சை மிளாயை அரைத்து ரஸம் எடுக்கவும். மாவுடன் இதையும் கெட்டித் தேங்காய்ப் பாலையும் விட்டு உப்பு பெருங்காயம் போடவும். கொதிக்கும் எண்ணெய் கொஞ்சம் விடவும். பிசைந்து ரிப்பன் அச்சில் பிழியவும். இஞ்சி மணத்துடன் கரகரப்பாக இருக்கும்.

—சித்ரா.

புதிய திட்டங்கள்

# எல்.ஐ.ஸி.
# வழங்கும் புதிய
# 'இரட்டை காப்பு' திட்டங்கள்.

## 'ஜீவன் சாத்தி'
(உயிர் துணை)

இத்திட்டம் குறிப்பாக வேலைக்குச் செல்லும் தம்பதிகளை மனதில் கொண்டு அக் குடும்பங்களின் முழுமையான ஆயுள்



பாதுகாப்பிற்காக உருவாக்கப்பட்டுள்ளது. புனித திருமண உறவு ஒரு தொடர் பந்தம் என்பதற்கு எடுத்துக்காட்டு இத்திட்டம்.

இத்திட்டத்தின் கீழ் கணவனும் மனைவியும் ஒருங்கிணைந்துதான் பாலிஸி எடுத்துக்கொள்ள முடியும்.

பாலிஸி காலம் நிறைவானதும் அடிப்படை காப்புத் தொகையுடன் போனஸும் அளிக்கப்படும்.

பாலிஸி காலத்தில் தம்பதியில் ஒருவர் காலமாகி விட்டால் அடிப்படை காப்புத் தொகை எஞ்சியவருக்கு அளிக்கப்படுவதுடன் அவர் மேலும் ப்ரீமியம் எதும் கட்ட வேண்டியதில்லை.

பாலிஸி கெடு முடிவடைந்ததும் மீண்டும் ஒரு முறை அடிப்படைக் காப்புத் தொகையும் போனஸும் வழங்கப்படும்.

பாலிஸி கெடு முடியும் முன் தம்பதியில் எஞ்சியவரும் இறந்துவிடின் அவரது வாரிசுக்கு இத்தொகை அளிக்கப்படும்.

## 'ஜீவன் மித்ர'
(உயிர் நண்பன்)

ஒரு குடும்பத்தின் மிகச்சீரிய ஆயுள் பாதுகாப்பிற்காக உருவாக்கப் பட்டிருப்பது இத்திட்டம்.



வழக்கில் இருக்கும் ஆயுள் காப்புத்திட்டங்கள் போல், இதிலும் பாலிஸி கெடு முடிவடைந்ததும் அடிப்படை காப்புத்தொகையும் போனஸும் அளிக்கப்படுகிறது.

எதிர்பாராமல் கெடு காலம் முடிவடையும் முன்பு பாலிஸிதாரர் இறந்துவிடில் அவரது வாரிசுக்கு இரட்டை அடிப்படை காப்புத் தொகையும், அடிப்படை காப்பிற்கு உண்டான போனஸும் வழங்கப்படும்.

சிறிது அதிக ப்ரீமியம் செலுத்துவதால விபத்தில் பாலிஸிதாரர் உயிர் நீத்தால் அதிக காப்புத் தொகையும் பெற முடியும்.

இந்த 'இரட்டை காப்புத் திட்டங்கள்' பற்றி மேலும் அறிய உங்களது முகவரையோ அல்லது அண்மையில் உள்ள எல். ஐ. ஸி. அலுவலகத்தையோ அணுகுங்கள்.



**லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பரேஷன் ஆப் இந்தியா**

daCunha/LIC/166/85/TM



மைசூர் பாகு கொஞ்சம் கவனம் குறைந்தால் 'மாப்பிள்ளை மைசூர்பாகு' (கத்யல் சகிதம் மாப்பிள்ளை வர வேண் டும்.) ஆகிவிடும். கவலையே வேண் டாம். நூறு கிராம் முந்திரியை சிவப்பாக வறுங்கள். அல்லது கட்ட முந்திரி வாங் கவும். நூறு கிராம் திராட்சையை நெய் யில் பொறிக்கவும். கட்டிகளை லேசாக உரலில் தட்டிய பிறகு மிக்ஸியில் முந்திரி யுடன் சேர்த்துப் பொடிக்கவும். திராட் சைப்பழம்போட்டுலட்டுகளாக்கிவிடுங் கள். பிரமாத ருசியோடு இருக்கும்.

—சித்ரா.

தான் சாக வேண்டும்.' தட்டுத் தடுமாறியபடி பத்மா தவழ்ந்தபடி நெஞ்சைப் பிடித்தபடி தூரிகையை எடுக்க முயல்கிறாள்...

வியர்த்து விறுவிறுக்கிறது.

தூரிகையை மெல்ல... மெல்ல எடுக்கி றாள்...

சிவப்பு நிறம் தோய்ந்த தூரிகை... ரத்தத் தில் எழுதின மாதிரி....

புவனா... உன் பிள்ளையை விற்க... ஏற் பாடு நடக்கிறது... நீயும் உன் பிள்ளையும் உடனே இங்கிருந்து ஓடி விடுங்கள்...

இது போதுமா? இது போதும்! புவனா புத்திசாலி, புரிந்து கொள்வாள்... எழுதி முடித்த பத்மா... கைகள் நடுங்க மெல்ல சாய்ந்து உட்கார்ந்து ஆசுவாசப்படுத்திக் கொள்கிறாள்... தான் வரைந்ததைச் சரி பார்க்கத் திரும்பிய புவனா பத்மா சாய்ந் திருந்த நிலை கண்டு திடுக்கிடுகிறாள்...

"மன்னி!" என்று கதறியபடி பத்மா வின் அருகில் ஓடி வந்த அதேநேரம்.... சிவப்பு வண்ணம் குழைத்து வைத்த கிண் ணம்... கவிழ்ந்து.... தன் உயிரைக் கொடுத்து பத்மா எழுதிய அந்தச் செய்தியில் இரத்த ஆரத்தி கொட்டியது.

"ஐயய்யோ... அண்ணா... இங்கே வந்து பாரேன்... மன்னியைப் பாரேன்..." புவனா வின் அலறல் தீனமாய் ஒலிக்கிறது.

பத்மா கக்கிய ரத்தம் அதோ... அதோ... அந்தக் காகிதத்தில் அர்த்தமில்லாமல் சிவப் புக் கறையாய்த் தாறுமாறாய்ச் சிதறிக் கிடக் கிறது!

**சே**ஷாமணி இப்படித் திடீர் பணக்கார னாகிப் பதினைந்து வருடங்கள் ஆகி இருக் குமா? இருக்கும்... இருக்கும்...

அன்று பத்மா திடீரென்று ஹார்ட் அட்டாக்கில் இறந்து போனதும், அனைவரும் தட்டுத் தடுமாறித் திகைத்ததும், அந்த நிலை யில் அத்தனை பொறுப்புக்களையும் புவனா இழுத்துப் போட்டுக் கொண்டு கண்ணீர் வடிய 'காரியங்கள்' பண்ணியதும், மறு நாள் தத்து எடுத்துக் கொள்ள வந்த ஜமீன்தார் பரிவாரங்களைப் பத்து நாட்கள் கழித்து வரச் சொன்னதும்...

அப்புறம்... அப்புறம்... ஒரு நல்ல நாளில் அவர்கள் வந்ததும்...

கிரணையும், செல்லப்பாவையும் விளை யாட வெளியே அனுப்பிவிட்டு...

காது கேக்காத புவனாவின் எதிரிலேயே அவள் பிள்ளைக்கு 'விலை' பேசியதும், புவனா சிரித்தபடி தஸ்தாவேஜுகளில் அவர்கள் காட்டியபடி அந்தந்த இடங்களில் கையெழுத் துப் போட்டதும்,

'எல்லாம் நன்றாக சொல்லி வைத்தாற் போல் நடந்து முடிந்து விட்டன. அம்மா விடம் சொல்லிக் கொண்டு தான் ஊருக்குக் கிளம்ப வேண்டும் என்று பிடிவாதம் பிடித்த கிரணை ஏமாற்றி ஹோட்டலில் தங்கி இருந்த ஜமீன்தாரிடம் ஒப்படைத்துப் படகுக் காரில் ஜமீன்தாருடன் அவன் கிளம்புவதைமகிழ்ச்சி யுடன் பார்த்து ரசித்து 'டாடா' சொல்லி மகிழ்ச்சியுடன் திரும்பியபோது—

"அண்ணா... கிரணை ரொம்ப நாழியா காணமே... நீ பார்த்தியோ?" — என்று பரி தவித்தபடி புவனா வந்து கேட்ட போது...

அசடு வழிந்து தடுமாறி...

"இங்கேதான்மா இருப்பான்... நான் பாத் துட்டு வரேன்"

—என்று பொய்யாகக் கிளம்பி வெகு நேரம் கழித்து பொய்யாக வீடு திரும்பி,

கிரணைக் காணவில்லை என்று பொய்யாக அழுது...

புவனா புலம்ப ஆரம்பித்து விட்டாள்...

"மடி நிறையப் பணம் வந்ததுன்னு சந் தோஷப்பட்டேனே! என் மடியே இடிஞ்சு போச்சேண்ணா! எந்த ஜென்மத்துலே நான் யாருக்குப் பாவம் செஞ்சேன்....? யாருக்குத் துரோகம் பண்ணினேன்... தெய்வமே... என் புள்ளையை எங்கிட்டே இருந்து பிரிச்சுட் டியே... எனக்கு யாருமே விரோதி இல்லையே அண்ணா... என் பிள்ளையை ஏன் கடத்திண்டு போகணும்? ஒருவேளை சொத்துக்கு ஆசைப் பட்டா? வேண்டாம்... இந்தப் பணமே வேண் டாம்... போய் குளத்துலே தூக்கிப் போட் டுட்டு வந்துடு... அண்ணா... தெய்வமே...

எனக்குக் காது கேக்காட்டா கூட நொடிக்கு நூறு தரம் அம்மா அம்மான்னு ஆசையா கூப்பிடுவானே குழந்தை... இப்போ எங்கே இருந்து ஐயோ... ஐயோன்னு கத்தறானோ? எந்தப் பாவியாவது என் பிள் ளையைக் கையைக் காலை ஒடிச்சு... கண்ணைக் குத்திப் பிச்சை எடுக்க விட்டுடுவானோ?

புவனு மூர்ச்சையானாள்...

ஒரு வாரம் அன்ன ஆகாரமின்றி... சுய நினைவின்றிக் கிடந்தாள்...

என் கிரண் வந்துவிட்டானா?

என் கிரணை யாராவது பார்த்தேளா?

— என்று முழிக்கிற போதெல்லாம் கேட்டுக் கொண்டே இருந்தாள்...

சேஷாமணி பெரிய மனிதன் ஆகிவிட்டான்.

செல்லப்பா பள்ளிப் படிப்பை முடிந்து இன்ஜினியரிங் படிக்கிறான்.

இங்கு தெற்கில் இடம் கிடைக்காததால் ராஜஸ்தானில் பிலானி காலேஜில் படித்துக் கொண்டிருக்கிறான்.

* * *

"ஹாய்" — என்றாள் பூர்ணிமா.

திடுக்கிட்டுத் திரும்பினான் செல்லப்பா.

ஓ! பூர்ணிமா!

பெயருக்கு ஏற்ற மாதிரி பௌர்ணமி தான் அவள்.

பெரிய ஜமீன் பரம்பரையிலிருந்து வந்தவள்.

இவன் காதலி!



'சோன்பப்டி' செய்வதாக இருந்தால் காலை, மாலையே சிறந்தது. பிற்பகல் வேளையில் செய்யாதீர்கள். நெய் ஒன்று சேராமல் வெளியேறிவிடும்.

—சித்ரா.

"ஓ. கே... இந்த லீவுக்கு ஊருக்குப் போகப் போறீங்க... வரும்போது உங்கப்பாவோட பர்மிஷனோட வருவீங்களா?"

"டோண்ட் ஒர்ரி... இன்னிக்கே அப்பாவுக்கு விவரமா லெட்டர் போட்டுடறேன்... இதை எல்லாம் நேர்லே பேசறது கஷ்டம். முதல்லே மடெயிலா லெட்டர் போட்டுட்டு அப்புறமா நேரிலே பர்மிஷன் மட்டும் வாங்கிடலாம்..."

அப்போது அந்த வாலிபன் வந்தான்...

இவர்களைப் பார்த்து...

"ஹாய்..." — என்று விஷ் பண்ணிவிட்டு ஏதோ சீரியஸாகச் சிந்தித்தபடி போய்விட்டான்.

"இவர் அருண் இல்லே? எங்க ஜமீனை விட இவர் ஜமீன் ரொம்ப ரொம்பப் பெரிசு..." பூர்ணிமா சொன்னாள்...

"உம்... பாவம்... இவனைப் பார்க்கும் போதெல்லாம் எனக்கு என்னோட கஸினோட நினைவு வரும்... அவன் பெரியவனானா அநேகமா இப்படித்தான் இருப்பான்... பாவம் சின்ன வயசிலே காணாமப் போயிட்டான்! இப்போ எங்க இருக்கானோ? என்ன கஷ்டப் படறானோ?" — ஒருகணம் பரிதாபப்பட்ட செல்லப்பா மேலே பேசினான்.

"எப்பப் பார்த்தாலும் அருணோட முகத்துலே ஒரு சோகம்! ஏன் தெரியுமா?" செல்லப்பா கேட்டான்.

"ஏனாம்?"

"அருணே சொல்லி இருக்கான் எங்கிட்டே... அவனோட சொந்த அம்மாவே அவனைப் பணத்துக்காகத் தத்துத் தந்துட்டாளாம்... அவனை ஏமாத்தி வெளியூர் பார்க்க அனுப்பற மாதிரி அனுப்பி அவனை விலைக்கு வித்துட்டாளாம். அருண் அடிக்கடி எங்கிட்டே சொல்லுவான்.. ஒரு நாள், ஒரு நாளாவது அந்த அம்மாவைப் பார்த்து நான் ஒரு கேள்வி கேக்கணும்னு சொல்லுவான்.

பசு கூட தன்னோட கன்றுக்குப் பால் கொடுக்கிறது. பறவைகள் கூட இறக்கை முளைக்காத குஞ்சுகளுக்கு இரை தேடிக் கொண்டு வந்து ஊட்டுகிறது. ஆனா... விபரம் தெரியாத சின்ன வயசிலே தாய்க்குரிய ஒரு கடமையையும் செய்யாம என்னைப் பணத்துக்கு ஆசைப்பட்டு விலைக்கு வித்துட்டியேம்மா... ஏன்? இப்படி ஆசை தீர கேக்கணும்னு சொல்லிட்டே இருப்பான்! புவர் சேப்!" செல்லப்பா அவனுக்காக வருத்தப் பட்ட போது பூர்ணிமாவும் சேர்ந்து வருத்தப்பட்டாள்.

* * * * *

சேஷாமணி ஊரிலிருந்துவந்தசெல்லப்பாவின் கடிதத்தை பத்தாவது தடவையாகப் படித்துக் கொண்டிருந்தான்.

நிறைய விஷயம் பேசணுமாமே? என்னவாக இருக்கும்?

ஒருவேளை நான் கிரணை விலைபேசி அவன் அம்மாவை ஏமாற்றியதை யாராவது செல்லப்பாவிற்குச் சொல்லி இருப்பார்களோ?

சே... சே... அப்படி எல்லாம் இருக்காது!

இவன் எங்கோ படிக்கிறான்!

கிரண் எங்கோ இருப்பான்!

வேறு என்ன விஷயமாக இருக்கும்?

"தடால்..."

உள்ளே ஏதோ விழும் சப்தம்!

இவன் மனக்கோட்டைகளா? இல்லே... புவனுதான் எதையாவது உருட்டிக் கொண்டிருப்பாள்...

சேஷாமணி எழுந்து உள்ளே போனான்.

சார்த்தி இருந்த அந்த அறையின் கதவைத் திறந்தான்.

வெளிச்சத்திலிருந்து இருட்டுக்கு வந்ததில் முதலில் கண்ணுக்கு ஒன்றுமே தெரியவில்லை... இதோ... இதோ... புவனு படுத்

# 30,00,000

அன்பர்கள் அன்றாடம்
நரசுஸ் காபியை அருந்துவதே
அதன் தரத்திற்கு சான்று.

ஜீவனுள்ள ஒரே காபி!

**நரசுஸ்**

தெர்மலோ முறை காபி!



**நரசுஸ்**
**காபி கம்பெனி**
சேலம் 636 007.
கிளைகள்: தமிழ்நாடெங்கும்.

ADWAVE NCC 2956



# மிகப் புதியதான காஸ்கட் ரிலீஸ் ஸிஸ்டம்

# MAJESTIC




## இந்தியாவின் 100% பாதுகாப்பான பிரஷர் குக்கரை உருவாக்குகிறது

உங்கள் நேரம், பணம், எரிபொருள் மூன்றும் தொடர்ந்து மிச்சப்படுகின்றன.

உணவின் மணமும், ருசியும் மாறுமலும் வைட்டமின்கள் சக்தி குறையாமலும் பாது காக்கப்படுகிறது.

3 லிட்டர் முதல் 12.5 லிட்டர் வரை உள்ள மெஜெஸ்டிக் குக்கர்களும், அவை சம்பந்தப்பட்ட இதர பாத்திரங்களும் அலுமினியம் மற்றும் எவர் சில்வரில் கிடைக்கின்றன.

## எங்கள் மற்றைய பிரபலமான விசில் செய்யும் சமையலறைத் துணைகள்.

IS:1660



13000











ரைஸ் குக்கர், மில்க் பாய்லர் இட்லி குக்கர் பிரஷர் பான்

DISTRIBUTORS FOR TAMILNADU **Naik** BROTHERS

56, Purushwalkam High Road. 1st floor, MADRAS-7 Phone: 662965 661034



திருக்கும் கட்டில்... அதோ... அதோ... எலும் பும் தோலுமாக ஒரு உருவம் கட்டிலில் உட்கார்ந்தபடி... உட்கார்ந்தபடி ஏதோ வரைந்து கொண்டிருக்கிறது! இவள்தான் புவனாவா? நாம் பதினைந்து வருடங்களுக்கு முன் பார்த்த அதேபுவனாவா? நான்தலைசிறந்த ஆர்ட்டிஸ்ட்டாகப் போகிறேன் என்று கனவு கண்ட அதே புவனாவா? நான் மென்மையான தாய் — என்று பெருமைப்பட்ட அதே புவனாவா?

அதோ... அதோ... புவனா வரைந்து கொண்டே இருக்கிறாள்! அவளைச் சுற்றி...? அவள் வரைந்து முடித்த படங்கள்! எல்லாமே கிரணின் வெவ்வேறு தோற்றங்கள்!

சத்தம் கேட்ட புவனா திரும்பிப் பார்க்கிறாள்!

கண்கள் சோகை பிடித்தாற்போல், பஞ்சு படிந்த பழம் சிற்பத்தைப் போல்... சோகை குன்றி இருக்கின்றன...

''அண்ணா... பாத்தியா? இது புதுப்படம் அண்ணா... கிரண் இப்போ... இப்படித்தான் ஆமாம் அச்சாக இப்படித்தான் இருப்பான்... என் கிரண் வந்துட்டானா அண்ணா? என் கிரணைப் பார்த்தியா? வந்துடுவான்... சீக்கிரம் வருவான்... அவனுக்கு மட்டும் அம்மாவைப் பாக்கணும்னு ஆசை இருக்காதா என்ன? கட்டாயம் வந்துடுவான்... அந்தப் படம் போன வருஷம் வரைஞ்சது... போன வருஷத்துக்கு இந்த வருஷம் ஜாடை மாறி இருக்கும் இல்லையா ?''

சேஷாமணிக்குக் கூட அடி வயிற்றைச் சங்கடம் பிடுங்கித் தின்னுகிறது.

ஜமீந்தாரிடம் கிரணை அனுப்பிய போது இவளை யும் சேர்த்து அனுப்பி இருக்க வேண்டும்! ஆயாவாகவாவது இவள் கிரணைப் பார்த்துக் கொண்டு வாழ்ந்திருப்பாள்! இப்படி நடைப் பிணமாக, நிழல் சித்திரங்களை வரைந்து தள்ளிக்கொண்டு ஒரு நிழலாக வாழ்ந்திருக்க மாட்டாள்!

சேஷாமணிக்கு வியர்த்துவிட்டது! மூச்சுத் திணறியது. 'சட்' டென்று அறைக்கு வெளியே வந்துவிட்டான்! அதேசமயம்! வாசலில் ஒரு கார் வந்து நிற்கிறது. கார்! பெரிய கார்! படகுக் கார்! பதினைந்து வருடங்களுக்கு முன் வந்து நின்ற மாதிரி அதே கார்! சேஷாமணி பரபரப்புடன் வாசலுக்கு விரைகிறான்.

காரிலிருந்து அருண் இறங்குகிறான். சேஷாமணி திகைத்துப் போகிறான்! இது கிரண் தான்! சத்தியமாக இது கிரண்தான்!

சற்றுமுன் புவனா வரைந்து முடித்திருந்த அதே ஓவியம்! அதே ஜாடை! அந்தப் படமே இறங்கி நடந்து வருவது போலிருந்தது! முதன் முறையாக சேஷாமணியின் மனம் மெல்லக் குலுங்கி அழுதது.

''யெஸ்... இந்த இடம்தான்'' — என்றான் ஜமீன்தாரின் மெய்க்காப்பாளன்... பயபக்தியாக வாயைக் கையால் பொத்திக் கொண்டு இளைய ஜமீன்தாரிடம் அவன் பணிவாகப் பேசினான் ஹிந்தியில்.

''நான் பெரிய ஜமீன்தாரோட கூட வந்திருக்கேன்... இந்த வீடுதான்... இந்த இடம் தான்...''

அருண் என்று பெயர் மாற்றம் பெற்ற அந்த இளைய ஜமீன்தார், நமது பழைய கிரண், அந்த இடத்தை உற்றுப் பார்க்கிறான்!

எல்லாமே கனவு மாதிரி... ரொம்ப ரொம்ப மெல்லிய இழைகள் மாதிரி...

எங்கோ மனம் அலைபாய்கிறது... இதோ ஒரு சிறுவன்...

அழுது கொண்டிருக்கிற ஒரு சிறுவன்... 'அம்மா எங்கே?' — என்று கேட்கும் ஒரு சிறுவன்,

அவனுக்கு அடிக்கடி மயக்க மருந்தும் பழைய நினைவுகளை மறக்கடிக்கும் ஊசிகளும் போடப்படுகின்றன... எல்லாமே... எல்லாமே மெல்ல மெல்ல மறைகிறது... நான் யார்? எங்கே பிறந்தேன்? எப்படி வளர்ந்தேன்? என் கூட யார் யார் இருந்தார்கள்? எல்லாமே எல்லாமே மெல்ல மெல்ல மறந்து போக... நான் ஜமீன் வாரிசு! நான் அருண்! நான் இளைய ஜமீன்தார்! என்கிற பாடங்கள் மனத்துள் மெல்ல மெல்ல உருவேற்றப்படுகின்றன.

பிறகு... பிறகு... அருண் எல்லாவற்றையும் மறந்தே போகிறான்! போன வருடம் வரை! போன வருடம்...? பெரிய ஜமீன்தார் மரணத்தின் வாயிலில் சொன்ன சில உண்மைகள்!

உன் தாய் பணத்துக்கு ஆசைப்பட்டு உன்னை விலை பேசினாள். நீ பிறவி ஜமீன்தார் அல்ல! விலைக்கு வாங்கப்பட்டவன்! கிரணின் மனம் கொதித்தது! மக்கிப் போன பழைய நினைவுகள் மெல்லமெல்ல எட்டிப்பார்த்தன. அவனுக்குள் யார் யாரோ கண்ணாமூச்சி

பிள்ளையார் கொழுக்கட்டை செய்த பிறகு மேல் மாவு மீந்து போனால் கவலையே வேண்டாம். ஒரு வாணலியில் சிறிது எண்ணெய் விட்டு, கடுகு, உளுத்தம்பருப்பு, பச்சை மிளகாய், பெருங்காயம், இஞ்சி இவற்றைப் போட்டு வறுத்து, அத்துடன் தேவையான அளவு தேங்காயைத் துருவிப் போட்டு அதையும் வறுத்துக் கொள்ள வேண்டும். இத்துடன் மீந்து போன மேல் மாவை தேவையான அளவு உப்பு சேர்த்து, நன்றாய்ப் பிசைந்து இட்லித் தட்டில் உருட்டி வைத்து எடுத்தால், மிகவும் ருசியாக இருக்கும்.

—சீதா ஸ்ரீதர்.



விளையாடினார்கள்... ஒரு முறை... ஒரே ஒரு முறை நான் என் ஊருக்கு வர வேண்டும்... என் தாயைப் பார்த்துக் கேள்விகள் கேட்க வேண்டும்... வேண்டும்...

பெரிய ஜமீன்தார் இறந்ததும், இதோ... இதோ... லீவ் விட்டதும் விடாததுமாக உதவிக்கு ஜமீன் ஆட்களை அழைத்துக் கொண்டு கிரண் வந்துவிட்டான். அந்த வீட்டின் ஒவ்வொரு இடமாக உற்றுப் பார்த்தான் கிரண்... மறக்கடிக்கப்பட்ட நினைவுகள் தென்றலாய் தவழ்ந்து மெல்ல மெல்ல வந்தன... பாவிகள்... தாய் பாஷை தமிழைக் கூட மறக்கடித்து விட்டார்களே! மா... மா... அம்மா...

இரைந்து கூவ வேண்டும் போலிருந்தது கிரணுக்கு. மனத்துள் யார் யாரோ கண்ணாமூச்சி விளையாடினார்கள்!

"கண்ணாமூச்சி ரேரே...
காட்டு மூச்சி... ரேரே..."

கிரண்... அங்கிருந்த தூண் ஒன்றைக் கட்டிக் கொண்டு திடீரென்று இரைந்து அழ ஆரம்பிக்கிறான்! இந்தத் தூணுக்குப் பின்னால் தான் அவன் அன்று ஒளிந்தான்... அதன் பின்...?

"அம்... மா... மா... மா..."

சேஷாமணி நிலைகுலைந்து போகிறான்.

கிரண் ஹிந்தியிலும் ஆங்கிலத்திலுமாகக் கேட்கிறான்...

என் அம்மா எங்கே? ஏன் என்னை விலைக்குக் கொடுத்தா? என் ஒரு வயத்துக்கு அவளால சோறு போட முடியலியா? பிச்சைக்காரன் கூடப் பிச்சையெடுத்து தன் பெண்டாட்டி குழந்தைகளைக் காப்பாத்தறானே... எனக்கு வசதிகள் தரதா நினைத்துக் கொண்டு தான் வசதியில் வாழ இந்தத் திட்டமா? ஏன்... ஏன்... ஏன்...?

ஆயிரமாயிரம் கேள்விகள்...

"கிரண்..." — என்று அழைக்க ஆரம்பித்த சேஷாமணி, ஜமீன் ஆட்கள் முறைப்பதைப் பார்த்துத் தன்னை சுதாரித்துக் கொள்கிறான்! ஓ! இவன் கிரண் இல்லை! பெரிய ஜமீன்தார்! இளைய ஜமீன்தார்! இவனுடைய தங்கை பிள்ளை இல்லை! தாங்க முடியாத உயரத்துக்குப் போய்விட்ட உசத்திப் பிள்ளை!

கிரணின் கைகளைப் பிடித்துக்கொண்டு கண்களில் ஒற்றிக் கொண்டான் சேஷாமணி... "என்னை மன்னிச்சுடுப்பா... உன் அம்மா உத்தமி... அவளை பழி சொல்லாதே... பாபம் பண்ணினதெல்லாம் நான்தான்... அவளுக்கே தெரியாம உன்னை விலை பேசினேன்... ஜமீனுக்கு வித்தேன்... நீ என்னிக்காவது வருவேன்னு உசிரை கண்ணிலே வைச்சுண்டு காத்துண்டு இருக்கா. உள்ளே வா... உள்ளே வந்து பார்..."

சேஷாமணி தமிழில் சுத்த, அதை ஜமீன் ஆள் ஒருவன் ஹிந்தியில் மொழி பெயர்க்க... கிரண் திடுக்கிட்டான்!

"அம்மா... அம்மா... எங்கே?"

"இதோ..."

சேஷாமணி வழி காட்ட, கிரண் உள்ளே பாய்ந்தான்...

"அம்மா."

துணியாகப் படுக்கையிலே சுருண்டு கடந்தவளைத் தன் மடி மீது கிடத்திக் கொண்டான் கிரண்... அந்த அறை முழுவதும் கிரண்... ஒன்றல்ல... இரண்டல்ல ஓராயிரம் கிரண்... ஒவ்வொரு படத்திலும் பற்பல கிரண்!

"கிரண்... என் குழந்தே... வந்துட்டியா? வந்துட்டியாப்பா? அம்மாவைப் பார்க்க ஓடி வந்துட்டியா? கிரண் பார்த்தியா? உன்னை மாதிரி... உன்னை மாதிரியே எத்தனை... வரைந்திருக்கிறேன்..."

மகனைக் கட்டிக் கொண்டு தழுவிக் கொண்டு முத்தமிட்டுக் கொண்டு பைத்தியக்காரியாய், பிச்சியாய் புவனா கண்ணீருடன் சிரிப்பும் அழுகையுமாய்ப் பேசுகிறாள்...

கிரண் பார்க்கிறான்!

அவனை மாதிரியே படம்! ஓவியத்தில் கிரண் உயிர் பெற்றிருக்கிறான்! இந்தக் கிரணின் அதே ஜாடை! எப்படி! தாய்மையின் கனவுகளுக்கும், கற்பனைகளுக்கும் இத்தனை வலுவா? ஒன்றையே நினைத்து நினைத்து அதுவாகவே மாறிவிடும் தபஸின் வலிமையா?

தாபத்தின் பரிசா?

புவனா நிஜமாகவே க்ரேட் ஆர்ட்டிஸ்ட் தான்!

அம்மா... என் அம்மா... கிரண் அம்மாவைக் கட்டிக் கொண்டு அழுகிறான்.

"அம்மா... இப்பவே நான் உன்னை கூட்டிண்டு போகப் போறேன். என்னோட ஜமீனுக்கு வந்துடும்மா... மாமா... அம்மாவைக் கூட்டிண்டு போக ஏதாவது ஸ்பெஷல் பீஸ் வைச்சிருக்கீங்களா?"

கிரண் கேட்டபோது அது மொழி பெயர்க்கப்பட்ட போது நிஜமாகவே சேஷாமணி அழுதுவிட்டான்.



முதல்நாள் சாதம் மீந்துபோனால், அதைத் தண்ணீர் விடாமல் பிசைந்து கொள்ளவும். பிசைந்த சாதத்தின் அளவிற்கு, அதே அளவு கோதுமை மாவு, போட்ட அளவில் பாதியளவு கடலை மாவு சேர்த்து அத்துடன் தேவையான அளவு உப்பு, சிட்டிகை மஞ்சள் பொடி, தேவையான அளவு காரப்பொடி, தனியா சீரகம் இவற்றை வறுத்துச் செய்த பொடி இவை அனைத்தையும் சேர்த்து, துளி எண்ணெய் விட்டுப் பிசைந்து கொள்ள வேண்டும்.

இந்த மாவை, வாணலியில் எண்ணெய் வைத்து உருட்டிப் போட்டு வறுத்தும் எடுக்கலாம் அல்லது தோசைக் கல்லில் சிறு சிறு வடைகளாகத் தட்டி வைத்துச் சுற்றிலும் எண்ணெய் விட்டு நன்றாக வெந்தவுடன் திருப்பிவிட்டு, கட் லெட் போலவும் எடுக்கலாம்.

—சீதா ஸ்ரீதர்.



"தண்ணீர்... தண்ணீர்..."

"பானீ லாவோ" — கிரண் கத்தினன்.

விக்கல் எடுத்து, புரை ஏறி... இருமல் அதிகமாய்... கிரண் அம்மாவின் வாயில் தண்ணீர் விட்டு ஆசுவாஸப்படுத்தினான்.

அவன் தோள்களில் நிம்மதியாகச் சாய்ந்து ஓய்வெடுத்துக் கொண்டாள் புவனா, நிரந்தரமாக!

"அம்மா... மா... மா..."

கிரண் அலறிய போது அந்த அறையின் அத்தனை கிரண்களும் சேர்ந்து அலறிய மாதிரி ஒரு எதிரொலி!

* * * * *

சேஷாமணி டவுனுக்குக் கிளம்பிக்கொண்டிருந்தான். இன்றுதான் செல்லப்பா ஊரிலிருந்து வருகிறான்.

இந்தப் பத்துப் பதினைந்து நாட்களில் என்னவெல்லாம் நடந்து முடிந்துவிட்டன! செல்லப்பாவிடம் நிறைய பேச வேண்டும்.

புவனா உயிர் நீத்த இடத்தில் விளக்கு இன்னும் அணையாமல் எரிந்து கொண்டிருக்கிறது. எல்லாமே ஆடி ஓய்ந்து போன மாதிரி ஒரு அலுப்பு...

அம்மாவின் நினைவாக அத்தனை ஓவியங்களையும் கிரண் அள்ளிக் கொண்டு போய் விட்டான்! அவன் படங்களை மட்டுமா அள்ளிக் கொண்டு சென்றான்! இந்தப் பயங்களையும் அள்ளிக் கொண்டு போயிருக்கக் கூடாதோ! பயம்! என்ன பயம்! எதற்கு பயம்? முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும் என்ற பயமா? தன் பிள்ளையைத் தத்துக் கொடுத்திருந்தால் அவனும் கிரண் மாதிரி படகுக் காரில் வந்து இறங்கி இருப்பானே என்கிற சோகமா?

எது? எது?

ஏதேதோ யோசித்தபடி ஸ்டேஷனில் ரயிலின் வருகைக்காக சேஷாமணி காத்திருந்தான்... அதோ... அதோ ரயில் வந்து விட்டது...

செல்லப்பா பர்ஸ்ட் கிளாஸில்தான் வழக்கமாக வருவான்...

சேஷாமணி பரபரப்புடன் கம்பார்ட்மெண்ட்டைத் தேடினான்.

இந்த கம்பார்ட்மெண்ட்தான். செல்லப்பா என்று வெளியே ரிஸர்வேஷன் சார்ட்டில் பெயர் போட்டிருக்கிறதே! சேஷாமணி உள்ளே நுழைந்தான். அங்கே...?

நாலு பேர் உட்காரக் கூடிய அறையில் இரண்டே பேர்!

அந்த இரண்டு பிரயாணிகளும் ஒருவர் மற்றவரைப் பார்த்துக் கொண்டனர்.

"யெஸ்... செல்லப்பான்னு ஒத்தர் எங்க கூட வந்தார். கூட இன்னொருத்தரும் வந்தார். ரெண்டு பேரும் பேசிக்கிட்டே வந்தாங்க... பிரண்ட்ஸ்ன்னு நினைச்சோம். நேத்து காலை வரை ரெண்டு பேரும் இருந்தாங்க. ஏதோ ஒரு ஸ்டேஷன்லே ப்ரேக்பாஸ்டுக்காக வண்டி நின்னப்போ ரெண்டு பேரும் எறங்கினாங்க... ஆனா அப்பறமா ரெண்டு பேரும் திரும்பவே இல்லே! ஒரு வேளை அந்த ஸ்டேஷனிலே இறங்கிட்டாங்களோன்னு நினைச்சோம்... பட் லக்கேஜ் எல்லாம் இருக்கே... ஸோ போலீஸ் கம்ப்ளெயிண்ட் கொடுக்கணும்னு நாங்களே நினைச்சோம்..."

சேஷாமணி திகைத்தான்...

செல்லப்பா இறங்கிவிட்டானா? இருக்காது... இரண்டு நாள் பயணித்து இடையில் இறங்கி விடுவானா?

பரபரப்புடன் சேஷாமணி செல்லப்பாவின் லக்கேஜை செக் பண்ணினான். இது.. இந்தப்பெட்டி செல்லப்பாவின் பெட்டிதான். இந்தப் பெட்டியை சேஷாமணியால் மறக்கவே முடியாது! இந்தப் பெட்டியில் தான் லட்ச ரூபாயை வைத்துக் கொடுத்து பெரிய ஜமீன்தார் கிரணை விலைக்கு வாங்கினார்!

ஆமாம்... அதே பெட்டிதான்!

"செல்லப்பா..."

அந்த ஸ்டேஷனே எதிரொலிக்க சேஷாமணி இரைந்து கத்தினான்.

* * * * *

சில நாட்களுக்குப் பிறகு...

சேஷாமணியின் வீட்டு வாசலில்...

"ஸார் ஸார் என் செல்லப்பாவைப் பார்த்தேளா?"

"என் செல்லப்பா வந்துட்டானா?"

"ஸார்... ரயில்லே நல்லா தேடிப் பாருங்கோ ஸார்... செல்லப்பா அங்கே தான் இருப்பான்!"

இப்படியெல்லாம் தாறுமாறாகப் பேசிக் கொண்டிருப்பது சேஷாமணியேதான்! கடைசி காலத்திலாவது புவனாவின் வாயில் தண்ணீர் விட கிரண் வந்து சேர்ந்தான்... சேஷாமணிக்கு அப்படி செல்லப்பா திரும்பவும் கிடைப்பானா?

* * * *

(முற்றும்)



ஒரு வருட பலனுக்கு நெல்லை நாடுங்கள்!
பத்து வருட பலனுக்கு மரங்களை நடுங்கள்.
நூறாண்டு பலனுக்கு கல்வியைக் கொடுங்கள்.
— சீனப்பழமொழி.

தொகுப்பு: எஸ். விஜயா சீனிவாசன்.

# நல்லன எல்லாம் தரும்

நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் என்னும் பஞ்ச பூதங்களின் முறையே வாசனை, சுவை, ரூபம், ஸ்பர்சம், சப்தம் என்ற தன் மாத்ரை வடிவாய் விளங்கும் சக்தி இரண்டறக் கலந்து அந்தர்யாமியாக இருக்கிறாள். அவளுடைய திருவடிகளில் சரணடையும் பாக்கியம் பெற்ற தவசீலர்கள் அடைய முடியாத செல்வம் ஒன்றுமேயில்லை. உண்மையான தெய்வ பக்தி மட்டும் ஒருவனிடம் இருக்குமானால் அவன் எல்லா நலன்களையும் பெற்று வாழ முடியும்.

நாராயண, ராம என்னும் திருநாமங்களை ஓதுவதால் அடையும் நலன்களைப் போல, மற்ற தெய்வங்களின் புனித நாமங்களையும் உறுதியோடு உச்சரிப்பவர் இக, பர சுகங்களைப் பெற்று வாழ்வர். புழு முதல் பிரம்மா ஈறாக உள்ள எல்லா உயிர்களையும் படைக்கும் ஆற்றலுடையவள் தேவி. "ஆப்ரம்ஹ — கீட — ஜநநீ" என்ற திருநாமம் லலிதா ஸஹஸ்ர நாமத்தில் இக்கருத்தைக் கூறும்.

மகிமை பொருந்திய தேவியின் கண்கள் அழகும் கருணையும் பொருந்தியவை. தன் பக்தனுக்கு இம்மையிலும் மறுமையிலும் மேன்மையனைத்தையும் அருளும் தன்மையான பார்வையுடைய காமாட்சியாக அவள் விளங்குகிறாள். பக்தனுக்கு அருளும் கருணை நிரம்பிய பிரவாகம் போன்ற கடைக்கண் பார்வையையுடையவள் அவள். இக்கருத்தை "கடாக்ஷ்யந்தி கருணையை நம:," என்ற திரிசதி நாமம் கூறும். பக்தர்களுடைய தேவைகளைத் தன் கடைக்கண்களாலேயே தேவி அருளுகிறாளாம்.

இவ்வளவு பெருமை பொருந்திய, தேவி அபிராமியின் கடைக்கண்கள் நல்கும் நன்மைகளை அபிராமி பட்டர் ஒரு அந்தாதிப் பாடலில் கூறியுள்ளதை இங்கு காணலாம். செல்வம் உலக வாழ்க்கைக்கு இன்றியமையாதது ஆகும். மேகம் போன்ற கருத்து அடர்ந்த கூந்தலையுடையவள் அபிராமி. தன்னுடைய கூந்தலிலே நறுமணமுடைய மலரைச் சூடியவள் அவள். செல்வத்தைக் கண்காணிக்கும் தேவி முதலில் தன்னுடைய பக்தனுக்குத் தேவையான செல்வத்தைக் கடைக்கண் பார்வையால் அருளுகிறாள். அவள் அருள் பெற்ற அன்பருக்கு அவளுடைய கடைக்கண் பார்வை முதலில், தன, தானியத்தைக் கொழிக்கச் செய்கிறது. "தநாத் யக்ஷா," "தன தான்ய விவர்த்திநீ" என்ற திருநாமங்களைக் கொண்டு லலிதா ஸஹஸ்ரநாமம் அவளைப் போற்றித் துதிக்கும்.

இவ்வுலகில் ஒருவனுக்குச் செல்வம் மட்டும் இருந்தால் போதாது. பணத்தைக் கொண்டு மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம். ஆனால் அப்பணத்தை நல்ல வழியில் பயன்படுத்துவதற்குக் கல்வி அறிவு தேவை. எனவே அபிராமியின் கடைக்கண்கள் அவளுடைய அடியார்களுக்கு மட்டும் செல்வத்தை முதலில் அளித்து, அதைப் பயன்படுத்துவதற்குரிய கல்வியையும் கொடுக்கின்றது. அன்னையின் கடைக்கண்கள் அவளுடைய அன்பர்களுக்கு தனம், கல்வி, என்ற இரு நலன்களையும் தந்து அருளுகின்றன.

முதலில் தேவியின் கடைக்கண்கள் பக்தனுடைய வறுமையை நீக்குகிறது. வறுமை நீங்கித் துன்பம் இல்லாத நிலையைப் பெற்றவர், கல்வியினால் சிறக்கும் திறத்தை அடைவதற்குரிய வாய்ப்பைப் பெறுவர். இவ்விரு நலன்களையும் அருளிய அவளுடைய கடைக்கண்கள் அடுத்து அவளுடைய அடியார்க்குத் தளர்வு அறியாத மனத்தை அருளும்.

தேவி, பக்தன் ஒருவன் தன்னை தரிசனம் செய்தமாத்திரத்திலேயே கல்வி, தனம் இரண்டும் கிடைக்கும்படி செய்கிறாள். இவ்வாறு பட்டர் குறிப்பிட்டதற்கு நல்ல சான்று லலிதா ஸஹஸ்ரநாமத்திலுள்ளது. தேவியின் இடது புறத்தில் லட்சுமியும், வலதுபுறத்தில் சரஸ்வதியும் நின்று சாமரம் வீசிப் பணிவிடை புரிகின்றனர். "ஸசாமர — ரமா — வாணீ — ஸவ்யதக்ஷிண — ஸேவிதா" என்ற திருநாமம் இக்கருத்தை உணர்த்தும். எனவே தேவியைச் சேவிப்பவர்களுக்கு இடப்புறம் உள்ள திருமகளின் பார்வையினால் செல்வமும், போகங்களும்; வலப்புறம் உள்ள கலை

மகளின் பார்வையினால் கல்வியும், ஞானமும் சித்திக்கின்றன.

திருமகளாக இருந்து செல்வத்தையும், கலைமகளாக இருந்து கல்வியையும் தேவி தன் அடியார்க்கு அளிக்கிறாள். தனமும், கல்வியும் மட்டும் பெற்றுவிட்டால் போதாது. இரண்டையும் காப்பாற்றிக் கொள்ளத் தளர்வு இல்லாத மனம் வேண்டும். தளர்வு இல்லாத மனத்தை அதாவது நேர்மையான வீரத்தை அருளும் வீரலட்சுமியாக துர்க்கா பரமேஸ்வரியாகவும் இருப்பவள் தேவியே. எனவே, அன்னையின் கடைக்கண்கள் அடுத்து அவளுடைய அன்பர்களுக்குத் தளர்வு இல்லாத உள்ளத்தை அருளுகிறது. கல்வி, செல்வம், வீரம் ஆகிய மூன்று பேறுகளையும் அருளும் சரஸ்வதி, லட்சுமி, துர்க்கை என்ற மூன்று தேவதைகளின் ஒரே வடிவமாக தேவி இருப்பதால் மூன்று பேறுகளும் பக்தனுக்கு ஒரே இடத்தில் கிடைத்துவிடுகின்றன. ஒரு கல்லில் இரண்டு மாங்கனி" என்று ஒரு பழமொழி உண்டு. ஆனால் இங்கு ஒரே சமயத்தில் முக்கனிகளாக மூன்று பேறுகள் கிடைத்து விடுகின்றன.

அவள் அருளைப் பெற்றவர் அழகிய வடிவைப் பெறுவர். தூய்மையான உள்ளமும், அன்பும், பழக்கமும் உடையவர்களுக்கு நல்ல வடிவு அழகு உண்டாகும். அத்துடன் அம்பிகையின் தியானமும் சேர்ந்து உள்ளவர்களுக்கு, அவளுடைய கடைக்கண்கள் தெய்வ வடிவையும் அருளும். தெய்வ வடிவு உள்ள அடியார்களின் முகத்திலேஒருநல்லபொலிவு தோன்றும். அழியாச் செல்வமாகிய கல்வியையும், சுக போகங்களை அனுபவிப்பதற்கான செல்வத்தையும், நல்லனவற்றைத் திறம்படச் செய்வதற்கான தளர்ச்சி இல்லாத மனத்தையும், தெய்வ வடிவத்தையும் தன் பக்தருக்கு அருளுகிறாள் தேவி.

எல்லா நலன்களையும் பெற்ற தன் பக்தன், தான் அருளிய நலன்களை அவன் விளுக்காமல் இருக்க அவனுக்கு நல்லினத்தின் சேர்க்கையை அருளுகிறாள். நெஞ்சில் வஞ்சகம், சூது, கபடு இல்லாத நல்ல இனத்தாரையும், தொண்டரையும் அபிராமியின் கடைக்கண்கள் அடியார்க்கு அளிக்கின்றன. இவ்வளவு நலன்களையும் பெற்ற தன் அடியார், வேறு ஏதாவது நலன்களை நாடி எங்கும் செல்லக்கூடாதுஎன்றதிருவுள்ளங்கொண்டு அவனுக்குநல்லன எல்லாம் அருளிவிடுகிறாள் தேவி.

அபிராமியின் கடைக்கண்களின் பார்வையில் அகப்பட்டவர்களுக்கெல்லாம் இவ்வளவு நலன்களும் கிடைக்கும் என்பதில் சிறிதும் ஐயமில்லை. மேற்கூறிய நலன்களை எல்லாம் யார் பெறுவர் என்று முதலில் பட்டர் இப்பாடலில் கூறவில்லை. அவள் கடைக்கண்பார்வையினால்நலன்களைப்பெறுபவர்கள் அவளுடைய அடியார்கள். முதலில் ஆசையைத் தூண்டுவது போல, இன்னின்ன பேறுகளை அவளுடைய கடைக்கண்கள் தரும் என்று இப்பாடலில் சொன்ன பட்டர், இறுதியில், "அன்பர் என்பவர்க்கே" இப்பேறுகளை வழங்குகிறாள் என்று கூறியுள்ளது சிந்திக்கத் தக்கதாகும். சிறு குழந்தைகளைப் பள்ளிக்கூடம் செல்லத் தூண்டுவதற்காக அவர்களுக்கு ஏதாவது தின்பண்டங்களைக் கொடுத்துக் கவர்வது போலக் கூறுகிறார். குழந்தைகள் தின்பண்டத்தில் உள்ள ஆசையால் பள்ளிக்குச் செல்லும். அதுபோல அபிராமியின் கடைக்கண் பார்வையால் பெறக்கூடியபேறுகளைவிரும்பி வருபவர்கள், அவளுடைய அன்பர்களாகவே ஆகிவிடும் தகுதியைப் பெறுகிறார்கள். தன்னைப் போன்று எல்லாரும் அவளுடைய அன்பர்களாக வேண்டும் என்ற அரிய பெரிய கருத்தை உள்ளடக்கிப் பாடியுள்ள அபிராமி பட்டர் எல்லோருடைய வணக்கத்துக்கும் உரியவராகி விடுகிறார்.

"தனம் தரும், கல்வி தரும், ஒருநாளும்
தளர்வு அறியா
மனம் தரும், தெய்வ வடிவும் தரும்,
நெஞ்சில் வஞ்சமில்லா
இனம் தரும், நல்லன எல்லாம் தரும்,
அன்பர் என்பவர்க்கே
கனம் தரும் பூங்குழலாள் அபிராமி
கடைக்கண்களே."

**மாயூரம் அபிராமிதாஸன்**

காலையில் செய்ததை விளுக்காதீர்!

காலையில்செய்த குழம்பு, ரசம் போன்றவைகளை மாலை நான்கு மணியளவில் நன்றாகக் கொதிக்க விட்டால் அவை சாப்பாட்டிற்கு சுவையாக இருக்கும்.

—என். பங்கஜம்.

படுக்கையில் இருந்து கொண்டு பேசும் நோயாளி —
குழந்தையை வர்ணிக்கும் தாய் —,
தன் புத்தகத்தைப் படித்துக் காட்டும் ஆசிரியர் —
இவர்கள் எப்போது முடிப்பார்கள் என்று சொல்ல முடியாது.
—ஆலிவர் வெண்டல் ஹோம்ஸ்.

—எஸ். விஜயா சீனிவாசன்.

# உத்திரவாதமான பாதுகாப்புக்கு

# "பியர்லெஸ்"



அண்மைக் காலத்தில் "பியர்லெஸ்" சில பிரச்னைகளை எதிர்கொள்ள வேண்டியிருந்தது. இந்தப் பிரச்னைகள் மிகவும் குறுகிய காலத்துக்குத்தான் இருந்தன. கம்பெனியின் பெருமை மிக்கநிர்வாக இயக்குனர்திரு. B.K ராய் அவர்கள் திடீரென மரணமடைந்தார். இதைத் தொடர்ந்து கம்பெனிக்கும் அதன் பணிகளை நிறைவேற்றும் ஊழியர்களுக்கும் ஒருவரையொருவர் சரியாகப் புரிந்து கொண்டு செயல்படும் விதத்தில் பிரச்னை உருவாகிறது. இந்த சோதனைமிக்க கால கட்டத்தில் போட்டியாளர்கள் என்றும், எதிர் பிரசாரக் காரர்கள் என்றும் சொல்லப்படும் சிலரால் தூண்டப்பட்ட பிரசாரம் ஒன்று ஆரம்பமாகியது. "பியர்லெஸ்" கம்பெனிக்கு ஏற்பட்ட இந்த நெருக்கடியான கால கட்டத்தைப் பயன்படுத்திக் கொண்டு குழப்பத்தை விளைவிப்பதும் வதந்திகளைப் பரப்புவதும் இவர்களது முக்கிய நோக்கமாக இருந்தது. இவர்களுக்கெல்லாம் சவுக்கடி கொடுப்பதுபோல்கம்பெனியின் முழு நேர இயக்குனர் திரு S.K. ராய் அவர்கள் "எந்தவிதமான வெகுமதிச் சீட்டுத் திட்டத்திலோ, வியாபார நோக்கில் பணப் புழக்கத்திலோ "பியர்லெஸ்" ஈடுபட்டுத் தொழில் நடத்தி வரவில்லை என்பதைத் தெளிவாகவும் அழுத்தந் திருத்தமாகவும் கூறினார். மேலும் கம்பெனியின் முக்கிய குறிக்கோள் சிறு சேமிப்பை ஊக்குவிப்பதுதான் என்றும், அதுவும் விசேஷமாக கிராமப் புறங்களில் உள்ள விவசாயிகளிடமும், கூலி வேலை செய்து ஜீவனம் நடத்துபவர்களிடையேயும், ஓரளவு சொல்பவருமானம்உள்ளவர்களிடையேயும், சமுதாயத்தில் அடிமட்டத்தில் உள்ளவர்களிடையேயும் சேமிக்கும் பழக்கத்தை வளர்ப்பதுதான் என்பதையும் விளக்கினார்.

1931—32ம் ஆண்டு நாட்டில் குழப்பமும் கலவரமும் மிகுதியாகயிருந்த நேரம். இந்தச் சமயத்தில்தான் ''பியர்லெஸ்'' ஆரம்பிக்கப்பட்டது. அப்போது சுதேசி இயக்கம் மீண்டும் தலை தூக்கியிருந்தது. தேசம் முழுவதும் விடுதலைக்காகக் கொதித்தெழுந்து போராடிக்கொண்டிருந்த காலம். மக்கள் மனதில் வெள்ளையர் ஆட்சி மீது வெறுப்பும் அதிருப்தியும் கோபமும் வளர்ந்து கொண்டிருந்தது.

இந்த நேரத்தில்தான் பிரிட்டிஷ் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனியின் பிரதிநிதியும் பள்ளி ஆசிரியருமான காலஞ்சென்ற திரு. ராதேஷ்யாம் ரே அவர்கள் வெள்ளையர்களின் பிடியிலிருந்து மக்களை பொருளாதார ரீதியில் விடுவிக்க முனைந்தார். திரு. ரே ஒரு தீவிர தேசியவாதி. சிறந்த தேச பக்தர். சுதேசி இயக்கத்தின் கொள்கைகளினால் மிகவும் கவரப்பட்டு உந்தப்பட்ட இவர் தன்னுடைய சில நெருங்கிய சகாக்களுடன் சேர்ந்து 1932ம் வருடம் ''பியர்லெஸ்'' கம்பெனியைத் துவக்கினார். இன்று பங்களாதேஷில் உள்ள நாராயணகஞ்ச் என்னுமிடத்தில் தான் ''பியர்லெஸ்'' கம்பெனி துவங்கப்பட்டது. வெளிநாட்டினரின் கட்டுப்பாட்டுப் பிடியிலிருந்து பூரணமாக விடுபட்டு ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் தொழில் செய்வது இவர்கள் குறிக்கோளாக இருந்தது. மிகவும் அதிசயிக்கத்தக்க முறையில் கம்பெனி வெற்றிமேல் வெற்றிபெற்றுவளர்ந்துவந்தது. விரைவிலேயே இந்தியாவில் முன்னணியில் இருந்த பிராவிடெண்ட் இன்ஷ்யூரன்ஸ் நிறுவனங்களில் ஒன்றாக இது வெளிப்பட்டது. காலப் போக்கில் நிர்வாக செளகரியங்களை முன்னிட்டு இந்தக் கம்பெனியின் பதிவு செய்யப்பட்ட அலுவலகம் கல்கத்தாவுக்கு மாற்றப்பட்டது. ''தி பியர்லெஸ் ஜெனரல் ஃபைனான்ஸ் & இன்வெஸ்ட்மெண்ட் கம்பெனி லிமிடெட்'' என்று பெயர் சூட்டப்பட்டு மேலும் மேலும் வளர்ச்சியடைய ஆரம்பித்தது.



Late Radhashyam Roy
Founder

அதற்குப் பிறகு ''பியர்லெஸ்'' சரித்திரத்தில் ஒரு பெரிய திருப்புமுனை 1956ம் ஆண்டு ஏற்பட்டது. ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் தொழில் தேசியமயமாக்கப்பட்டது. இந்திய அரசு பொருளாதார மேம்பாட்டுக்குப் பலப் பல திட்டங்களை வகுத்துக் கொண்டிருந்தது. சாதாரண மக்களின் பொருளாதார நிலையை உயர்த்துவதற்கு தனக்கே உரிய பாணியில் ''பியர்லெஸ்'' கம்பெனியும் சில புதுமையான திட்டங்களை ஆரம்பித்தது. சாதாரண மக்களின் வாழ்க்கையில் அவர்களின் ஆசைகளும், நோக்கங்களும், இலட்சியங்களும் அவர்களது வாழ்நாளிலேயே ஈடேற அவர்கள் சேமிக்கும் பழக்கத்தை வழக்கமாகக் கொள்ள வேண்டிய அவசியத்தை ஊக்குவிப்பதுதான் நல்லது என்று இந்தக் கம்பெனி கருதியது. சாதாரண மக்களின் சக்திக்கும் தேவைக்கும் ஏற்ப சில திட்டங்களை ஆரம்பிப்பதற்கு கம்பெனியின் இந்தக் கருத்து அவசியமாக இருந்தது. இப்படியாக ''சமூக நல திட்டங்கள்'' என்ற பெயரில் மிகச் சிறிய சாதாரண மனிதர்களின் தேவைக்கு ஏற்ப புதுமையான சேமிக்கும் திட்டங்களை ஆரம்பித்து ''பியர்லெஸ்'' தன்னுடைய பணிகளில் முன்னோடியாக இருந்தது.

''பியர்லெஸ்''ஸின் இந்த சமூக நல திட்டங்கள் குறிப்பிடத்தக்க இரண்டு பகுதிகளினால் விவரிக்கப்படுகின்

றன. முதலாவதாகவும் முக்கியமான தாகவும் இந்த திட்டங்கள் விஞ்ஞான ரீதியாகவும், இன்ஷ்யூரன்ஸ் பிரீமியம், கால கெடு, அது முடியும் தருவாயில் கொடுக்கப்பட வேண்டிய தொகை ஆகிய கொள்கைகளை அடிப்படை யாகக் கொண்டவை. இந்த இடத்தில் ஒரு விஷயத்தைச் சொல்லுவது மிக வும் பொருத்தமாக இருக்கும். இந்தக் கம்பெனியின் சேர்மன் திரு. H. K. சென் அவர்கள் இன்ஷ்யூரன்ஸ் பிரீமியம், எவ்வளவு காலத்துக்கு பாலிஸி எடுத் துக் கொள்ள வேண்டும். அதன் ஆதா யங்கள், பாதகங்கள், பாலிஸிதாரர் இறந்தால் கிடைக்கக் கூடிய தொகை முதலிய பல விஷயங்களைத் துல்லிய மாகக் கணக்கிட்டுச் சொல்லக் கூடிய ஒரு பிரமிக்கத் தக்கவர். இந்தக் கம் பெனியின் திட்டங்களில் ஊகத்திற்கு எந்த விதமான இடமும் இல்லை என்று இவர் அழுத்தமாகவும் உறுதியாகவும் சொல்லியிருக்கிறார். இந்தத் திட்டத் தின் கீழ் ஒவ்வொரு அங்கத்தினரும் "பியர்லெஸ்" கம்பெனியுடன் ஒரு கான்ட்ராக்ட் செய்துகொள்கிறார்கள். குறிப்பிட்ட என்டோமெண்ட் காலத் துக்கு வருஷத்துக்கு ஒரு முறையோ ஆறு மாதங்களுக்கு ஒரு முறையோ மூன்று மாதங்களுக்கு ஒரு முறையோ ஒரு குறிப்பிட்ட சந்தா தொகையைச் செலுத்தி வருவதாக ஒப்புக் கொண்டு அதன்படி செலுத்தி வருகிறார்கள். கம் பெனி, தன் பங்குக்கு சர்டிபிகேட் வைத்திருக்கும் அங்கத்தினர்களுக்குக் குறிப்பிட்ட என்டோமெண்ட் காலம் முடிவடைந்தவுடன் ஒரு குறிப்பிடப் பட்ட மொத்தத் தொகையை அளிக் கிறது. இதற்கு என்டோமெண்ட் தொகை என்று பெயர். அத்துடன் உத்திரவாதமாக ஒரு போனஸ் தொகையையும் அளிக்கிறது. சர்டிபி கேட் வைத்திருக்கும் ஒவ்வொரு அங் கத்தினருக்கும் அளிக்கப்படும் என் டோமெண்ட் தொகையும் உத்திர வாதமாக அளிக்கப்படும் போனஸ் தொகையும் சேர்ந்து அங்கத்தினர் செலுத்தும் தொகையை விட மிகவும் கூடுதலாக இருக்கும். இந்தக் கூடுதல் தொகை அங்கத்தினருக்கு லாபம்.

இந்தத் திட்டங்கள் பல விதங்களில் வளைந்து கொடுக்கும் விதமாக உள் ளன. இந்த சர்டிபிகேட்டுகளை வைத்து கடன் வாங்குவதற்கும், சர்டிபிகேட் டுகளை சரண்டர் செய்து விடுவதற்கும், சந்தா பாக்கியை செலுத்தாத கார ணத்தினால் நடுவில் விட்டுவிடப்பட்ட சர்டிபிகேட்டுகள் தாமாகவே மறுபடி யும் புதுப்பிக்கப்படுவதற்கும் பல ஏற் பாடுகள் உள்ளன. இரண்டு வருடங் களுக்கான சந்தா தொகையை செலுத் தியவுடனேயே ஒரு சர்டிபிகேட் தானா கவே "பெய்ட்—அப்" ஆகிவிடுகிறது. ஏழுவருடங்களுக்குசந்தாதொகையை செலுத்தியவுடன் முழு டிபாஸிட் தொகையையும் எந்தவித பிடித்தமும் இல்லாமல் திரும்ப எடுத்துக் கொள்ள லாம். மிகச் சாதாரண எளிய மக்க



Sri H. K. Sen
Chairman

ளின் சௌகரியங்களுக்கு ஏற்ப பல விதமான வசதிகளை செய்து கொடுப் பதற்காக இந்த ஏற்பாடுகள் உதவுகின் றன. "பியர்லெஸ்" கம்பெனியின் முக் கிய அக்கறை சர்டிபிகேட் வைத்திருக் கும் அங்கத்தினர்களின் நலனைக் காப் பதுதான்" என்று கம்பெனியின் முழு நேர இயக்குனர் திரு. S. K. ராய் அவர் கள் தமக்கே உரிய பந்தத்துடனும் மிகுந்த நம்பிக்கையுடனும் கூறுகிறார். "பியர்லெஸ்"ஸில் சர்டிபிகேட்

வைத்திருப்பவர்கள்தான் நடைமுறையில் உண்மையான நன்மையடைபவர்கள் என்ற உண்மைக்கு "பியர்லெஸ்" கம்பெனியின் இந்த குறிப்பிடத்தக்க நல்லநல்லதிட்டங்களின் அம்சங்களே காரணம்.

சமூக நல திட்டத்தின் உள்ளடங்கியுள்ள இந்த பிரத்யேக வசதிகள் ஒருபுறமிருக்க கம்பெனியின் முதலீடுசெய்யும் கொள்கை மிகவும் குறிப்பிடத்தக்கதாக உள்ளது. கம்பெனியின் முதலீடு செய்யும் கொள்கையைப் பற்றி சந்தேகப்படுவதற்கோ பயப்படுவதற்கோ துளிக்கூட இடமில்லை. வாழ்க்கையில் பொருளாதார நிலையில் சரியாக இல்லாத பல லட்சக்கணக்கான மக்களுக்குச் சொந்தமான பணமாயிற்றே, டிபாஸிட்தாரர்களின் இந்த பணத்துக்கு முழு பாதுகாப்பும் காபந்தும் அளிக்க வேண்டுமே என்ற கவலை



Late Shri B. K. Roy
Former Managing Director.

யில் சர்டிபிகேட் வைத்திருப்போர்களின் முழு தொகையும் அரசாங்கத்தின் பாதுகாப்பில் அதாவது தேசியமயமாக்கப்பட்ட வங்கிகளில் ஃபிக்ஸட் டிபாஸிட்டாக வைக்கப்பட்டுள்ளது. சமூக நலதிட்டங்களின் மகோன்னதமான பிரசித்திக்குப் பின்னல் மற்ெருரு குறிப்பிடத்தக்க காரணமும் இருக்கிறது. இதுதான் "பியர்லெஸ்" ஸ்தாபனத்தின் வளர்ச்சியின் இரகசியம். உண்மையிலேயே புனிதமானதை உருவாக்க வேண்டுமென்று உள்ளூர உந்தப்பட்ட எண்ணத்திற்கு மிகவும் அசாதாரண முறையில் இந்தக் கம்பெனி பக்தியும் விசுவாசமும் செலுத்தி வருகிறது. இன்று "பியர்லெஸ்" இருக்கும் நிலைக்கு அதை உயர்த்தியிருப்பது இந்தச் சீரிய நோக்கமும், பக்தியும், விசுவாசமும்தான். அத்துடன் எல்லோராலும் பின்பற்றப்பட்டு போற்றப்பட வேண்டியதாக "பியர்லெஸ்"ஸில் உள்ளவர்கள் "ஒரு அணியின் வேலையாக" கடமையாற்றி வருகிறார்கள். கம்பெனியின் துணிச்சல்கார டைரக்டர் திரு. M. R. முகர்ஜி அவர்கள் ஸ்தாபனத்தின் வளர்ச்சிக்கும் புகழுக்கும் முக்கிய காரணம் இந்த "டீம் ஒர்க்"தான் என்று பெருமைப்பட சொல்கிறார். கம்பெனியின் முக்கியமான அம்சங்கள், குறிக்கோள்கள் பற்றிக்கேட்டபோது, இந்தியா முழுவதும் வங்கியின் தொழில் இல்லாத பல சேமிப்பு ஸ்தாபனங்கள் இயங்கி வருகின்றன. அவைகளிலிருந்து எல்லா விதங்களிலும் "பியர்லெஸ்" முற்றிலும் மாறுபட்டு இருக்கிறது" என்று திரு. S. K. ராய் அவர்கள் கருத்து தெரிவித்தார்கள். கணக்கிலடங்காத போலி கம்பெனிகள் காளான் முளைப்பது போல் முளைத்து தங்களுடைய விஞ்ஞான ரீதியில் இல்லாத ஏமாற்றுத்தனமான திட்டங்களினாலும், பேச்சுக்களினாலும் மிகப் பெரிய தவறைப் பரப்பிக் கொண்டுவருகின்றன. பொருளாதார ஸ்திரத் தன்மையும் மக்களிடையே மதிப்பும், செய்யும் காரியத்தில் நல்லெண்ணமும் இல்லாத இந்தக் கம்பெனிகள் மிகச் சிறிய வருவாய் உள்ள சாதாரண மக்களிடமிருந்து பணத்தை சேகரித்துக் குவித்து அந்தப் பணத்தை முறையான ஆரோக்கியமான விதத்தில் முதலீடு செய்யாமல் அபாயகரமான விதத்தில் இந்தப் பணத்தை விரயம்செய்கிறார்கள். இந்தஎல்லாபணத்தையும் விழுங்கி விட வேண்டும் என்ற உள்நோக்கமோ அல்லது நல்ல லாபம் சம்பாதிக்க வேண்டும் என்ற எண்ணத்தினால் உந்தப்பட்டோதான் அவர்கள் நிச்சயமாக இந்தக் காரியத்தைச்

செய்கிறுர்கள்.

பரவலாக எல்லா இடங்களிலும் உள்ள இந்தக் கவலைப்பட்டத்தக்க விஷயம் பொருளாதாரத்துக்குப் பெரிய கெடுதலை உண்டு செய்யும். மக்களிடையே சேமிப்பு பழக்கத்தையே இது ந்டுத்துவிடக் கூடும். இது போன்ற போலிஸ்தாபனங்களிலிருந்து எல்லா விதத்திலும் முற்றிலும் மாறுபட்டு ''பியர்லெஸ்'' நிறுவனம் ஸ்திரத்தன்மைக்கும் பாதுகாப்புக்கும் பெயர் பெற்று விளங்குகிறது. எந்த வித காரணம்கொண்டும் ''பியர்லெஸ்'' தூஷிக்கப்பட்டுவிட முடியாது. மற்ற எந்தவிதமான காளான் போன்ற ஸ்தாபனத்துடன் வேண்டுமென்றே அல்லது வேறு ஏதாவது காரணங்களுடனேயோ சரிசமப்படுத்தி விட முடியாது.

தேசத்தின் சிறுசேமிப்புஸ்தாபனங்களில் ''பியர்லெஸ்'' இன்று முன்னணியில் விளங்குகிறது. இன்னும் மேன்மேலும் வளர்ச்சியடைந்து விருத்தியாகவும் பீடுநடை போடுகிறது. 1984 ஆம் ஆண்டு டிசம்பர் 31 ந் தேதியுடன் முடிவடையும் கால கட்டத்தில் கம்பெனியின் வியாபாரம், வர்த்தகம் ஒரு புதிய உச்ச கட்டத்தை எட்டிப் பிடித்துள்ளது. இந்தக் கால கட்டத்துக்கு ரூ. 3000 கோடிக்கு புதிய அங்கத்தினர்கள் சேர்த்து தொழில் செய்ய வேண்டும் என்று கம்பெனி இலக்காகக் கொண்டது. ஆனால் இந்த இலக்கையும் தாண்டி இந்த கால கட்டத்தில் ரூ. 3040 கோடிக்கு கம்பெனி புதிய அங்கத்தினர்கள் சேர்த்துள்ளது. இதற்கு முந்தைய ஆண்டில் கம்பெனி ரூ. 2795.75 கோடிக்குப் புதிய அங்கத்தினர்களைச் சேர்த்தது. அத்துடன் ஒப்பிட்டுப் பார்க்கும் போது 1984 ஆம் ஆண்டு டிசம்பர் 31 ந் தேதியுடன் முடிவடைந்த கால கட்டத்துக்கு கம்பெனி அடைந்துள்ள புதிய அங்கத்தினர்களின் கூடுதல் தொகையானது மிகவும் போற்றத்தக்க விதத்தில் உள்ளது.

1985 ம் வருடம் ஏப்ரல் 30 ந் தேதியன்று கம்பெனி செய்துள்ள மொத்த முதலீடு ரூ. 600 கோடிக்கும் மேல் உள்ளது. இது மிகவும் பிரமிக்கத்தக்கது. நடப்பு ஆண்டுக்கு ரூ. 3200 கோடிக்கு புதிய அங்கத்தினர்களைச் சேர்க்கவேண்டும்என்பதைகம்பெனி இலக்காகக் கொண்டுள்ளது. ஆரம்ப காலம் தொட்டே கம்பெனி மளமள வென்று புகழேணியில் முன்னேறி வந்திருப்பதையும் கம்பெனியின் செல்



Sri S. K. Roy
Wholetime Director

வாக்கையும் பார்க்கும் போது ''பியர்லெஸ்'' இந்த இலக்கை நிச்சயமாக எட்டிப் பிடித்துவிடும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. 1985 மே மாதம் முடிய கம்பெனி தனது காரியங்களை எப்படிச்செய்திருக்கிறது என்றுபார்க்கும் போது தன்னுடைய மரபையும் பாரம்பரியத்தையும் ஒட்டி இந்த வருஷமும் ''பியர்லெஸ்'' மிகவும் சுலபமாகத் தன்னுடைய இலக்கை எட்டிப் பிடிப்பதுடன் தாண்டியும் சென்றுவிடும் என்று இப்போதே ஒரு முன்னேடியாகத் தெரிகிறது.

உலகம் முழுவதும் உற்பத்திக்கு ஆகும் செலவினங்களும், நிர்வாகச் செலவினங்களும் அதிகரித்துக் கொண்டே வந்த போதிலும் ''பியர்லெஸ்'' கம்பெனி தன்னுடைய நிர்வாகச் செலவினங்களை மிகவும் குறைந்த அளவிலேயே வைத்துக் கொண்டிருக்கிறது. கம்பெனி மிகவும் திறமையுள்ள தொழில்வல்லுநர்களைக்

கொண்டு இயங்கப்படுகிறது என்பதற்குஇதுவேஓர் எடுத்துக்காட்டாகும். மேலும் 1984ம் வருடத்தில் இந்தக் கம்பெனிக்கு ஓர் திருப்பு முனை ஏற்பட்டது. விஞ்ஞான ரீதியில் நிர்வாக அமைப்பு திறம்பட இயங்குவதற்கும் பொறுப்புக்களை அதிக அளவில் பகிர்ந்து கொண்டு செயல்படுவதற்கும் வசதியாக தேசம் முழுவதிலும் உள்ள ''பியர்லெஸ்'' காரியாலயங்கள் முதல் கட்டமாக கம்ப்யூட்டர் முறையில் கொண்டு வரப்பட்டன. வருங்காலத்தில்மிகப்பெரிய அளவில் செயல்படுவதற்குத் தேவையான புள்ளி விவரங்களைச் சேகரித்து தேவைப் பட்டபோது கொடுப்பதற்கும், சிக்கனமான முறையில் நிர்வாகம் தொடர்ந்து நடைபெறுவதற்கும் இந்த ஏற்பாடு மிகவும் உதவும். அது மட்டுமல்ல. கம்பெனியின் நிர்வாகத் திறனை மேலும் செம்மைப் படுத்தும் நோக்கத்துடன் நிதி நிலைமை மற்றும் அதன் தொடர்புள்ள செயல்களை ஆராய்ந்து அறிந்து ஓர் அறிக்கை சமர்ப்பிக்கப்படுவதற்காக Ms. PRICE WATERHOUSE & COMPANY நியமிக்கப் பட்டுள்ளார்கள்.



Sri M. R. Mukherjee
Director

சர்டிபிகேட் வைத்திருப்போர்களின் தேர்கைக்கு பாதுகாப்பும், காபந்தும் கொடுப்பதில் ''பியர்லெஸ்'' கம்பெனிக்கு உள்ள அக்கறையும், கவலையும், ஈடு இணையற்றது. 1984ம் ஆண்டு டிசம்பர் 31ந் தேதியன்று எல்லா ''பியர்லெஸ்'' சர்டிபிகேட்வைத்திருப்போர்களின் கூடுதல் தொகை ரூ. 460.35 கோடியாக இருந்தது. இந்தத் தொகைமுழுவதும்அரசாங்கபத்திரங்களாகவும், தேசிய மயமாக்கப்பட்ட வங்கிகளில் ஃபிக்செட் டிபாஸிட்களாகவும் முதலீடு செய்யப்பட்டுள்ளது. சர்டிபிகேட் வைத்திருப்போர்களின் நலனைக் காப்பதற்காக எல்லா அரசாங்கப் பத்திரங்களையும், ஃபிக்செட் டிபாஸிட் ரசீதுகளையும் யுனைடெட் பாங்க் ஆப் இந்தியாவில் ஒப்படைக்கப்பட்டுள்ளன. கம்பெனி இவர்களுடன் செய்து கொண்டுள்ள ஒப்பந்தப்படி யுனைடெட் பாங்க் ஆப் இந்தியாவுக்கு இந்த அரசாங்க பத்திரங்கள் மீதும் ஃபிக்சட் டிபாஸிட்டுகள் மீதும் ஒரு ''LIEN'' இருக்கிறது. எனவே அரசாங்கப் பத்திரங்களும் ஃபிக்செட் டிபாஸிட்டுகளும் சம்பந்தப்பட்ட அதிகாரிகளின் அனுமதியின்றி ''பியர்லெஸ்'' கம்பெனியால் திரும்பப் பெற்றுக் கொள்ள முடியாது.

''பியர்லெஸ்'' கம்பெனியின் கொள்கைகளுக்கும்சமூகப்பொறுப்புகளுக்கும் சித்தாந்தங்களுக்கும் ஏற்ப 1984ம் ஆண்டில் மருத்துவ ஆராய்ச்சி அபிவிருத்திக்கும், பல்வேறு கல்வி நிறுவனங்களுக்கும், சமூக காரியங்களுக்கும், தர்ம காரியங்களுக்கும், பரோபகார காரணங்களுக்கும் ரூ. 20.90 லட்சம் நன்கொடையாகவும் சன்மானமாகவும் அளிக்கப்பட்டன. இந்தியாவிலுள்ள பல இடங்களில் நிறுவப்பட்டுள்ள ''பியர்லெஸ்'' அலுவலகங்களில் நாலாயிரத்துக்கும் மேற்பட்ட தொழிலாளர்களுக்கு வேலை வாய்ப்பு ஏற்படுத்திக் கொடுக்கப்பட்டுள்ளது. தன்னுடைய புதுமையான சிறு சேமிப்புத் திட்டங்களில் ''பியர்லெஸ்'' கம்பெனி இரண்டு கோடிக்கும் மேற்பட்ட ஜனங்களை சேர்த்து அதன் மூலம் லக்ஷக்கணக்கான ஜனங்களுக்கு கௌரவமான சுய வேலை வாய்ப்பை ஏற்படுத்திக் கொடுத்துள்ளது. சர்க்கார் கஜானாவில் ரூ. 600 கோடிக்கும் மேல் நிதி போட்டுள்ளது.

இந்தக் காரியங்கள் எல்லாவற்றுக்கும் ''பியர்லெஸ்'' கம்பெனியைப் பாராட்டிப் புகழலாம். தன்னுடைய வளர்ச்சிப் பாதையில் எவ்வளவு அதிகப்படியான மக்களை ஈடுபடுத்த முடியுமோ அவ்வளவு பேர்களை ஈடுபடுத்தி 53 ஆண்டுகளுக்கு முன் ஆரம்பிக்கப்பட்ட போது ஏற்றுக் கொண்ட உயர்ந்தகொள்கைகளையும்சீரியநோக்கங்களையும் ''பியர்லெஸ்'' கம்பெனி இன்னமும் கடைப்பிடித்து வருகிறது. சுய வேலை வாய்ப்பை ஏற்படுத்திக் கொடுப்பது இன்று அரசாங்கத்தின் திட்டமிட்ட கொள்கையாக இருக்கிறது. புதிய 20 அம்சத் திட்டத்தில் இது ஓர் அங்கமாகி விட்டது. ஆனால் ''பியர்லெஸ்'' கம்பெனி இந்தச் சீரிய நோக்கத்தைத் தன்னுடைய லட்சியமாகக் கொண்டு இவ்வளவு காலமாகச் செயல்பட்டு வருகிறது.

மேலும் ஏழாவது ஐந்தாண்டு திட்ட காலத்தில் நாட்டின் பொருளாதார வளர்ச்சியில் தன்னையும் ஈடுபடுத்திப் பங்கேற்றுக் கொள்ள ''பியர்லெஸ்'' கம்பெனி மிகவும் தீவிரமாக இருக்கிறது. இதன் தொடர்பாக மத்திய மாநில அரசுகளின் முக்கியத்துவம் வாய்ந்த (Priority Sector) தொழில் நிறுவனங்களுக்குத் தேவையான நிதி உதவிகளுக்கு உத்திரவாதம் அளிக்கவும் நியாயமான வருமானம் கிடைக்கவும் சம்பந்தப்பட்ட அதிகாரிகளுடன் பேச்சு வார்த்தை நடத்துவதென்று ''பியர்லெஸ்'' கம்பெனி பிரேரேபித்துள்ளது.

சர்டிபிகேட் வைத்திருப்பவர்களின் நலனைக் கட்டிக் காக்க ''பியர்லெஸ்'' கம்பெனியின் முயற்சிகள் கொஞ்சம் கூடத் தளர்ச்சியடையவில்லை. இதற்காக 1977ம் ஆண்டிலேயே இரண்டு டைரக்டர்களை போர்டில் சேர்த்துக் கொள்வதென்றும் இவர்கள் சம்பந்தப்பட்ட அரசாங்க அதிகாரிகளால் தேர்ந்தெடுக்கப்படுவார்கள் என்றும் ஒரு விசேஷ தீர்மானம் கொண்டு வரப்பட்டு நிறைவேற்றப்பட்டது.

''பியர்லெஸ்'' கம்பெனியின் முக்கிய நோக்கம் வீடு வீடாகச் சென்று மக்களுடன் நேரடியாகத் தொடர்பு கொண்டு தன் பணிகளை அவர்கள் பாராட்டும்படி செய்ய வேண்டும் என்பதுதான். சர்டிபிகேட் வைத்திருப்போர்களின் நலனுக்கு ''பியர்லெஸ்'' முக்கியத்துவமும் முதலிடமும் கொடுக்கிறது. இதனால்தான்



On 21st June MD donates Rs. 50,000/- to Chief Minister's Flood Relief Fund, West Bengal.

மக்களின் நம்பிக்கையையும் நல்லெண்ணத்தையும் ''பியர்லெஸ்'' அனுபவித்து வருகிறது. வங்கிகள் வியாபாரம், தொழில், விவசாயம், வாணிபம் முதலியவற்றுக்கு நிதி உதவி அளிக்கின்றன. ''பியர்லெஸ்'' கம்பெனியின் வியாபார நோக்கம் வங்கிகள் செயல்படும் விதத்திலிருந்து பூரணமாக மாறுபட்டது. ''பியர்லெஸ்'' கம்பெனி செய்வதுபோல் வங்கிகள் வீடு வீடாகச் சென்று சேவை செய்வதில்லை. சுய வேலை வாய்ப்புக்களுக்கான சூழ்நிலைகளை ஏற்படுத்திக் கொடுப்பதில்லை. இருந்த போதிலும் ''பியர்லெஸ்'' கம்பெனியின் நடவடிக்கைகளினால் ஏற்படும் பயன் வங்கிகளுக்கு ஓர் நல்ல ஆரோக்கியமான பயனைத் தருகிறது. சர்டிபிகேட் வைத்திருப்போர்கள் எல்லோரிடமிருந்தும் ''பியர்லெஸ்'' கம்பெனியினால் திரட்டப்பட்ட பணமானது அரசாங்கத்தின் பாதுகாப்பில் தேசிய மயமாக்கப்பட்ட வங்கிகளில் ஃபிக்செட் டிபாஸிட்டுகளாகவும் அரசாங்க பிராமிஸரி நோட்டுகளாகவும் வைக்கப்பட்டுள்ளன. இப்படியாக தேசிய மயமாக்கப்பட்ட வங்கிகளுக்கு டிபாஸிட்டுகள் சேர்த்துக் கொடுக்கும் ஏஜென்ஸியாக ''பியர்லெஸ்'' கம்பெனி நடந்து வருகிறது. மொத்தத்தில் ''பியர்லெஸ்'' கம்பெனியில் முதலீடு செய்வது எல்லாவிதமான முதலீடுகளையும் விட மிகவும் பாதுகாப்பானது. இதனால்தான் ''பியர்லெஸ்'' கம்பெனி மிகவும் குறைந்த வருமானம் உள்ள மக்கள் மனத்தில் ஒரு விதமான தெம்பை ஏற்படுத்த முடிந்தது. இவர்களுக்கெல்லாம் தாங்கள் மிகவும் கஷ்டப்பட்டு சேர்த்த பணம் மிகவும் பாதுகாப்புடனும் பத்திரமாகவும் காப்பாற்றப்பட வேண்டுமே என்ற ஆவல்.



**Peerless Golden Jubilee Brachy Therapy Unit at Cancer Centre and Welfare Home Thukurpukur, West Bengal.**

1984ம் வருடத்தில் சர்டிபிகேட்டுகள் காலகெடு முடிந்ததாலும் வேறு காரணங்களுக்காகவும் ரூ. 34 கோடிக்கும் மேல் ''பியர்லெஸ்'' பட்டுவாடா செய்துள்ளது. இது தவிர சர்டிபிகேட் வைத்திருப்பவர்கள் விபத்தினால் மரணமடைய நேரிட்டால் அவர்களுக்கு இலவசமாக நிதி உதவி அளிக்க Free Accidental Death Benefit என்று நேஷனல் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனியுடன் சேர்ந்து ''பியர்லெஸ்'' கம்பெனி உதவுகிறது. 1984ம் ஆண்டில் ரூ. 1.73 கோடி இதுபோல் அளிக்கப்பட்டிருக்கிறது. இப்படியாக இந்தப் பிரத்யேக வசதி சர்டிபிகேட் வைத்திருப்பவர்களுக்கு இலவசமாக ''பியர்லெஸ்'' கம்பெனியால் அளிக்கப்படுகிறது. அது தவிர நேஷனல் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனியும் தன் பங்குக்கு எந்த விதமான அதிகப்படியான வேலையில்லாமல் ஒவ்வொரு ஆண்டும் ஒரு கணிசமான தொகையை பிரீமியமாகப் பெறுகிறது.

**Peerless General Finance and Investment Co Ltd.,**
**Peerless Bhawan, 3. Esplanade East, Calcutta-700 069.**

# செய்தி சொல்லவா?



• கல்யாணி ராமசாமி.

இரவு பால் காய்ச்ச 'காஸை'த் திறந்தால் இல்லை. மறு சிலிண்டரை மாட்டினால் அடுப்பு எரிந்தது. சிலிண்டரை மூடிய பிறகும் அடுப்பு எரிந்து கொண்டிருந்தது! ஒரே 'காஸ்' வாசனை வேறு. 'லீக்' ஆகிறது எனப் புரிந்து கொண்டு உடனே 'எமர்ஜென்ஸி சர்வீஸ் செல்' லுக்குப் போன் பண்ணினேன். அரை மணியில் வந்தார்கள். சிலிண்டரில்தான் தவறு எனப் புரிந்து கொண்டு கையோடு கொண்டு வந்திருந்த புது சிலிண்டரை மாட்டிவிட்டுச் சென்றார்கள்.

இந்த இரவிலும் போன் செய்தவுடன் வந்து பார்த்தார்கள் என்றால் எங்களால் பாராட்டாமல் இருக்க முடியவில்லை. நீங்களும் குறித்து வைத்துக் கொள்ளுங்களேன்.

Emergency Service Cell,
Indian Oil Bhawan,
139, Nungambakkam High Road,
Madras-600 034.

Working Hours: 5.30 P.M. to 9.30 A.M.
Sundays and holidays: Round the clock
Ph: 474422.

— லக்ஷ்மி ராகவன்.

'டாப்கோ'விற்குச் சேர்மனாகத் திருமதி கல்யாணி ராமசாமியைப் போட்டவுடன் பல விதப் பேச்சுக்கள். பேசியவர்கள் எல்லாம் மூக்கில் விரல் வைக்கும்படி, 'டாப்கோ'வின் லாபக் கணக்கை முன்னேற்றிக் காட்டியிருக்கிறார் அவர். சென்ற வருடம் மட்டும் நிகர லாபம் 25 லட்சமாம். தமிழ்நாடு முழுவதுமுள்ள கிராமங்களில் எல்லாம் ஏழைப் பெண்களுக்குக் கோழி வளர்க்கக் கற்றுக் கொடுக்கப்படுகிறது.

"நாங்கள் சொல்லும் வழிகளில் கோழியைப் பாதுகாத்துக் கொடுப்பது ஒன்றுதான் அவர்களுடைய வேலை. மற்றபடி நல்ல வருவாய் அவர்களுக்கு" என்கிறார் கல்யாணி ராமசாமி.

* * * * *

திருப்பதி ஏழுமலையானைத் தரிசிக்க சிறப்பு வழி ரூ 25 வாங்குகிறார்கள் தேவஸ்தானத்தில். அது முடியாதவர்கள் ரத்த தானம் செய்தால் சிறப்பு வழியில் செல்லலாம் என்று கொண்டு வந்திருக்கிறார்களாமே, உண்மையா?

* * * * *

சென்னை ஆதர்ஷ் வித்யாலயாவில் 'சீனிவாசா கல்யாணம்' நாட்டிய நாடகம் நடந்தது. 250க்கும் மேற்பட்ட மாணவிகள் கலந்து கொண்ட மிகப் பிரம்மாண்டமான நாட்டிய நாடகம் இது. பள்ளி மாணவிகளுக்கு இத்தனை தேர்ந்த நாட்டியத் திறனா என்று ஆச்சர்யமாக இருந்தது.



# திருமண மலர்



ஆரிய வைசிய வசதியுள்ள அழகான பி. எஸ்ஸி பட்டதாரி 30/175/1600 பாங்க் பணிபுரியும் வாலிபருக்கு மிக அழகுள்ள 5' 3''க்கு குறையாத 25 வயதுக்குட்பட்ட அரசு அல்லது பாங்கில் பணிபுரியும் வசதியான பட்டதாரி பெண் அவர்களின் ஜாதகம் குடும்பவிவரங்களுடன் அனுப்பவும். பெட்டி எண்: 2755

ஆத்ரேய கோத்ரம் விசாக நக்ஷத்திரம் 29 வயது 5' 2'' உயரமுள்ள எஸ்.எஸ்.எல்.ஸி. (Music Teacher) பாலக்காட்டில் பணிபுரியும் பெண்ணிற்கு தகுந்த வரன் தேவை. பையன் பாலக்காட்டிலேயே பணி புரிய வேண்டும். குடும்ப விவரத்துடன் ஜாதகம் அனுப்பவும். பெட்டி எண்: 2756.

மத்திய அரசு பணியில் டெல்லியில் முதல் தர அதிகாரியாக பணியாற்றும் 34 வயது, 162 செ.மீ. மாதம் ரூ 2350 வாங்கும் சைவம், கார்காத்த வேள்ளாளர் சமூகத்தை சேர்ந்த பையனுக்கு குணமும்/படிப்பும் நிறைந்த பெண் தேவை. ஜாதி உட்பிரிவுகள் சம்மதம். ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 2757.

ஸ்ரீவத்ஸ கோத்திரம் தெலுங்கு பிராமணாள் முலக நாடு கேட்டை நக்ஷத்திரம். 27/170/1500 தனியார் நிறுவனத்தில் நல்ல வேலை பார்க்கும் பட்டதாரி வரனுக்கு அதே வகுப்பைச் சேர்ந்த குடும்பப்பாங்கான அழகுள்ள 24 வயதுக்குட்பட்ட வேலையில் உள்ள பட்டதாரி மணப் பெண் தேவை. ஜாதகத்துடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண்: 2758.

வன்னிய குல க்ஷத்திரியர் வகுப்பில், வசதி, கண்ணியமுடைய குடும்பத்தில், அழகு, நிறம், நற்பண்பு மிக்க, 33 வயது நிரம்பிய, எம்.பி.பி.எஸ். பிரம்மச்சாரி டாக்டருக்கு, அதே சாதியில் இறையுணர்வும், வசதியுமுடைய நற்குடும்பத்திலுதித்த, அழகு, இலட்சணம், நல்ல நிறம், அடக்கம், உயர் நற்பண்புகளுள்ள பட்டதாரி (டாக்டர் உட்பட) ஓரளவு படித்த, வேலைக்குச் செல்லாத, வீட்டு வேலைகளில் தேர்ந்த குடும்பப்பாங்குள்ள 25 வயதுக்குட்பட்ட மணமகள் தேவை. சகல விபரங்களுடனும் ஜாதகத்தோடும் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 2759.

பூர்வீகமான கௌரவமுள்ள சைவப்பிள்ளை. குடும்பப்பாங்கு நிறைந்த குண நலமுள்ள பெண். வயது 23, மாநிறம், நடுத்தரக் குடும்பம் அளவான சீர் வரிசைகள் செய்விக்கப்படும். இத்தகுதிக்கேற்ற மணமகன் தேவை. உடன் ஜாதகம், குடும்பம் மற்ற விபரங்களுடன் தொடர்பு கொள்ளவும். பரம்பரையான சைவப் பிரிவினர்களும் ஏற்றுக் கொள்ளப்படும். பெட்டி எண்: 2760.

தஞ்சாவூர் டவுனில் உள்ள கார்காத்தார் சுத்த சைவம் 25 வயது எஸ்.எஸ்.எல்.ஸி. படித்த 5' 2'' உயரமுள்ள மாநிறம் கொண்ட நல்ல அழகான குடும்பப்பாங்கான சத்துணவு ஆர்கனைசராக வேலை பார்க்கும் ஓரளவு வசதி படைத்த பெண்ணிற்கு மேற்படி இனத்தில் அரசு துறையில் அல்லது நல்ல கம்பெனியில் மாதம் 800க்கு குறையாமல் வேலையில் உள்ள 35 வயதுவரை உள்ள மணமகன் தேவை. எஸ்.எஸ்.எல்.ஸி. டிகிரி படித்துள்ளவர்களும் தொடர்பு கொள்ளலாம். கண்டிப்பாக வேலையில் இருக்க வேண்டும். பெட்டி எண்: 2761.

சைவ வேளாளர், 21 வயது, சிவப்பு நிறமுள்ள, அழகிய, குடும்பப்பாங்கான, இஞ்சினியரிங் பட்டதாரிப் பெண்ணுக்கு அதே மரபைச் சேர்ந்த, அழகிய நல்ல பணியில் அமர்ந்திருக்கும் பையன்களின் பெற்றோரிடம் இருந்து திருமண கடிதப் போக்குவரத்து எதிர்பார்க்கப்படுகிறது. பிறப்பு விபரங்களுடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 2762.

தெலுங்கு பிராமணாள் நியோகி காசியப கோத்திரம் வயது 25 உயரம் 5' 4'' விசாகம். மத்திய சர்க்காரில் வேலை பார்க்கும் பெண்ணிற்கு வங்கி, அரசுத் துறையிலுள்ள மணமகன் தேவை. பெண்ணிற்கு (7 ஆம் இடத்தில்) செவ்வாய் தோஷம் உண்டு. உட்பிரிவுகள் சம்மதம். பெட்டி எண்: 2763.

பிரஹசரணம், ஸ்ரீவத்ஸ கோத்திரம், மிருகசீரிஷம், 36 வயது, 165 செ.மீ. சிவப்பு நிறம், எஸ்.எஸ்.எல்.ஸி. என்ஜினீரிங் கம்பெனியில் வேலை ரூ 900 மாத சம்பளம். சென்னையில் வேலையில் உள்ள வேலை செய்யக் கூடிய குடும்பப்பாங்கான பெண் தேவை. No dowry. பெட்டி எண்: 2764.

சொந்தத்தில் வியாபாரம் செய்து மாதம் ரூ 1500/—க்கு மேல் வருமானம் பெறும் 27 வயது 5 அடி 10 அங்குலம் உயரம் உள்ள சதய நட்சத்திரம் ஆத்ரேய கோத்திரம் வரனுக்கு மாநிறம் உள்ள பட்டதாரி மணமகள் தேவை. வேலைக்குச் செல்லும் பெண்ணாய் இருந்தால் நலம். ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 2765.

23 வயது உள்ள பி. எஸ்ஸி. பி. எட். படித்து சென்ட்ரல் ஸ்கூலில் வேலை பார்க்கும் (வேலை மாற்றல் கிடைக்கக் கூடியது) பெண்ணிற்கு (தந்தை பிராமணர்; தாய் சைவ வெள்ளாளர்) மணமகன் தேவை. பெட்டி எண்: 2766.

இசைவேளாளர் வகுப்பைச் சார்ந்த 26 வயதுள்ள முதுநிலை பட்டதாரி மத்திய அரசில் உத்தியோகம் பார்க்கும் மணமகனுக்கு அதே வகுப்பைச் சார்ந்த மணமகள் தேவை. ஜாதகத்துடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண்: 2767.

பி. காம். 23 வயது, உத்திரட்டாதி, பாரத்வாஜம், பிரஹசரணம், பாங்கில் வேலை, எம். காமிற்கு விண்ணப்பித்துள்ள சிறிதே ஊனமுள்ள பெண்ணிற்கு போஸ்ட் கிராஜுவேட்/சமமாகப் படித்த நல்ல வேலையிலுள்ள, பரந்த மனப்பான்மை கொண்ட, நல்ல குடும்பத்தைச் சேர்ந்த, 30 வயதிற்குள்ளான அய்யர் வரன் தேவை. பெண் தையல், கைவேலை, வீட்டு நிர்வாகத்திலும் திறமை உள்ளவள். பெட்டி எண்: 2768.

சௌராஷ்டிரா குடும்பத்தைச் சேர்ந்த (ஸ்ரீவச்ச கோத்திரம்) பி.யு.சி. வரை படித்த வீட்டு வேலை, தையல் முதலிய கற்றறிந்த 29 வயதுடைய நல்ல குடும்பப் பெண்ணிற்கு நிரந்தர வேலையில் உள்ள அதே குலத்தைச் சேர்ந்த வரன் தேவை. ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 2769.

